உ

சிவமயம்.

சிவஞானவள்ளலார்

இருபதுசாத்திரங்களாகத்

திருவாய்மலர்ந்தருளிய

# வள்ளலார்சாத்திரம்.

வேதாந்தசித்தாந்த சமரசமாகிய

இந்நூலை

யாவருக்கு முபயோகமாகும் பொருட்டு

அத்வைதஞானபோதகராகிய

காஞ்சிபுரம்

## அருணகிரிசுவாமிகள்

பலபிரதிகளைக்கொண்டு ஆராய்ச்சிசெய்வித்த

பிரதிக்கிணங்க,

வித்வான்-திருமழிசை

## சிவப்பிரகாசையரவர்கள்

மாணாக்கராகிய

பாரிவாக்கம்

## மாசிலாமணிமுதலியாரவர்கள்

பிழையறப்பரிசோதித்துத்தர,

சென்னை:



மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1895.

(இதன்விலை-ரூபாய்-௧-அ-௦.)

வேலுமயிலுந்துணை.

# இப்போதச்சிட்டிருக்கும் சுத்தப் பிரதிகளாவன:—

| | | | |
|---|---|---|---|
| ரோகநிதானங்களைக்கூறும் வைத்திய ஜீவரக்ஷாமிர்தம் (சி-த-சுப்பிரமணியபண்டிதரியற்றியது.) | ௪ | 0 | 0 |
| யாழ்ப்பாணத்தகராதி | ௫ | ௮ | 0 |
| பாலகாண்டமூலமும் உரையும் | ௫ | ௮ | 0 |
| அடங்கன் முறை (மூவர்தேவாரம்) | ௫ | ௮ | 0 |
| பெரியபுராணம் (செய்யுள்) | ௫ | ௮ | 0 |
| திருவிளையாடற்புராணம் (செய்யுள்) | ௨ | 0 | 0 |
| கச்சியப்ப முனிவரருளிச்செய்த பார்க்கவ புராணமென்னும் விநாயகபுராண உபாசனகாண்டம் | ௨ | 0 | 0 |
| வமலராமாயனமென்னும் ஞானவாசிட்ட வசனம் | ௧ | ௮ | 0 |
| ஞானப்பிரகாசதீபிகை (௨-அண்டகோளபடங்கள்) | ௧ | ௨ | 0 |
| (ஆப்பவுண்டு) | ௧ | 0 | 0 |
| சிவதலமான்மியச் சுருக்கம் | 0 | ௧௨ | 0 |
| பாடுதுறை | 0 | ௧௨ | 0 |
| கந்தபுராணச் சுருக்கம். | 0 | ௧0 | 0 |
| திருவாசகம் (கலிக்கா) | 0 | ௬ | 0 |
| தாயுமானவர் (கலிக்கா) | 0 | ௮ | 0 |
| விஷ்ணுதலமான்மியச் சுருக்கம் | 0 | ௮ | 0 |
| காளத்திபுராணம் | 0 | ௮ | 0 |
| குமாரதேவர்சாத்திரம் | 0 | ௮ | 0 |
| நாலுசிவவாதக்கட்டளை (கொத்து) | 0 | ௯ | 0 |
| சடாட்சரமாறல் (௯-யந்திரங்களுடன்) | 0 | ௨ | 0 |
| திருத்தணிகைத்தலபுராணம் | 0 | ௨ | 0 |
| ஷை (தெலுங்கு) | 0 | ௨ | 0 |
| சிவானந்தபோதம் | 0 | ௨ | 0 |
| அஷ்டோத்திரம். | 0 | ௧ | 0 |
| இடும்பன்கவசம் | 0 | 0 | ௬ |
| புசண்டர் உபநிடதம் (௩௨) | 0 | 0 | ௯ |
| கந்தர்சஷ்டிகவசம் | 0 | 0 | ௯ |

இன்னும் அனேக தமிழ், தெலுங்கு, கிரந்த புத்தகங்கள் சிதம்பரம் மேற்கோபுரமண்டப புத்தகஷாப்பிலும், சென்னை, மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திலும், சென்னை, குஜிலிகந்தசுவாமி தேரடிக்கடுத்த புத்தகஷாப்பிலும் விலைகொடுத்து பெற்றுக் கொள்ளலாம்.

கோ-லோகநாதமுதலியார்,
உகூ-ெந. ஆயலூர் முத்தியாமுதலியார் வீதி, சென்னை.

உ
கணபதிதுணை.
சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

முதலாவது

## சத்தியஞானபோதம்

### பாயிரம்.

கணபதிகாப்பு.

சூத்திரம்.

பிளிறுமாதங்கப் பிரானடிவணங்குது ங்
கருவியங்கயிற்றைக் கருமெனத்துமி யா
மருவிணைப்பாகன் வாயின்மண்ணட்டா க்
கண்மனமறிவில் காமுகர்றுழை யா
வல்பகலிரண்டிலு மனுகாமுத் தி
நெடுவெணம்புக்கு நிலாவுதற்பொருட் டே.

தக்ஷிணாமூர்த்தி துதி.

கல்லாலின்புடை நல்லார்தொழுதெழ த்
சின்முத்திரையொடுந் தென்றிசைமூர்த்தியாய்த் த்
தனுநுமொழியைத் தடக்கையினேந் தி
யனுதிமுத்தன் யானெனவமர்ந்தா ங்
கறம்பொருளின்ப மருளியபின் றை
மொழியாமொழியான் முதாவீடளித் த
பெருந்தகைபோற்றுதும் பிறப்பறும்பொருட்டே (க)

நூற்சிறப்பு.

சத்தியஞானத் தமிழ்மாலியா னை
பன்னிருசமயப் பிணைகளைமுறியா த்
சைவத்தாமரைத் தடத்திடையா ழா
நவைதபுமறிஞர் நாமுறுகுல வா
வசத்தியபோதக் கவளமருந் தா
குவிவிரிவகன்ற கூடத்திருந்தவே. (உ)
ஐம்புலக்கதவ மடையாதடைத்து ப்
பயிலப்பயிலப் பராவமுதா கி
யாகமநூலோர்க் கவிரொளியா கி
யிம்மாநிலத்தி னிடர்கெடப்போந்த ன
சத்தியஞான போதத்தமிழே. (ங)

பாயிரம் - முற்றிற்று.

## பதியியல்.

உலகமுமுயிரு மொருங்குறப்படைத்தவ், வுயிரிடைநடனமோவாதுஞற்றினு, மாருயிரறியா வற்புதமென்கொல், லுலகமார்ந்தாண்ட னொளிகொடறிந்து, முலகமார்த்தாண்ட னுருவறியாவே. (௪)

உவனுவளதுவெனு முறைமுச்சுட்டாய்த், தோன்றிநின்றொடுங்குந் தொழிலுளவதனாற், பொன்விழுதனைய புரிசடைமுக்கட், சிவனுளனவனாற்சிவனுமுண்டா, யறிவினைமறைக்கு மவிச்சையுமுளவே.

பொன்பலபூணாய் மண்பலகடமாய், வருவதுநானே வருதலின்மை, தருபவனொருவன் முனுளனதுபோற், பொன்புனைகடுக்கையம் புண்ணியனுளனே. (௬)

நிரவயனிமலனிராமயனருளை, யொருவிடிலாவியுலவாக்காலம், போலாமாக்கை புணைகைப்பிடியா, யானெனதென்னு மிருஞ்செருக்கடையா, நமர்பிறரொன்னு ஞானமிக்குறுமே. (௭)

அகாயனசல னந்தரியாமி, யருளொடுங்கூடிக் கூடாவான்மாத், தியிரும்பொன்னச்சிந்துறுநதியெனத், திருவடிநிழலிற் சேருமன்றே.

மலர்மணமணியொளி மன்னியவண்ண, மாவிக்கியல்பு மயிமுகமாதலு, மாகாயம்போலாந்தரங்கண்டாங், கெழுமியெங் கணுமாய்க்கிளரொளிச்சடையனைப், பின்னியொன்றாகிப் பெறுமெனுநூலே. ()

நீரிடையுப்பும் பாரிடையப்புந், தாயிடைச்சூலுந் தளிரிடைத்துவளுந், தீயிடைவெம்மையுஞ் செறிந்தாங்கன்ன, வறிவிடையீசனமர்ந்தாங்குறலே. (௧௦)

அத்துவிதம்பெற வாங்காங்கிருப்பினு, மாருயிரறிவா லறிதரப்படாஅ, வூனக்கண்ணுக் கொளியாதொளித்து, ஞானக்கண்ணின் வெளிப்படுநாதன். (௧௧)

அவனைக்காணு மறிவன்பாலே, காந்தம்பசாசைக் கவர்ந்தனமான, வொன்றென்றுன்னு மூற்றையவ்வூழிப், பிரளயம்வாயிற்பெய்தனவன்றே. (௧௨)

பூவைத்தேடியும் பொருளைத்தேடியுங், காணுரனவில் கற்பத்தும்பே. (௧௩)

தனையிதுவென்னத் தான்கண்டாற்போற், பொருளியென்ன வறியாப்புவியே. (௧௪)

ஒன்றேயிரண்டோ வுபயப்பெருக்கோ, வறிதரப்படாவோ வவையவைமிலியை, யாழிவாய்ப்பட் டழிலவணக்குவால், காணுதியாயிற் காணுதிநீயே. (௧௫)

அறிவான்போந்த வறிவைவிழுங்கிக், குரைகடல்விழுங்கிய குறுமுனிமானச், செறிவான்சிவனெனத் தேறுதிநீயே. (௧௬)

குருட்டுச்சேரியிற் கோடியாதவர்க, ளுலவினும்பேசினு முறங்கினுமென்கொல், புலன்றெரிகாலைப் பொதுவாயினிற்பினும், பாடிகாவலிற் பட்டனவுயிரே. (௧௭)

வியாபகமாகி விரிக்குங்காலை, வியாபகமேலிடு நிறைவாமென்ப, வியாத்திசமநிறை வாகும்விளம்பின், வியாப்பியமொன்றின் மிடைந்தநிறைவே. (௧௮)

வியாபகங்கடலே வியாத்தியந்நீரே, வியாப்பியமுவரென விளங்கியநூலே. (௧௯)

வியாபகமீசன் வியாத்தியாருயிர், வியாப்பியமலமென வீங்கியநூலே. (௨௦)

வியாபகங்கதிரே வியாத்திகண்ணே, வியாப்பியமிருளென விதித்தனநூலே. (௨௧)

சமட்டிவியட்டி சாற்றுங்காலைச், சமட்டியாகாயந் தனித்தவியட்டி, குடவானெனக் கூறற்பாற்றே. (௨௨)

அமலன்சமட்டி யாருயிர்வியட்டி, யமலனோடொன்றி லாருயிர் சமட்டி, வியட்டியாக்கை விளம்புங்காலே. (௨௩)

ஐயெரிகாப்பனைத் தவித்திருப்பினு, மிருகாலடக்கி யொருகாணிற்பினுஞ், சேயிழைமாதரைத் தீரத்தணப்பினு, முடையைத்துறக்கினு முணவைமறப்பினு, மம்மர்செய்மாயை மழுங்காதம்ம, குருபரனோக்கிற் குழையுமன்றே. (௨௪)

மாரியைநோக்கும் வனப்புட்போலும், பாரியைநோக்கும் பாவலர்போலுங், கொழுநனைநோக்குங் குலமகள்போலுந், தேசியைநோக்குஞ் சீடன்றெரிவே. (௨௫)

கட்டுமையொத்துக் காற்றனைவரும், பக்குவர்க்கிரங்கிப் பரசிவனுருவத், திருவடியாலுந் திருநோக்காலு, மையலகன்ற மறைநூலாலும், பாவனையாலும் பரிசத்தாலும், யோகத்தாலு முணர்வாக்குமே. (௨௬)

பதியியல் - முற்றிற்று.

## பசுவியல்.

கட்டியகட்டோ கருமலக்கட்டு, பூட்டியதளையோ பொன்று நசைத்தளை, யடைத்தவச்சிறையோ வறிவிலாகச்சிறை, யெனிலுயிர்க்கள்வ னெங்ஙனமுயுமே. (க)

இருவினைமுசலம் யாக்கையுரலே, யதிற்பெய்பண்டம் போலாருயிரோ, நினைநினைதாக்க நெளிவபுழுங்கி, யடுவான்காலை யல்லற்பட்டு, விடுவான்காலை விம்மிதமுறுமே. (உ)

கொடிவிழியன்ன கொள்கையனாகி, யாசாபாசத் தார்ப்புண்டன்றே, தன்னைமுன்னிட்டுத் தான்பின்னாகி, மறந்துநினைந்து மதிகதனாகி, யாகம்பேணி யறிவைமறந்தாங், கிச்சைப்புலிவா யிடர்ப்படுமுயிரோ. (ங)

ஆணவமாதிய வாப்பையாவி, தானவிழ்க்கறியா தானேயவிழா, கரணமொடுக்கிக் கருதியகாலைச், சங்கரனவிழ்க்குந் தயைக்கையாலே. (ச)

சனுதக்குருட்டுச் சந்ததியிருட்டறை, வாய்ப்பட்டாங்கு மலவாய்ப்பட்டுப், பன்னாளழுங்கிப் பருவரலுழக்கு, மனாதிகேவலத் தாருயிரம்ம. (ரு)

கலைமதிச்சேகரன் கலைக்கையாலே, கட்டவிழ்ந்திடலுங் கருவியிற்புக்கிக், கோலங்கொண்ட வாறைக்குறைந்து, ஞாலங்காவலனெனுமுயிரோ. (சா)

கருத்தளைபுக்கிக் கண்முனர்த்தோற்று, வாணவப்பாம்பின் வாயகப்பட்ட, சீவத்தேரைச் செந்நெறிகாணாப், பன்னாளலம்வரல் பசுவினியல்பே. (எ)

விந்துமோகினி மானெனவிரிந்த, தத்துவக்காட்டிற் றனித்திடுமுயிரை, யாணவவேங்கை யொருபாலடர்ப்ப, மாயைக்குடாவடியொருபான்மயக்கக், காமியக்கடமா வொருபாற்கறுவ, விருவினைமலைப்பாம் பொருபாலிழுக்க, வாசையாமண்ணை யொருபாலறையச், குலமெனுமலி யொருசார்குரைப்பக், கல்விக்கானியா னொருசார்கவரச், சமயக்சூறை யொருசார்தாக்க, வவாவெனும்படுநீ யறிவைக்கொளுவ,மாயாவாத வனசரர்வெருட்ட, வின்னணமாவி யிடருறுங்காலை, யுயிரிடையொளிபுக்கிருந்தவொருவரந், தாயினுஞ்சாலத்தயா

நிதியிரங்கிக், கட்கடைவாளாற் காடறமாற்றலு, முட்கினையாவு முயி
ர்பிழைத்தன்றே. (அ)

ஆ இயல் உ-க்கு சூத்திரம்-கச.

பசுவியல்-முற்றிற்று.

---

பாசவியல்.

செயற்கையியற்கை தெரிக்குங்காலை, செயற்கையுயிர்க்குத் திரி
மலமென்னில், வெண்மடிக்கழுக்கு விரவுந்தன்மை, போலநீங்கிப்
புகுவனவாறுவே. (க)

இயற்கையுயிருக் கிருண்மலமென்னி, விருந்தைகறுப்பு மெழிற்
பால்வெண்மையு, மிடையில்விடாதென் றிசைத்தனர்புலவ, ராயினே
ஞேதி செயற்கையாமே. (உ)

மலமிலைமாயை மறைக்குமென்னின், மலகுணமறைத்தல் மா
யைவிளக்க, லளாபுக்கொடுங்கிய வரவின்வாலுள, தலையிலையெனுஞ்
சொல் சவலைச்சொல்லே. (௩)

மாயாதனுவின் மன்னியவான்மா, கன்மவிருப்பங் கருமல்மின்
றே, லேயாதொன்றை யிடருமுறுவே. (௪)

கன்மமயக்கக் கடுமலமறைப்ப,மாயைவிளக்க வருவனபோவன,
மூவகையுயிரு மும்மையவுலகிற், கறங்கெனச்சுழன்று கதிதொறுமடு
த்தவே. (ரு)

அவிரொளிபீசனே யன்னியனென்று, மிருள்புரியாக்கையை யா
னெனதென்று, மன்னியமடந்தையை யாருயிரொன்று, முன்றுறச்
செய்த வுயிர்மலமோரே. (௬)

குருவைக்கோறல் குருமொழிமறுத்தல், குருவைவணங்கக் கூச
ல்பிழைத்தல், குருப்பொருள்கவர்தல் மாயைக்கூறே. (௭)

செருவினுழைந்த தீமலத்தழுத்தன், முக்கரணத்தொடு முந்தி
டநூக்கல், செருக்கிகழ்கூறல் சிற்றினமருவல், குலம்பாராட்டல் கன்
மக்கூறே. (அ)

நிச்சயமறவி நீடஞ்ஞானம், விகற்பந்தீமை விரோதந்துஞ்ச,
லழிபொருள்வேட்ட லல்வழிச்சேறல், பொய்ம்மொழிகூறல் புணர்ந்
ததைவெறுத்த, லெனைங்கரில்லை யான்பரமென்ன, லச்சமிலாமை
யாணவக்கூறே. (௯)

ஈட்டலிரத்த விழுக்கையியற்றல், வேட்டல்வெறுத்தல் விதிவழிச்சேற, லறிவைமறத்த லாகம்பேண, லோதியவெட்டு முயிர்க்குணமென்ப. (க0)

அவாவறவீத லானவைகுயிற்றல், விருப்பறன்மகிழ்தல் விதிநெறியகற, லறிவைநினைத்த லாகமொறுத்தல், பன்னியவெட்டும் பதிகுணமென்ப. (கக)

மூதுரைவியத்தல் மொய்மலந்தணத்த, லடியரைக்காணி லகமுடைந்தழுதல், சில்லோர்குழுவைத் தீதெனத்தேறுத, லருச்சனைவணக்க மன்பிவையேழும்,பிறவாக்காலைப் பிணைந்தெழுகுறியே. (கஉ)

பசுநூலோதல் பழிமலங்கவர்தல், சான்றோர்க்கலக்கண் சாலவிளைத்தல், புல்லினஞ்சேர்தல் புகர்த்தொழில்புரிதல், கயவர்வணங்கல் கண்மனமேழும், பிறப்புழிமன்றப் பெருகுறுங்குறியே. (கங)

அருளெனுமலைமக ளவளொடுங்கலத்தல், முழுதுணர்ஞானமுழுவதுமுடைமை, முழுதனுக்கிரக முழுப்பரிபூரண, மறுதிமுத்தனவயவமிலாமை, விவகாரக்குறி யரற்கெண்குணமே. (கச)

அரிசடுவெருக்க மடலர்ச்சனையொடு, வணக்கம்பரவுயிர்க் கன்பகமதிநூல், பெருந்துறையெங்கு நிறைபொருள்பேண, லருளினக்கூட்ட மடுபவநடுக்க, மறைகுணமெட்டு மடியர்க்கமைத்தவே. (கரு)

கதிரிடைக்கலந்த கண்ணொளியொப்ப, வைவகையவத்தை யான்மாநீங்கிச், சிவத்தொடுங்கலந்த தேற்றமென்ப. (கசு)

நோக்காநோக்கை நோக்கநோக்க, நோக்காநோக்க நோக்குமன்றே. (கஎ)

பாசப்பகுப்பும் பஞ்சவிந்தியமு, மந்தக்கரணமு மைவகைப்புலனு, நீங்கநீங்கி நிறையிருள்கடந்த, பரையொடுமொளிவிப் பரைநிலைகடந்த, வறிவொடுங்கலந்த வான்மாப்பாச, சாலங்கடக்கு மென்னுஞ்சைவமே. (கஅ)

சேதனமான்மாவசேதனஞ்சீவஞ், சேதனமான்மாவறிவைமறையா, சேதனச்சிவனைச்சேர்தரிலாவி, சேதனனன்றிச்சித்தாபாசனே.

கருவிக்கான்மாக் கத்தாகருது, மறிவுக்கரனே யாயிற்கத்தா,கருவியையருளாற் கழற்றியவாவி, யருளாய்நிற்கில வனிவனுமே. (உ0)

சடத்திரணீப்பத் தனித்திடுமான்மாச், சோகம்பாவனை தொக்கியபின்றைக், கருடனைநினைப்பான் கடுக்கழன்றன்ன, வுபாதிநீங்கியுணர்வர்யினவே. (உக)

அறிவறியாமை யகலாதகன்ற, வறிவேசிவமெனு மாகமமுடிவே.

கண்கதிர்பண்டங் கழியிருள்கிரணம், விளக்கெனுமாறு நிரை நிரைவிளக்குறா, முயிரோயிறைவ னவனுலுறுபொரு, ளதனைமறைக்கு மாணவமதனைத், தணக்கவந்த தண்ணருளதனை, யறிவான்வந்த வாக்கையொடாறே. (௨௩)

இருவினையொப்பா லிருண்மலபாகம், மலபாகத்தின் மருவும் பாதம், பாதப்பதிவாற் பயிலுங்குரவன், குரவன்வரலுங் கொடும்பவ மேழுந், தனித்தனியோடுந் தலைகெட்டன்றே. (௨௪)

ஆக இயல் ௩-க்கு சூத்திரம்-௫௰.

பாசவியல்-முற்றிற்று.

---

## உபதேசவியல்.

---

ஊனுயிர்வேற்றை யுரைக்குங்காலை, யென்மாடென்மனை யென்பான்போல, வென்காலென்கை யென்பனவேறே, பருத்தேனினைத்தே னெனும்பன்மொழியா, னவயவமான்மா வாகுமென்னிற், சின்றுணின்று தேய்ந்தறமாய்தலி, னவயவமான்மா வன்றெனவுணரே. (௧)

ஐம்புலனறிதலி னவத்தைப்படுதலி, னுணராக்கால முடல்சவமாதலி, னருத்தாபத்தியி னுளனான்மா. (௨)

பிறத்தலுமிறத்தலும் பெருகலுஞ்சுருங்கலும், போதலும்வருதலும் புணர்வுநீக்கமு, மன்னமயத்துக் கடுத்தனவாதலி, னன்னமய கோச மான்மாவன்றே. (௩)

ஒருமரத்திற்பே யுண்டிலையென்ன, லைதிகம்மற வாக்கையகத்தே, யான்மாவுளவென் றறைந்தனனூலே. (௪)

கோசரமுடலம கோசரமான்மா, வவயவங்காய நிரவயமான்மா, வாதிகாய மனாதியான்மா. (௫)

பொய்ம்மைசடல மெய்ம்மைபுருடன், சொற்பிரமேயந் தோன்றியயாக்கை, யப்பிரமேய மான்மாவன்றே. (௬)

ஐம்புலவேட ராற்றனைமறந்து, கரணமென்னுங் கடிகுரன்ஞானி, சூழ்தரப்போதத் துணிவிற்பிடித்திட், டிரக்கமின்றிய வீமிசைக்குயிற்றிப், பிறவியங்கானிற் பேதுறுங்காலைச், சிவநரபாலன் றிருவுளத்திரங்கிச், சிவவேடு நீக்கித்தேற்றித், தன்னருள்காட்டித் தானாக்கும்மே.

ஈட்டலிரத்த விழுக்கையியற்றல், வேட்டல்வெறுத்தல் விநிவ ழிச்சேற, லறிவைமறத்த லாகம்பேண, லோதியவெட்டு முயிர்க்கு ணமென்ப. (கO)

அவாவறலீத லானவைகுயிற்றல், விருப்பறன்மகிழ்தல் விநிநெ றியகற, லறிவைநினைத்த லாகமொறுத்தல், பன்னியவெட்டும் பதி குணமென்ப. (கக)

மூதுரைவியத்தல் மொய்மலந்தணத்த, லடியரைக்காணி லகமு டைந்தழுதல், சில்லோர்குழுவைத் தீதெனத்தேறுத, லருச்சனைவண க்க மன்பிவையேழும்,பிறவாக்காலைப் பிணைந்தெழுகுறியே. (கஉ)

பசுநூலோதல் பழிமலங்கவர்தல், சான்றோர்க்கலக்கண் சால விளைத்தல், புல்லினஞ்சேர்தல் புகர்த்தொழில்புரிதல், கயவர்வணங் கல் கண்மனமேழும், பிறப்புழிமன்றப் பெருகுறுங்குறியே. (கங)

அருளெனுமலைமக ளவளொடுங்கலத்தல், முழுதுணர்ஞானமு ழுவதுமுடைமை, முழுதனுக்கிரக முழுப்பரிபூரண, மறுதிமுத்தனை வயவமிலாமை, விவகாரக்குறி யரற்கெண்குணமே. (கச)

அரிசவெருக்க மடலர்ச்சனையொடு, வணக்கம்பரவுயிர்க் கன்ப கமதிநூல், பெருந்துறையெங்கு நிறைபொருள்பேண, லருளினக் கூட்ட மடுபவநடுக்க, மறைகுணமெட்டு மடியர்க்கமைத்தவே. (கரு)

கதிரிடைக்கலந்த கண்ணொளியொப்ப, வைவகையவத்தை யா ன்மாநீங்கிச், சிவத்தொடுங்கலந்த தேற்றமென்ப. (கசு)

நோக்காநோக்கை நோக்கநோக்க, நோக்காநோக்க நோக்கு மன்றே. (கஎ)

பாசப்பகுப்பும் பஞ்சவிந்தியமு, மந்தக்கரணமு மைவகைப் புலனு, நீங்கநீங்கி நிறையிருள்கடந்த, பரையொடுமொளிவிப் பரை நிலைகடந்த, வறிவொடுங்கலந்த வான்மாப்பாச, சாலங்கடக்கு மென் னுஞ்சைவமே. (கஅ)

சேதனமான்மாவசேதனஞ்சிவஞ், சேதனமான்மாவறிவைமறை யா, சேதனச்சிவனைச்சேர்தரிலாவி, சேதனனன்றிச்சித்தாபாசனே.

கருவிக்கான்மாக் கத்தாகருது, மறிவுக்கரனே யாயிற்கத்தா,கரு வியையருளாற் கழற்றியவாவி, யருளாய்நிற்கில வனிவனுமே. (உO)

சடத்திரணீப்பத் தனித்திடுமொன்மாச், சோகம்பாவனை தொக் கியபின்றைக், கருடனைநினைப்பான் கடுக்கழன் றன்ன, வுபாதிநீங்கி யுணர்வர்யினவே. (உக)

அறிவறியாமை யகலாதகன்ற, வறிவேசிவமெனு மாகமமுடிவே.

கண்கதிர்பண்டங் கழியிருள்கிரணம், விளக்கெனுமாறு நிரை நிரைவிளக்குறா, முயிரோயிறைவ னவனுலுறுபொரு, ளதனைமறைக்கு மாணவமதனைத், தணக்கவந்த தண்ணருளதனை, யறிவான்வந்த வாக்கையொடாறே. (உ௩)

இருவினையொப்பா லிருண்மலபாகம், மலபாகத்தின் மருவும்பாதம், பாதப்பதிவாற் பயிலுங்குரவன், குரவன்வரலுங் கொடும்பவமேழுந், தனித்தனியோடுந் தலைகெட்டன்றே. (உ௪)

ஆ இயல் ௩-க்கு சூத்திரம்-௫௪.

பாசவியல்-முற்றிற்று.

---

## உ ப தே ச வி ய ல்.

---

ஊனுயிர்வேற்றை யுரைக்குங்காலை, யென்மாடென்மனை யென்பான்போல, வென்காலென்கை யென்பனவேறே, பருத்தேனிளைத்தே னெனும்பன்மொழியா, னவயவமான்மா வாகுமென்னிற், சின்றுணின்று தேய்ந்தறமாய்தலி, னவயவமான்மா வன்றெனவுணரே. (க)

ஐம்புலனறிதலி னவத்தைப்படுதலி, னுணராக்கால முடல்சவமாதலி, னருத்தாபத்தியி னுளனான்மா. (உ)

பிறத்தலுமிறத்தலும் பெருகலுஞ்சுருங்கலும், போதலும்வருதலும் புணர்வுநீக்கமு, மன்னமயத்துக் கடுத்தனவாதலி, னன்னமயகோச மான்மாவன்றே. (௩)

ஒருமரத்திற்பே யுண்டிலையென்ன, லைநீகம்மற வாக்கையகத்தே, யான்மாவுளவென் றறைந்தனநூலே. (௪)

கோசரமுடலம கோசரமான்மா, வவயவங்காய நிரவயமான்மா, வாதிகாய மனாதியான்மா. (௫)

பொய்ம்மைசடல மெய்ம்மைபுருடன், சொற்பிரமேயந் தோன்றியயாக்கை, யப்பிரமேய மான்மாவன்றே. (௬)

ஐம்புலவேட ராற்றலைமறந்து, கரணமென்னுங் கடிகுரன்ஞானி, சூழ்தரப்போதத் துனிவிற்பிடித்திட், டிரக்கமின்றிய வீமிசைக்குயிற்றிப், பிறவியங்கானிற் பேதுறுங்காலைச், சிவநரபாலன் றிருவுளத்திரங்கிச், சிவவேடு நீக்கித்தேற்றித், தன்னருள்காட்டித் தானுக்கும்மே.

இருவினையீட்டி யீட்டாவியல்புங், கருவியிற்றோய்நுந் தோயாக்கலப்புஞ், சிவனலனாகியுஞ் சிவனாந்தரமுங், காட்டியீட்டன கருணைக்கையே. (அ)

சிவனீயானா யென்னுந்திகழ்வுஞ், சிவனானானே னென்னுந்திறமுஞ், சிவனேயாயினு முளனெனுந்திருவுஞ், சிவனேகாட்டித் தெளித்தனனெனக்கே. (௯)

தசகாரியத்தைச் சாற்றுங்காலைத், தத்துவம்யாவும் சடமெனக் காண்டல், தனித்தனிச்செயலைத் தானறிந்திடுதல், லிவைமலநாமல மென்னத்தணத்த, றத்துவரூபந் தத்துவதெரிசனந், தத்துவசுத்தி நிரைநிரைதானே. (௧௦)

அறிவாகரனா னெனவறிந்துணர்தல், செறிபரப்பிரமம் யானெனத்தேற, லறைசிவனருளி லடங்காதடங்க, லுருவதெரிசனஞ் சுத்தியுமுயிர்க்கே. (௧௧)

சுகமயமீசன் சொரூபங்காண்ட, லச்சுகமயனை யாங்காங்கறிதல், லவனேதானா யச்சுகத்தழுந்த, லிவனவனாகி யின்பமேலிடுத லுருவந் தெரிசனம் யோகம்போகமே. (௧௨)

உயிருபலக்கலி னுணர்பானுப்படின், பஞ்சவிந்திரியப் பன்னிறங்கவரா, துணரொளியாவு முபலங்கவர்தலி, னொன்றேயாமென் றுணர்தற்பாற்றே. (௧௩)

தாடலைபோன்றரன் றன்னோடொன்றாய்க், கண்ணுங்கதிருங் கலந்ததோற்ற, மன்னமோக்கத் தமர்வனவுயிரே. (௧௪)

சந்திரியிறந்துஞ் சந்திரனிறவாத்,தன்மைச்சீவஞ் சிவனவன்பாலே, யேயுமண்ண வென்மனார்புலவர். (௧௫)

கன்னன்கௌந்தி புத்திரகதைபோற், சீவன்சிவத்தாற்சீவனீங்கி, மாசறுதிங்கண் மண்டிலம்போன்றாங், கவாவிறந்தொளிரு மதிசயம் பெறுமே. (௧௬)

கூன்மதிச்சடிலக் குன்றவிற்குளவி, மாலறியாத மலர்வாய்ப்பட்ட, சீடக்கீடந் திசைமுகனறியா, முடியாவின்ப முடிபெற்றனவே.

புலிமுதனாத மீறெனப்பொலிந்த, தத்துவசாலங் கடப்பான்கடந்திட், டறிவறியாமை யாங்காங்ககன்றா, ரருளொடுங்கூடி யரன்பாலொன்றா, யருளையுமறந்தபின் னறியகிலேனே. (௧அ)

ஆலம்பன்னிவனவனிராலம்பன், சுதந்தரமிலியிவனவன்சுதந்தரனே, சரீரியிவன சரீரியவனெனு, மலநீக்கத்தி லிவ்வழக்கின்றே. ()

அஞ்செழுத்துண்மை யறையுங்காலே, சிவாயநமவெனுந் திருவாக்கியத்திற், சிவமருளான்மா திரோதைமலமிவை, பாந்தனைநலியாப் பருவிடம்போன்றச், சிவன்றனைமறையாச் சிவனையறைக்கு, மதோமுகமாகி லறிவைமயக்கு, மூர்த்தமுகத்தி னுருவழிந்தனவே. ()

அருளம்பலத்தி லருளுருவாகிச், சிகாரம்பிரமந் திணைமலநீங்கி, யகாரவுயிர்தன் னடியிணைசேர்வான், திருநடஞ்செய்யுந் திருத்தில்லைக்கணே. (உக)

ஆ இயல் ௪-க்கு சூத்திரம்-எகூ.
உபதேசவியல்-முற்றிற்று.

---

## அணைந்தோரியல்.

### முதற்காண்டம்.

---

நஞ்சுமிழ்பகுவாய் நாகபூடணன், றேனவிழ்கமலச் சேவடிநீழன், மலவெயிற்கொதுங்கி மதிநலம்பெற்றோ, ராறுத்தன்மை யறைகுதுமெடுத்தே. (க)

வேழமயின்ற வெள்ளிலங்கனியோ, வழல்வாய்ப்பட்ட வாழைகொல்லோ, வாய்மூலவையா மாய்ந்தவான்கன்றோ, நனையவிழ்கொன்றை நாதனதருளா, லகக்காழற்ற வடியவர்மாண்பே. (உ)

மணிப்பாம்பிருளை மழலாயிற்றுயைச், செல்வன்சிறுமையைத் தியன்குளிரை, யாக்கனிரக்கை யறியாப்போன்று, மாதேவன்கழல் மன்னியவுயிரு, மறியாபிறப்பி னவத்தைப்பெருக்கே. (௩)

ஊமைகனவு மூழின்வரவு, மாழிநிலையு மகல்வானிறையும், பன்னியுண்மும் பதிதர்மயக்கு, மலநிலையகன்ற மாதவர்வரம்பு, மியம்புதற்படா வென்மனார்புலவர். (௪)

இரக்கமும்வணக்கமு மிறந்தவவாவு, மிணங்காதவரோ டிணங்காவிணக்கமுஞ், செம்மலாலயந்தொறுஞ் செல்லுந்திறமு, மும்மலமகன்ற முத்தர்பாலுளவே. (௫)

பூரணபோதப் பொருடானுசலி, னாரணமாக மமவர்க்கென்செயவே. (௬)

நினைப்புமறப்பு நீத்தமையாலே, யனைத்துங்கண்டுங் கண்டில ரன்றே. (எ)

பதியெனிற்பாசத் தோடுளையென்றும், பசுவெனின்முத்திப் படு தலுமின்றே. (அ)

சூனியபாச மாண்டொழிச்சோதி, நானதுவென்று ஞானமு மின்றே. (௯)

ஐவகைஞானத் தந்தரவான்மா, வாங்கவையிறப்பி னதுபரமான்மா. (௧0)

மாயைமயக்குங் கன்மவழக்கு, மூலமலத்தின் முடிவின்மறைப் புஞ், சுயம்பிரகாசக் கிலையெனுஞ்சொல்லே. (௧௧)

முன்னலுமுறைத்தலு முறுதொழிலுஞற்றலு, மாவிக்கிலைபொறி யறிவொடுமொய்தலி, னாக்கைமாட்டென் றறைந்தனர்புலவர். (௧௨)

சிதம்பரமாதலிற் சேர்விடமில்லை, யவனிவனாதலி னனுகலுமி ல்லை, யறிவுருவாதலி னாக்கையுமின்றே. (௧௩)

ஒன்றேயாதலி னுணர்பவனின்று, நானதுவாதலின் ஞானமுமி ன்றே. (௧௪)

சேர்வினமறிந்து சேர்வானொத்த, பன்னகபூடணன் பாதப் புணையா, னீந்தாக்கடலை நீந்திப்போந்தனர், தானாய்நின்ற தனிவான் கரையே. (௧௫)

சத்தஞ்சோதிடந் தருக்கங்காவியங், கொக்குவம்பாதங் கோதெ னத்தள்ளாப், பித்தர்க்கிந்நூல் பேசிற்பிழையே. (௧௬)

பிறவிக்கடலைப் பின்னிடமுன்னாற், புணைதாவென்னப் பொரு மியிரந்து, பன்னாட்கேட்கும் பக்குவநோக்கி, யன்னோர்க்கிந்நூலறை யலுமாமே. (௧௭)

கோறல்வெகுளல் குறைகொள்குணத்தன், றிருவருளில்லோன் செகமுகனையன், வழிபாடில்லோன் மந்தனிவர்க்கிங், கிந்நூலறையி னேழைக்குருவே. (௧௮)

ஆவிக்குரிய வறநூல்புகன்றபின், சத்தஞ்சோதிடந் தருக்கம் புகன்றவன், சுவர்க்கம்புகுத்தித் துயருறுநிரையப், பதிபுகுவிக்கும் படிறனன்றே. (௧௯)

* நாறுதிகமின்றி நுண்ணுணர்வாகி, யறுதிமுத்த னருளியவாக மந், தந்திரகலையெனச் சாற்றலுமாமே. (௨0)

* நாறுதிகம் - நறுதிகமெனமுதற்குறை.

மனாதிகளொடுக்கி மறைமுடிவுணர்ந்து, வழிபடன்மந்திர கலை யெனமதியே. (உக)

அறியாவறிவ னருளிற்கலந்தாங், காதவனொளிபுக் கழுந்தியக ண்ணாய், மும்மைப்பாழு முறைமுறைகடவா, வபாவப்பாழி னடங் காதடங்க, லுபதேசக்கலை யிஃதெனவுணரே. (உஉ)

கேவலஞானக் கிழவனானுடைப், பிள்ளைநாவரசு பேராரூர, னாதனவாக்கிய னருந்தமிழ்மூலன், சீவன்முத்தர் திருவாய்மலர்ந்த, நூல்பவநோய்க்கு நுண்ணியமருந்தே. (உங)

ஆ - சூத்திரம் - க00உ.

முதற்காண்டம்-முற்றிற்று.

---

## இரண்டாங்காண்டம்.

---

உடலெனும்பெண்ணை யுயிரெனுநாயக, னெந்நாள்விடுவ னெவ் வழியானே, விடுவதில்லை விதியுள்ளளவும், விதிசெயின்றேல் வெறுப் புற்றிடுமே, வெறுப்பும்விதியின் மேம்பாடாமே, யறிஞாலிடத்து மற்ற வரிடத்து, மாக்கைவெறுப்பு மகங்காரவானிய, முறுமெனக்கண்டாங் கொழிந்திடுமாறு. (க)

ஈசனென்போ னெவ்வணமவன்யா, ருலகமீன்ற வொருவனு மாயி, னங்கவனெங்குள னாலயத்துள்ளா, னாலயம்புகினு மவனைக்கா ணே, னாமரூப நட்டமாதலி, னீசனைக்காணே னென்செய்கேனே. ()

நீரிடையிருப்ப னிலத்திடையிருப்பன்,காற்றிடையிருப்பன் கன லிடையிருப்பன், விண்ணிடையிருப்பன் வெயிலிடையிருப்பன், மதி யிடையிருப்பன் மனத்திடையிருப்பன், றதியிடைநெய்போற் சங்க ரன்றானே. (ங)

உருவோவருவோ வுபயப்பெருக்கோ, காணும்பொருளோ கா ணாப்பொருளோ, கரியோசெய்யோ கைகாலுண்டோ, வுண்பதுமுற க்கமு முடையுமுண்டோ, கண்டவருண்டோ கழறுமினீரோ. (ச)

அதிதிதன்மைந்த ரலமருகாலைப், பிரமகீதையைப் பேசினவ னே, சிதாகாயத்திற் றிருவுருத்தாங்கி, மறவியைமுனிந்த வாதவ னே, வரன்முறையுலகம் வயின்வயினுதிக்க, நான்முகத்திருந்த

நான்மறையுணர்த்துந், றுயனிடத்தி லொளித்தவனெவனோ, வவனே பிரம மென்றறிமன்னே. (௫)

மூலமென்றழைத்த முனைக்கொம்பியானை, வருத்தந்தீர்ப்பான் வந்தவனெவனோ, தூணிலுமிருப்பன் றுரும்பிலுமிருப்பன் எனுமழு சொல்லுக் கெதிர்ந்தவனெவனோ, துகிலுரிகாலைத் துருபதன் மகட்கு, மாளாத்துகிலை வருத்தினனெவனோ, வருச்சுனற்காக வமரிடையிருந்தாங், குணர்மெய்ஞ்ஞான முரைத்தவனெவனோ, வவனேபிரம மென்றறிமன்னே. (௬)

கல்லாலின்கீழ்க் கடவுளாகிப், பொல்லாஞானம் புரிந்தவனெவனோ, மால்வரைவில்லாய் வலியவர்புரங்க, ளீரெழுவொருக்கி நின்றழுவரைச், சேவடிநீழலிற் சேர்த்தவனெவனோ, காலனைமாட்டிக் கவின்சிறுபாலன், மரணந்தவிர்ப்பான் வந்தவனெவனோ, வவனே பிரம மென்றறிமன்னே. (௭)

உளனேபிரம முயிரோபிரமம், வானேபிரம மறையோபிரம, நானேபிரம நாடுங்காலே. (௮)

வடிவோபிரம மதியோபிரம,மொழியோபிரம முணர்வோபிரம மறிவோபிரம மாயுங்காலே. (௯)

ஒருமலவழக்கு மிருவினைத்தொடரு, மும்மலச்செருக்கு நால்வகைவாக்கு, மைவகைப்பொறியு மறுவகைக்குற்றமு, மற்றுமலன்றி யறிவாகாயே. (௰)

கண்ணொளிகண்ணோ கதிரொளிகதிரோ, கண்ணுகாதே கதிருங் கண்ணுங், கதிராகாதே கலப்பின்வைப்பே. (௧௧)

வானேவளியோ மறுகனல்புனலோ, மண்ணோமதியோ வளவொன்றூழோ, யானேபரம்பொரு ளெட்டெம்பிரிவே, தானேயதுவே யது தானென்ப, மானுததுவும் வழக்கச்சொல்லே, நானேயதுவென நாடலுமாமே. (௧௨)

ஆ இயல் ௫-க்கு சூத்திரம்-௧௧௪.

இரண்டாங்காண்டம்-முற்றிற்று.

சத்தியஞானபோதம்-முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## இரண்டாவது

## பதிபசுபாசவிளக்கம்.

### பாயிரம்.

### விநாயகர்துதி.

விருத்தம்.

சித்தகக்கோயிலிலிருக்குஞ்செல்வனை
மத்தகக்கரிமுகத்தரசைவல்லபைப்
புத்தரவல்குலிற்புழைக்கையோக்கியுஞ்
சத்துமாலிலாதவன்றன்னைப்போற்றுவாம்.

### நடேசர்துதி.

(வேறு.)

முன்னைநான்மறைமுடியினில்வீற்றிருப்பவனை
யன்னையத்தனாயுலகெலாமமர்ந்திடுபவனை
யென்னையாளுடையிறைவனையிருண்மலங்கழியப்
பொன்னினம்பலத்தாடியபுனிதனைத்தொழுவாம். (௧)

### பரைவணக்கம்.

(வேறு.)

மூவர்க்குமுதற்பொருளாய்முத்தொழிற்கும்வித்தாகி
நாவிற்குமனத்திற்குநாடரியபேரறிவாய்த்
தேவர்க்குமுனிவர்க்குஞ்சித்தர்க்குநாகர்க்கும்
யாவர்க்குந்தாயாகுமெழிற்பரையைவணங்குவாம். (௨)

### கணபதிவணக்கம்.

நீங்காதமலமென்னுநீண்டமூக்குடைத்தும்பி
யாங்காரமெனுந்தறியையடியோடும்பறித்தோடத்
தூங்காதவொருகோடிசூரியர்கடோற்றமிக
ரோங்காரக்கயமுனியையுளங்கொண்டிருத்துவாம். (௩)

## சுப்பிரமண்ணியர்வணக்கம்.

(வேறு.)

அறுவிதசமயத்தோர்க்குமறுமுகசாமியாகிச்
செறிபரப்பிரமம்யானேயென்றுசின்மயிலிலேறிக்
குறுமுனிக்கருளிச்சிவக்குகைதொறும்வீற்றிருந்த
மறுவிலாக்குகனைப்போற்றிமாய்த்தனென்பிறவியெல்லாம். (ச)

## தக்ஷிணாமூர்த்திவணக்கம்.

(வேறு.)

வீராதனத்திலெழுந்தருளிமின்னிற்சிறந்தவேணியராய்த்
தீராவையந்தீர்த்தருளுஞ்சின்முத்திரைச்செங்கையினராய்ப்
பாரோர்விண்ணோர்பணிந்தேத்தப்பரமகுருவாய்ப்பலகாலு
மோராலினீழலமர்ந்தாரையுள்ளும்புறம்பும்வணங்குவாம். (ரு)

(வேறு.)

மூலமாயெவைக்கு மறியொணாவுருவாய் மும்மலங்களைந்தவர்க் கெளிதா, யாலபோசனஞ்செய் தழிவிலாதவனாயருமறைச் சிரத்தொ ளிர்பவனாய்ப், பாலலோசனனாய்ப் பசுதொறும்பதியாய்ப் பக்குவச் சனக னாதியர்க்கா, யாலமர்நீழ லமர்ந்துறைபவனை யகத்தவிருத்தி யின்படைவாம். (சு)

## குருவணக்கம்.

(வேறு.)

பாசமைந்தையுந்தனித்தனிப்பிரிந்திடநீக்கி
நேசமாகியவறிவுருநீயெனக்காட்டிப்
பேசுமேழ்வகைப்பிறப்புனக்கிலையெனப்பேசித்
தூசுநீக்கியசுயம்பிரகாசனைத்தொழுவாம். (எ)

(வேறு.)

தாரணியவர்க்குநாலாஞ்சத்திநிபாதமெய்த
ஆருணிபோலத்தோன்றியொருமொழியாலெனக்குக்
கோரணிகாட்டுமாறுசமயத்தின்கோளைநீக்கிப்
பூரணசொரூபங்காட்டும்புண்ணியன்பொலந்தாள்போற்றி. ()

## திருமூலர்வணக்கம்.

(வேறு.)

ஐயமாகடலாழ்ந்தவுயிர்க்கெலாங்
கையிலாமலகம்மெனக்காட்டுவோன்
மையறீர்திருமந்திரஞ்செப்பிய
செய்யபொற்றிருமூலனைச்சிந்திப்பாம். (கய)

## வியாசமுனிவணக்கம்.

துக்கசாகரத்துக்கொருதோணியாய்
பக்குவச்சுகனைப்பெறுபாக்கிய
தக்கவான்மதயாபரனாகிய
மிக்கவேதவியாதனைப்போற்றுவாம். (௧0)

## நூற்சிறப்பு.

(வேறு.)

பாவமகலப்பரிகாரவிதத்தைப்பகருஞ்சிலநூல்க
ளாவலோடுமறம்வளரவறங்கள்பகருஞ்சிலநூல்க
ளேவமில்லாமுத்தியினுமிரண்டேயென்னுஞ்சிலநூல்கள்
சிவபிரமவயிக்கியத்தைச்செப்புமிந்நூற்சித்தாந்தம். (௧௧)

(வேறு.)

புன்னூலாம்பரசமயப்பொய்ந்நூலின்மயங்குவரோ
செந்நூலாமருமறையின்சிரத்தொளிருமுபநிடத
நன்னூலினெறிநின்றநயமுணர்ந்தநாதாக்க
ளெந்நூலுங்கைவிட்டேயிந்நூலைப்பற்றுவார். (௧௨)

## அவையடக்கம்.

அங்கணீரிழுக்குடையதானாலுநதிகலக்கி
லங்கணீரொன்றிகழாரதுபோலென்புன்சொல்லும்
புங்கமறையொடுகலக்கிற்புன்சொலுநன்சொல்லாகும்
புங்கமலிசான்றோரும்புன்சொலிதென்றிகழாரோ. (௧௩)

## நூற்பெயர்.

(வேறு.)

பொய்ப்புவியதனினாரும்பொருக்கெனத்தோன்றிமாயு
மெய்ப்பிலாவுயிர்கட்கெல்லாமெளிதினின்ஞானமெய்த
வப்பணிசடையோன்முன்னரறைந்தவாகமத்திற்சொல்லு
முப்பொருள்விளக்கஞ்சொல்வேன்முக்கணனருளைக்கொண்டே. ()

பாயிரம்-முற்றிற்று.

## குருகாருண்ணியம்.

(வேறு.)

உலகமுமாயையுமொண்கண்மாசரு
நிலையலவென்றுணர்நெடியமாணவன்
கலையெலாந்தெரிந்தவன்கதியிருப்பினை
னலமலிகுரவனைநாடித்தேடுவான். (௧)

(வேறு.)

உலகநெருப்பைக்கடந்தொழியாஞானவுததிமடுப்பேனோ
விலகுகுடும்பத்துயர்நீங்கியெந்நாட்டுறவியாவேனோ
திலகமறையின்பொருளிதெனத்தேற்றுங்குரவன்காண்பேனோ
கலகவுடலப்பிணிதணந்துகடவுடனையான்காண்பேனோ. (௨)

(வேறு.)

மருவியவுடல்வெறுப்பும்வையகவெறுப்பும்வந்தா
லிருவினையொப்புமங்கெண்ணியிடுமெய்துங்காலைக்
கருமலபாகமுண்டாம்பாகத்தாற்கடிதிற்சேருந்
திருவருட்சத்திபாதஞ்செறிந்திடுங்குருவுமன்றே. (௩)

(வேறு.)

இனையவண்ணநினைந்திரங்குமெழின்மாணைக்கன்றனைப்புரப்ப
நினையுநினைவிலொளித்திருந்தநிமலனீங்காக்கருணையினான்
மனிதன்போன்றேயுண்டுடுத்தன்மருவிக்குருவாய்வரச்சீடன்
கனியுஞானக்கண்ணாரக்கண்டான்பவநோய்விண்டானே. (௪)

தேனுண்டளிகள்பண்பாடுஞ்செறிகற்பகநேர்குருந்தடிக்கீழ்
மானுமழுவுஞ்சதுர்ப்புயமுமணிக்கந்தரமுமறைத்தருளி
யீனமகன்றதிருவாதவூரர்க்காகவெழுந்தருளு
ஞானமுனியேயிவனென்றுதெளிந்தானவாற்பழிச்சினனே. (௫)

(வேறு.)

அப்பிரமேயபோற்றியாருயிர்த்துணைவாபோற்றி
யொப்பிலாவொருவபோற்றியுணர்பவர்க்கணியாபோற்றி
நட்பயலில்லோட்போற்றிநாதநாதாந்தபோற்றிச்
சுப்பிரமணியாபோற்றிச்சுயம்பிரகாசபோற்றி. (௬)

அற்புதவமலவேகவசிந்திதவகண்டாகார
நற்சிதம்பரவேகாந்தஞானநாதாந்தவின்ப
சொற்பிரகாசசுத்தசூனியதுரியாதீத
தற்பரவனந்தானந்தசற்குருநாதபோற்றி. (௭)

கண்ணிலாக்குழவிவெய்யகாரிருட்டறைபட்டாங்குத்
திண்ணியமலவறைக்குட்சிக்கியசிறியேன்றன்னை
நண்ணருஞானக்கையானுன்முகன்முதலோங்கத்
தண்ணளியாலெடுத்தசற்குருநாதாபோற்றி. (அ)

முத்தனைப்பகைவனொன்றுமூர்க்கனையுறவனொன்றும்
பெத்தனுயனேககாலம்பிறந்திறந்தெய்த்திட்டேற்குப்
பத்தியான்ஞானங்காட்டிஞானத்தாற்பரனைக்காட்டும்
சத்தியஞானநந்தசற்குருநாதாபோற்றி. (கூ)

பொச்சையாமுடலங்காட்டிப்பொறிபுலன்கரணங்காட்டி
யிச்சையாருயிருங்காட்டியெழிற்றிருவருளுங்காட்டி
யச்சமினிலையங்காட்டியகம்புறந்தானுய்க்காட்டி
சச்சிதானந்தங்காட்டுசற்குருநாதாபோற்றி. (க0)

ஆ திருவிருத்தம்-உச.

குருகாருண்ணியம் - முற்றிற்று.

---

## குரூபதேசம்.

அஞ்சினேன்பவத்துக்கென்னையாளெனவடியில்வீழ்ந்த
வஞ்சமில்சிடன்றன்னைவாவெனவருகில்வைத்துத்
துஞ்சிருள்கிழியப்பாததாமரைசிரத்திற்சூட்டி
யஞ்செழுத்தருளிப்பின்னரதன்பொருளறையலுற்றான். (க)

(வேறு.)

அஞ்செழுத்தினிலொருபுடையரும்பறியமரும்
வஞ்சமுற்றுளவொருபுடைபாசமாய்வதியுந்
துஞ்சலின்றியவொருபுடைபசுவெனத்துலங்கு
மஞ்செழுத்தினின்மும்முதலறிந்தவர்பிறவார். (உ)

(வேறு.)

பானுவாமிறையெழுத்துவதனொளிபனையெழுத்து
வூனமில்கண்ணேயாகுமுயிரொனுந்தனியெழுத்துத்
தீனமில்விளக்கேயாகுஞ்செப்பியதிரையெழுத்து
நானெனுமிருளேயாகுநவையுறுமலவெழுத்தே. (ந)

நகரமாகியசேரியைநஞ்செனவெறுத்து
மகரமாகியமயலெலாம்வேரொடுங்களைந்து
வகரமாகியவனத்தினிலிருந்திளைப்பாறிச்
சிகரமாகியநகரியையடைந்தனன்சீவன். (ச)

பாசமாகியவிரண்டையும்படிறெனத்தள்ளி
நேசமாகியவிரண்டையுநெஞ்சிடையழுத்திக்
காசநீங்கியகண்ணெனமுத்தியைக்காண்பா
யாசைநீங்கியநிலையிதுவிதற்கிலையையம். (ரு)

ஆ திருவிருத்தம் - உகூ.

குருபதேசம்-முற்றிற்று.

---

## தசகாரியம்.

தரைமுதனுதமீருய்த்தனித்தனிக்காண்டல்ரூபந்
தரைமுதனுதமீருய்த்தற்செயல்காண்டல்காட்சித்
தரைமுதனுதமீருய்ச்சடமயமென்றுகண்டு
குருபரனருளானீங்கல்சுத்தியாய்க்குறித்துக்கொள்ளே. (க)

தத்துவாதீதந்தன்னிற்சகசவாணவமலந்தா
னுற்றிடுமிதற்குச்சாக்கிரானெனவுயிர்க்குருபஞ்
சித்துருநானேயென்றுதேறலேதெரிசனந்தான்
முற்றுணரீசன்முன்னர்முகிழ்த்திடாதடங்கல்சுத்தி. (உ)

எங்கணுஞ்சிவனுளானென்றுணர்தலேயிறைவன்ரூப
மங்கவன்றொழிலெங்கண்ணுமறிதலேதெரிசனந்தான்
றிங்கள்வேணியனுேடொன்றல்சிவயோகமலர்மணம்போற்
புங்கநேயத்தழுந்தல்போகமென்றறையுநூலே. (ங)

ஆ திருவிருத்தம் - ஙஉ.

தசகாரியம்-முற்றிற்று.

---

## நின்மலசாக்கிரம்.

காய்கதிரிரவிமுன்னர்க்கண்செயல்டைந்தாற்போலத்
தூய்மனக்குரவனுேக்காற்றுகளறுபோதனுகிப்
பாய்பசுகரணமெல்லாம்பதிகரணங்களாகிப்
பேய்பிடியுண்டான்பாலன்பித்தன்போலொழுகுவானே. (க)

ஆ திருவிருத்தம் - ஙங.

நின்மலசாக்கிரம் - முற்றிற்று.

---

## நின்மலசொப்பனம்.

(வேறு.)

ஐம்பொறியாலைம்புலன்களாரத்தான்புசித்தாலுமறிவான்மிக்கோ
ரும்பர்பிரான்றிருவடிக்கீழுள்ளத்தைவைத்தங்கேயுறங்காநிற்பர்
நம்பனைநீத்தொருசோரநாயகனைவிருப்புற்றநாரிவேண்டு　　[றே.
மன்பவன்றன்பாற்கிடக்குமாக்கையிவன்பாற்கிடக்குமதுபோலன்

(வேறு.)

காண்பதுங்கேட்பதுங்கருத்துஞ்சொப்பனம்
பூண்பதும்புனைவதும்புசிப்புஞ்சொப்பனஞ்
சேண்படுநாகமுஞ்செகமுஞ்சொப்பனம்
வீண்படுமிவைக்கெலாம்விசுத்தனைரோ.　　(உ)

ஆ திருவிருத்தம் - ௩௫.

நின்மலசொப்பனம் - முற்றிற்று.

---

## நின்மலசுழுத்தி.

(வேறு.)

வழுத்துசாக்கிரசொப்பனமருவிடுகாறுஞ்
சுழுத்திவந்துறுமற்றையச்சுழுத்திவந்துற்றால்
விழுத்தசாக்கிரசொப்பனமேவிடாததுபோன்
முழுத்தபூரணசுழுத்தியுமுற்றுறுதன்றே.　　(க)

குடும்பபாரமுஞானமுங்கொண்டவனின்பு
மடங்கநீத்துயரறிவினையடைந்தவனின்பு
நடந்துறங்குவோனின்பமுநாண்மலர்ப்பாயல்
கிடந்துறங்குவோனின்பமுமானுமேகிளக்கில்.　　(உ)

ஆ திருவிருத்தம் - ௩௭.

நின்மலசுழுத்தி-முற்றிற்று.

---

## நின்மலதுரியம்.

(வேறு.)

முப்புரமென்பதிவ்வவத்தைமூன்றையு
மிப்புரமூன்றிலுமிருந்திடர்ப்படா
கப்புமுப்புரத்தையுங்கடந்தசீவனே
செப்புறுதுரியனைச்சீவன்முத்தனும்.　　(க)

(வேறு.)

மண்ணொடுமண்ணார்போனார்வளியொடுவெளியார்போனார்
தண்ணொடுதண்ணார்போனார்தழலொடுதழலார்போனார்
விண்ணொடுவிண்ணார்போனார்விளங்குறிவுருவாய்நின்ற
நுண்ணியநானேயெங்குநுழைந்திடாதிருக்கின்றேனே. (௨)

ஆ திருவிருத்தம்-௩௬.

நின்மலதுரியம் - முற்றிற்று.

---

## நின்மலதுரியாதீதம்.

இந்நிலைதுரியமாகுமென்றருமறைகள்கூறு
மிந்நிலைநின்றேமென்னுமெண்ணமுங்கடந்துபோனா
லந்நிலைதுரியாதீதமாகுமென்றறைவர்நல்லோ
ரந்நிலைதனக்குமேலோர்நிலையிலையறையுங்காலை. (௧)

(வேறு.)

போக்கிலைவரவிலைபுணரக்கையிலை
தாக்கிலையேக்கிலைசரிக்கக்காலிலை
மோக்குறழூக்கிலைமுகிழ்க்கக்கண்ணிலை
வாக்கிலைமனமிலையதீதவாழ்விலே. (௨)

(வேறு.)

நீரிடைமூழ்கினோனிறையவுண்டவன்
வாரமிறுமதன்போன்றுமாமய
நீர்சிவபோகத்திற்றிளைத்திருப்பர்க
ளாரவர்பெருமையையளக்கற்பாலரோ. (௩)

(வேறு.)

இத்துரியாதீதத்திலிமைக்கொட்டுமளவானாலு
முற்றகண்ணாடிதன்னிலுளுந்துருள்பொழுதானாலுங்
கைத்தலத்தாலாவின்பால்கறக்குறுங்காலமேனுஞ்
சித்துருவாகிநிற்போர்சின்மயவீகொள்பார். (௪)

ஆ திருவிருத்தம் - ௪௩.

நின்மலதுரியாதீதம் - முற்றிற்று.

---

## பதிவிளக்கம்.

நிராமயமாய்நிட்களமாய்நித்தியமாய்நின்மலமாய்ப்
புராதனமாயசஞ்சலமாய்ப்பூரணமாய்ப்புனிதமாய்ச்

சராசரமாய்ச்சாக்கியாய்ச்சத்தியமாய்ச்சித்துருவாய்
பராபரமாய்வெறுவெளியாயிருக்குமந்தப்பரமசிவம். (௧)

சொல்லாலுமனனாலுந்தொடராதசூக்குமமாய்ப்
பல்லான்றகேள்வியருமீதென்றுபகர்வரிதா
யொல்லாதபரஞ்சுடராயுயிர்க்குயிராயுண்மையா
யெல்லாமாயல்லவுமாயிருக்குமந்தப்பரமசிவம். (௨)

ஒன்றாயும்பலவாயுமுருவாயுமருவாயுங்
குன்றாயுமணுவாயுங்குணமாயுங்குணியாயு
நன்றாயுந்தீதாயுநானாயுந்தானாயு
மின்றாயுமுளதாயுமிருக்குமந்தப்பரமசிவம். (௩)

(வேறு.)

சிவனறிந்தருளுவன்சீவராசியைத்
சிவன்றனையறிந்திடாச்சீவராசிகள்
சிவனிலாவிடமிலைசெடசித்தெங்கணுஞ்
சிவனிலாவிடிலுயிர்செகமற்றில்லையே. (௪)

அவனவளதுவெனுமகிலபாசமே
யவனவளதுவெனவறைபவன்பசு
வவனவளதுவினையாக்குவான்பதி
யவனவளதுவறிலறிவைக்காணலாம். (௫)

அவனசைந்திடிலொருவணுவசைந்திடு
மவனசையாவிடிலணுவசைந்திடா
சிவன்சத்தியோடுறிற்செகம்விரிந்திடுஞ்
சிவன்றனித்திடில்விரிசெகமொடுங்குமால். (௬)

மன்னுமாலயனொடுவானும்வையமும்
பின்னமுமபினமும்பேசுஞ்சீவனும்
பன்னுமாணவமுதற்பாசம்யாவையு
முன்னுமிச்சிவத்திடையுதித்தொடுங்குமால். (௭)

(வேறு.)

பதியறிவாகுமத்தைப்பகுத்தறிவதுவேசிவ
னிதுவதுவோவென்றுன்னற்கிடமதேபாசமாகு
மதுவிதுவெனுஞ்சுட்டற்றலறிவறிவாகிநிற்கு
மதுவிரிகொன்றைத்தாரான்மலரடிகாணலாமே. (௮)

பதிபசுபாசமூன்றும்பகுத்தறிந்தவரோமுத்தர்
பதியொன்றும்பற்றாதாகும்பசுவொன்றைப்பற்றிநிற்கும்

பதிமுகந்தெரியாவண்ணமறைப்பதுபாசமாகும்
பதிகுருவானஞான்றுநீங்குமப்பாசந்தானே. (கூ)

கண்பலபொருளைப்பற்றிக்கதிரினையிழந்துநிற்குங்
கண்பலபொருளைப்பற்றாதாயிடிற்கதிரைக்கூடும்
புண்புலன்பற்றித்தாவிபுனிதனைப்பிரிந்துநிற்கும்
புண்புலன்பற்றாதாயிற்புனிதனைச்சேருமன்றே. (க0)

பளிங்கியமானஞ்கும்பகலவனிறைவஞகும்
பளிங்கினிற்பஞ்சவன்னம்பார்க்கிலேம்புலன்களாகும்
பளிங்கினில்வன்னம்பற்றும்பகலவன்பக்கஞ்சாரிற்
பளிங்கினில்வன்னம்பற்றாவுச்சியிற்பானுவந்தால். (கக)

செம்புயிராகுமந்தச்செம்பினிற்களிம்புபாசஞ்
செம்பினிற்களிம்புபோனற்செம்பொனுமாறுபோல்
நம்பனார்ஞானத்தாலேநாயெனுமலம்போம்போனு
னம்பனாராவனென்றுநான்மறைசொல்லுமன்றே. (கஉ)

சாக்கிரசொப்பனங்களிரண்டையுந்தாண்டிப்போனாற்
சூக்கமாஞ்சுழுத்திவந்துதொல்லிருளாகிமூடு
மாக்கமுமழிவுமில்லாவறிவினலதுவும்போனாற்
போக்கொடுவரவுமில்லாப்பூரணப்பொருள்வந்தெய்தும். (கங)

காணுறுபுலன்கள்போகிற்கரிசுறுமனம்போம்போனு
லாணவம்போகும்போனலாருயிர்ப்போதம்போகுஞ்
சேணுறுமொளிக்குமேலாஞ்சிவப்பிரகாசந்தோன்றும்
மாணனேயிதுவேமுத்திநிலையெனமதித்திடாயே. (கச)

மன்னையுமறந்துமிக்கவனசரவடிவமாகித்
தன்னையுமறந்திருந்ததனயனைப்போன்றுநீயு
மென்னையுமறந்தைம்போதவெயினர்தம்வடிவமாகி
யுன்னையுமறந்தாய்நீயென்னுருவெனவுணர்ந்துகொள்ளே. ()

பளிங்கினில்வன்னம்பற்றும்பகலவன்பக்கஞ்சாரிற்
பளிங்கினில்வன்னம்பற்றுபகலவனுச்சிசாரில்
விளங்குயிரிறையைக்காணுவேலையிற்புலன்கள்பற்றும்
விளங்குயிரிறையைக்காணும்வேலையிற்புலன்பற்றுவே. (கசு)

(வேறு.)

அறிவறியாமையையகன்றவாருயி
ரறிவறியாதபேரருளைக்கூடிடிற்

பிறிவறியாதவெம்பிரானுட்கொண்டுபோய்ப்
பிறிவறியாவகைவைக்கும்பின்னையே. (கஎ)

(வே று.)

மாசறப்படித்தானேனுமயலறத்தெளிந்தானேனு
மாசறத்துறந்தானேனுமஞ்செழுத்துணர்ந்தானேனு
மீசன்வேறியான்வேறென்னுமிருமையுங்கழலானாகிற்
பாசமுங்கழல்வதின்றாம்பதித்துவந்தானுமின்றே. (கஅ)

தத்துவமுப்பத்தாறுந்தனித்தனிகளைந்துநீக்கின்
மொய்த்திருண்மூடமெத்தைமுன்னவனருளால்விட்டின்
மெய்த்ததன்னுருவநன்றாய்விளங்குறுமதற்கப்பாலே
சுத்தமெய்ஞ்ஞானமேனிச்சோதிதானாயிருப்பன். (ககூ)

வேறுவேறாகியோடும்விரிநதிக்குலங்களெல்லாங்
கூறுமுன்னீரிலொன்றாங்கொள்கையதாகுமாபோல்
வேறுவேறாகிநின்றவிதிவழிச்சமயமெல்லாங்
கூறுமுத்தியினிலொன்றாங்கொள்கையதாகுமன்றே. (உ0)

ஆ திருவிருத்தம் - கூகூ.

பதிவிளக்கம்-முற்றிற்று.

---

## பசுவிளக்கம்.

பாசத்தாற்பசுவெனப்பகரப்பட்டன
பாசந்தானிரிதரப்பதியெனப்படுங்
காசத்தாற்குருடெனக்கழறப்பட்டன
காசந்தானிரிதரக்கண்ணெனப்படும். (க)

ஐம்பொறிவனத்திடையாவிவேடனார்
வம்புறுபோதவில்வளைத்துமாழ்குறுந்
துன்பெனுங்கணையினைத்தொடுத்துமெல்லநின்
றின்பெனுமறியினமிரியவெய்யுமால். (உ)

(வே று.)

எண்ணரியவான்மாக்க ளிலக்கணங்கூறுங்கா லிருண்மலத்தான் மூடராயிறந்துபிறந்துழல்வார், புண்ணியத்தாற்பாவத்தாற் புண்ணிய பாவத்தாற் பொன்றுநேரருதனை போக்குவரவுடையார், நண்ணிய விஞ்ஞானகலர் பிரளயாகலர்க ணவில்சகல ரொன்றிரண்டு மூன்றுமலமுடையார், தண்ணிலவுமதிமுடியா ரருளுதயகாலஞ் சார்ங்குசித்த ராய்மலத்தைத் தணந்துசிவமாவார். (ந)

எல்லாமுநானேகாணென்விடவேறில்லை யெனுமலத்தாலார்ப் புண்டிங் கேந்திழைபொன்பூமி, நில்லாதபொருளெல்லா நிலையெண வேகருதி நின்மலனைத்தனைவினையை நினையாதுமயக்கும், பொல்லா தபுலன்வழியிற் றிரிந்துதமோறிப் புகழிகழானல்வினையுந் தீவினையு ம்பொருந்தி, யெல்லாதயோனிதொறும் பிறந்துபிறந்திறப்பா ருமை பாகனருள்கிடைக்கி லிரண்டினையுமொழிப்பார். (ரு)

(வே று.)

அன்பனைவிட்டுமற்றோரவலனைவிரும்பிப்பின்னர்
துன்புறுவார்கள்போலச்சுயம்பிரகாசனுரு
நம்பனைவிட்டுப்பொல்லாஞாலத்தைவிரும்பிப்பின்னர்
துன்புறுவார்களந்தத்துயரினுக்கொழிவுமுண்டோ. (சு)

(வே று.)

ஆவாவென்னவாச்சரியமரியஞானந்தனைநீத்திட்
டோவாமாயாமோகிதராயுணராக்கனவினிலைபோன்ற
மூவாக்குடும்பப்பாழ்நிரையந்தன்னின்மூழ்கிமூர்ச்சித்துப்
பாவவயத்தாற்பாவங்களீட்டியதையேபண்ணுவார். (சு)

(வே று.)

எஞ்ஞான்றுகுடும்பபாரமேகுமென்றிரங்கல்வேண்டா
மஞ்ஞானமெம்மட்டுண்டோவம்மட்டுங்குடும்பபார
மெய்ஞ்ஞானமுண்டேல்முத்திமேவுதற்கையமில்லை
சுஞ்ஞானத்தாலஞ்ஞானஞ்சுருங்குமந்நிலையேமுத்தி. (எ)

(வே று.)

உண்ணலுறங்கல்பற்றல்விடலுலகந்தழுவல்வரல்போத
லெண்ணுமிவைகளான்மாவுக்கியற்கையென்னிலிவனுக்கெங்
கெண்ணில்கோடிபிறவியினுமிம்மைக்குடும்பந்தனினின்று
பண்ணற்கரியபரமபதமோக்கமில்லைபகருங்கால். (அ)

(வே று.)

சீவனுமிந்தவான்மாவியற்கையைத்தெரிக்குங்காலைக்
கேவலன்சுத்தன்சாந்தன்சூக்குமன்கிளர்சகுதன்
பாவமில்சர்வானந்தன்பகரருஞ்சர்வசாக்கி
மேவுசின்மாத்திரத்தன்மிகுசுகசொரூபனுமாம். (கூ)

(வே று.)

யாதாமொருவனிவ்வண்ணமிலகுமான்மசொருபத்தைப்
பேதமாகவறியுமவன்பேசினுன்மவபகாரி

யோதுசோரனாலெந்தப்பாவமுனுற்றப்படவில்லை
வேதமெல்லாமுறையிடினுந்தெளியாரையமேலிட்டோர். (௧௦)

(வே று.)

புண்ணியபூமியிற்பிறந்தும்பூசுரப்
பண்ணவனாகியுமங்கைபாறியுங்
கண்ணியகுடும்பமாங்கடலைநீந்திடான்
றிண்ணியபிரமபகாரிதேறிடே. (௧௧)

(வே று.)

ஆகையானானமுயற்சியினாலுமவிழ்ந்தபோராதரவாலுங்
கோகனகத்தாடருகுரவன்பாற்குறைவறுபத்தியினாலும்
மோகமேவிளக்கும்பிரகிருதியின்றன்பாவனைமுழுதையுந்தணந்திட்
டேகமாஞ்சிவனேநானெனச்சிந்தித்திடரொழிந்திருந்திடத்தகுமால்.

(வே று.)

முரசதிர்தானைவேந்தர்முன்னர்நீநானென்றோதி
லரசனுமிகச்சினந்தேயாக்கினைபலவுஞ்செய்வன்
விரைசெறிகொன்றைமாலைவேந்தன்முன்னீநானென்னிற்
றிருவுளமகிழ்வனென்றாலியாரிதைத்தெளியவல்லார். (௧௩)

(வே று.)

யாவனொருவன்றன்னிடத்திலிருக்குஞ்சிவனைவிட்டயலே
மேவியிருக்குஞ்சிவனைநனிபூசிப்பவன்றன்வியன்கையிற்
பாவியிருக்கும்பாயசத்தைவிட்டுக்கூன்கைபரந்தோடித்
தூவுந்துளியைநாநுனியாற்றுய்க்குமவனேசொல்லுங்கால். (௧௪)

(வே று.)

சகலபூதங்கடோறுஞ்சாக்கியாய்விசுத்ததேசாய்த்
தருஞானதேகியாகித்தங்கியபரமான்மாவை
யகமுகமாகவுள்ளும்புறம்புமொன்றாயறிந்து
பகவறயாவன்பார்ப்பானங்கவன்முழுதும்பார்த்தான். (௧௫)

(வே று.)

ஆக்கைமேவிமேவானையணுவாய்மகத்தாய்விபுவாகிச்
சூக்கவுருவாய்வியாபகனைச்சொலுமானந்தசொரூபனை
வீக்குநாசரகிதனைவிளங்குஞ்சிவனையுள்ளபடி
நோக்கியறிந்துதிரனானேனைத்தாஞ்சோகமடையானால். (௧௬)

(வே று.)

வானவர்தமக்குஞ்சீங்காமயறருபேதமேதூ
வானவஞ்ஞானஞானவலியினூற்சிறைதீர்ந்தபின்னர்
தீனமார்சிவனென்றுஞ்சிவனென்றுமில்பேதத்தை
யீனமார்புந்தியாலேயெவன்பண்ணப்படுவான்கொல்லோ. (கஎ)

(வே று.)

ஆன்மாசுத்தன்சதாசித்தனபூரியாவின்பச்சுகசொருப
ஞன்மாசெஞ்சொற்பிரகாசனஞ்ஞானத்தாலசுத்தனைப்போ
லான்மாதோன்றப்படுகின்றானருவமாகிநிரவயமா
மான்மாஞானத்தாற்சுத்தனுகிவிளங்கப்படுகின்றான். (கஅ)

யாவனொருவனஞ்ஞானச்சேற்றைஞானவிரும்புனலா
லோவக்கழுவுவானவனேயொளிசேரமலசதாசுத்தன்
றாவுகருமதற்பரனுய்த்தபனனெழுமன்றரியாரு
யாவலோடுங்கங்கைமுதற்படிந்தானேனுமசுத்தனே. (கக)

ஞானநீராற்சுத்தனுய்நண்ணுங்கிருதகிருத்தியனாய்
ஞானவானாயமர்ந்திருக்கும்யோகிக்கிந்தஞாலத்தி
லானகருமமனுவேனுமில்லையுண்டேபோற்றோன்றின்
ஞானந்தன்னையுள்ளபடியறிந்தஞானியலனவனே. (உ0)

(வே று.)

பாவமில்பரமாத்துமஞானர்க்கு
மூவகையுலகத்தினுமொய்ம்பிறு
லாவதோர்பயனென்றிலையாங்கவர்
சீவன்முத்தரெனச்செப்பும்வேதமே. (உக)

ஞானமென்னுமோர்நல்லமிர்தத்தைநீத்
தீனமாயையினிச்சையிழுதையோர்
தீனமார்குடும்பக்கடல்சிக்கியே
யூனமாய்ச்சுழன்றேயுழல்வார்களே. (உஉ)

யாவனாயினுமியாதோர்பொழுதினி
லாவிஞானவமுதச்சுவையினை
யாவலோடுமருந்தினனாயிடில்
யாவையும்விட்டதனையேயெய்துவான். (உங)

அரியஞானவமுதச்சுவையைநீத்
திரியுமைம்புலவின்பங்கடெய்ப்பனே

லரியஞானவமுதச்சுவையையுமுன்
பருகப்பட்டவனன்றுபகரிலே. (உ௪)

பண்டிதரிந்தப்பாரைமுழுதையுந்
தொண்டிஞன்மசொரூபத்தறிவர்கள்
மண்டஞ்ஞானமறைப்புண்டவரஃ
தண்டிச்சங்கரனையறியார்களே. (உ௫)

(வே று.)

அசரீரியாய்மகத்தாயமர்ந்துளவமலவான்மா
வசைசுகமருவானுகிமாண்டுறுகிலேசனுகி
யிசைபிரசனனன்மாவாயிருந்திடப்படுமன்றேனைப்
பசையறுஞானவானன்முத்தனென்றுரைக்கற்பாலார். (உ௬)

ஆகையாற்றேகிகட்கேயளவறுதுயரமெல்லா
மூகவஞ்ஞானத்தின்கண்மூலமாயிருக்குமன்றே
யேகஞானத்தஞ்ஞானமிறக்குமற்றியற்றலோவாச்
சோககன்மத்தஞ்ஞானஞ்சுருங்குமோசுருங்கிடாவால். (உஎ)

ஞானத்தைத்தவிரப்பாவக்குழாங்களைநாசஞ்செய்யு
ஞானம்வேறில்லையிந்தஞானம்போனலனென்றில்லை
ஞானசாதகத்தையன்றிநவையுறுகும்பம்போக்கு
ஞானசாதனம்வேறில்லநன்னெறியறிமானுக்கா. (உஅ)

பாதகமனைத்துநீங்கும்பக்குவசித்தத்தார்க்கு
மேதருஞானத்தின்கண்விருப்பமும்வியப்புமுண்டாம்
பாதகத்தாற்கட்டுண்டபதிதசித்தத்தார்க்கெல்லா
மேதருஞானவார்த்தைகிடைக்குமோவிளம்புங்காலே. (உகூ)

(வே று.)

ஆன்மாநித்தன்சருவபரிபூரணனரியகூடத்த
னான்மாதோடமிலியேகனுகியிருந்தும்பிராந்தியினு
லான்மாபின்னம்போற்றோன்றப்படுவனரியஞானத்தா
லான்மாபின்னம்போற்றோன்றப்படானென்றறைந்தானமுலாடி. ()

(வே று.)

ஒருவனுக்கிப்பிறப்பிலுரியதோர்
பரமவான்மசொரூபம்பகைற
விரவுமேலவன்மேலாம்பராபர
வரியமுத்தியடையப்படுவனால். (௩க)

எந்தயோகிக்கெப்போதுமனநிலே
யுந்துஞானவொளியசைதன்னிய
மிந்தஞாலமெங்கெங்கும்விளங்குமேற்
சந்தமுத்திதானுயேவிளங்குமால். (௧௨)

எப்போதுதன்சொரூபமெதார்த்தமா
யொப்பநோக்கியுலகங்களியாவையுங்
கப்புமாயாமயமெனக்காண்பனே
லப்போதேயச்சுகவடிவாயிருன். (௧௩)

எப்போதுந்தன்னிடத்திற்சருவமுந்
தப்பலின்றியேதான்சருவத்திலு
நுட்பஞானநோக்காலுேக்குவானெனி
லப்பொதேயப்பிரமமடைவுனல். (௧௪)

எப்போதியாதாமொருவனுக்கிப்பவெ
வெய்ப்புலாம்பிணிக்கேகமூலிக்கையாம்
பெட்பின்மேலாம்பிரமஞானம்பெறி
லப்பொழுதிவனேசிவனுயிருன். (௧௫)

(வேறு.)

செந்தழல்விளக்கதுசிறியதாயினு
மந்தகாரத்தினையகற்றுமாறுபோற்
சிந்தலில்ஞானமுஞ்சிறியதாயினு
மந்தமில்பாவங்களனைத்தும்போக்குமால். (௧௬)

ஒளிவளர்பெருநெருப்புலர்ந்தகாட்டமுந்
தளிர்பசுங்காட்டமுந்தகிக்கும்பான்மைபோ
னளிர்மதியனையவோர்ஞானவங்கியுங்
களவிருவினையையுங்கனைத்தில்வாட்டுமால். (௧௭)

மந்திரம்வல்லவன்வலியபாம்பொடு
தொந்தனையாயினும்விடந்தொடப்படா
னிந்தியப்பாம்பொடுவிணங்கிநிற்பினு
நந்தியஞானியுநவைதொடப்படான். (௧௮)

அம்புயபத்திரமறலின்மூழ்கியும்
மைம்புனலாலொருபந்தமின்மைபோ
னம்பனையகத்தவிசிருந்துஞானியு
மைம்புலன்மூழ்கியுமார்ப்புறுனரோ. (௧௯)

(வேறு.)

மருந்திறன்மந்திரத்தான்மன்னுயிர்ச்செருக்கும்பொல்லா
வருந்தியவிடநசிக்கப்படுதல்போலமலயோகம்
பொருந்தியஞானிகட்குப்பொருவில்பாவங்களெல்லாந்
திருந்தொருகணத்திறக்குந்தீர்பவமுடையமாறு. (சo)

(வேறு.)

வேதமெய்ம்மொழிகண்டுவிமலரா
யாதியான்மநிலையறிஞானியை
நோதகச்சொலித்தூடிக்குநொய்யவ
ரேதமாநரகுக்கிரையாவரே. (சக)

(வேறு.)

ஞானியேபுருடோத்தமனாதலால்
வானநாடரும்வந்துவணங்குவா
ரேனநாடருமேவலினிற்பர்காண்
ஞானிபூச்சியமென்பதற்கையமோ. (சஉ)

(வேறு.)

நல்லியமொழிந்தானேனுந் நல்லுயமுடையானேனுங்
கல்வியில்மூர்க்கனேனுங்கற்றுணர்பெரியோனேனு
மொல்கலில்ஞானயோகப்பயிற்சியையுடையோனானு
னல்லவனவனேயார்க்கும்பூச்சியனாடுங்காலே. (சந)

(வேறு.)

பேதாபேதமகன்றொழிந்தமாறுவின்னும்பேசக்கேள்
யாதாமொருவன்குருத்தைதருஞானியெய்தப்பெறிலவன்றன்
மூதாதையராம்பிதிர்க்குழுக்கண்மூத்தியடையப்படுவோமென்
றோதாமகிழ்ச்சியொடுநடனமுஞற்றுநிற்பரொழியாதே. (சச)

(வேறு.)

தவறறவெவன்மணந்தத்துவத்திலே
பவமகலனுபவப்பரியந்தஞ்செவி
னவன்விழியெதிர்ப்படுமனுக்களியாவரும்
பவமெலாநசித்துயர்பதத்தைச்சேர்வரால். (சரு)

(வேறு.)

மாசகல்மாணனேமகிமைதங்கிய
தேசனார்ஞானிகடெரிசனத்தினல்

வேசரிநீங்கியேவிரவும்விண்ணுளார்
வாசவன்பதத்தையேபெறுவர்மண்ணுளார். (௩௬)

(வேறு.)

பாலன்மாநிதியைப்பெற்றுமற்றொன்றைப்பற்றலேபோ
லேலவிம்மனிதரொல்லாமீசனுக்கீசனான
மேலைநல்வினையினாலேஞானியைமேவப்பெற்றுஞ்
சாலமோகத்தானீத்துச்சஞ்சரிப்பார்களந்தோ. (௩௭)

(வேறு.)

ஓகோவிந்தமாயையமயலொழியாதிருக்குமானிடர்கள்
வாகார்பரமார்த்தத்தெரிசியானமகிபர்தமைநீத்துத்
தாகாரிதத்தும்பொருட்டுலகில்யாதாமொருவர்சரிக்கின்று
ராகாவவரோயமுதத்தைவிட்டுவிடத்தையருந்துவோர். (௩௮)

ஆக திருவிருத்தம் - ௧௧௧.

பசுவிளக்கம் - முற்றிற்று.

---

பாசவிளக்கம்.

முதலாவது

## ஆணவவிலக்கணம்.

---

ஆணவமலமான்மாவுக்கனாதியிலியற்கையென்னின்
மாணவசங்கின்வெள்ளைபோலொருகாலுமாயா
வாணவமலமான்மாவுக்கனாதியிற்செயற்கையென்னிற்
காணும்வெண்மடிக்கழுக்குக்கலத்தல்போற்பினும்வந்தெய்தும். (௧)

(வேறு.)

சரிதையிலாணவங்கால்சரிந்திடும்
கிரியையிலாமலங்கெடுதியுற்றிடு
மருவுயோகத்தின்மூக்கான்மடிந்திடும்
விரிசிவஞானத்தின்மூற்றும்வீயுமே. (௨)

(வேறு.)

வீணுறைக்கரும்புமீசன்மெய்யுறைவேம்புமாக்குந்
தாணுவையிறைஞ்சலொட்டாதையலையிறைஞ்சப்பண்ணு
நாணறவிரத்தல்செய்யுநல்லவர்க்கீதல்செய்யா
வாணவமலத்தின்செய்கியிவ்வணமறிந்துகொள்வே. (௩)

நெல்லினுக்குமியுஞ்செம்பினீடுகொளிதமும்போலத்
தொல்லைதொட்டின்றுகாறுமுயிரிடைத்தொக்கிநிற்கும்
வல்லியோர்பங்கனுசான்வடிவெடுத்தருளுங்காலம்
புல்லுறுபனிபோற்பொன்றும்போதவாதவனெழுங்கால். (௪)

ஆக திருவிருத்தம் - ககடு.

ஆணவவிலக்கணம் - முற்றிற்று.

---

இரண்டாவது

## மாயையிலக்கணம்.

---

மாயையேயுடலமாகுமாயையேகரணமாகு
மாயையேபுவனமாகுமாயையேபோகமாகு
மாயையேபொறிகளாகுமாயையேபுலன்களாகு
மாயையேயண்டபிண்டம்யாவையுமாயையாமே. (க)

சாயைபோலொத்தவாழ்வைமெய்யெனச்சந்தோடிக்குந்
தூயமெய்ஞ்ஞானவாழ்வைப்பொய்யெனத்தூடித்துட்கு
மாயவன்பிரமனீசன்யாரையுமயக்கஞ்செய்யுங்
காயமேமாயையாகுலியாரிதைக்கடக்கவல்லார். (உ)

(வேறு.)

காமத்தாலிந்திரன்கலக்கமெய்தினன்
காமத்தாலிராவணன்கருத்தழிந்தனன்
காமத்தாற்றீசகன்கவலையுற்றனன்
காமத்தாலிறந்தவர்கணக்கிலார்களே. (௩)

கோபத்தாற்கௌசிகன்றவத்தைக்கொட்டினன்
கோபத்தானகுடனுங்கோலமாற்றினன்
கோபத்தாலிந்திரன்குலிசம்போக்கினன்
கோபத்தாலிறந்தவர்கோடிகோடியே. (௪)

கோபமேபிறவியைக்கொடுக்குங்கொள்கையாங்
கோபமேயறிவினைக்குறைக்குங்குட்டநோய்
கோபமேதாயையுங்கொல்லுந்திண்படை
கோபமேதவத்தினைக்குலைக்கும்பேயரோ. (௫)

ஆசையாற்சந்திரனங்கந்தேய்ந்தனன்
ஆசையாற்சவுபரிபறிவைநீங்கினன்

ஆசையானராசுரனுவிபோக்கினன்
ஆசையால்வாலியுமழிந்துபோயினன். (௬)

(வேறு.)

ஆகையாலிந்தமாயையறிவினைமுழுதுமூடித்
தேகமேயான்மாவென்றுஞ்சேயிழைமடவார்தங்கள்
போகமேமோக்கமென்றும்புந்தியைத்திரிவுபண்ணுஞ்
சோகம்பாவனையாலித்தைத்தொலைப்பர்களிவன்முத்தர். (௭)

ஆக திருவிருத்தம்-௧௨௨.

மாயையிலக்கணம் - முற்றிற்று.

மூன்றாவது

## கன்மவிலக்கணம்.

வினையினால்விகாரமுண்டாம்விகாரத்தால்விருப்புண்டாகு
முனைவுறும்விருப்பநாளுவிதவுலகங்களுண்டா
நனியுலகத்தான்மெல்லநாமெனுமகமுண்டாகுந்
துனிவுடையகங்காரத்தாற்றுஞ்சலும்பிறப்புமுண்டாம். (௧)

ஊழ்வினையாலுடம்புமுடம்பினுலூழுமாகித்
தாழ்வினையிரண்டாய்மூன்றாய்ச்சதுர்விதமாகியோங்கி
வாழ்வொடுவெறுமையாகிமன்னுயிர்தொறும்வந்தின்று
காழ்மரம்விதையும்போலாங்கன்மமீதெண்ணிக்கொள்ளே. (௨)

சஞ்சிதந் திருநோக்காற்போம்பிராரத்தந் தனுவோடேகும்
விஞ்சுமாகாமியந் தான்விளங்குஞானத்தினாற்போந்
செஞ்சயான்செய்ததெல்லாஞ்சிவன்செய்ததென்றுணர்ந்தால்
மஞ்சனேவினைத்திறங்கள்வந்தணைச்சந்தியாமே. (௩)

இம்மலமூன்றுலாவியிருளடைந்தறிவுமாழ்கி
மும்மைகொள்புவனந்தோறுமுறைமுறைபோகிமீளுஞ்
செம்மலங்கருணைவள்ளற்றிருவருட்டிரோதைமாறி
மம்மர்கொள்பாம்புமிழ்ந்தமதியெனவிளங்குமன்றே. (௪)

ஆக திருவிருத்தம் - ௧௨௬.

பாசவிளக்கம் - முற்றிற்று.

## ஞானதீக்கையிலக்கணம்.

பூசையால்விரதந்தன்னாற்புண்ணியதீர்த்தந்தன்னா
லாசறுதருமந்தன்னாலளவறுவேள்விதன்னாற்
பாசபந்தங்கள்பொன்றுபாரிடைநம்போல்வந்த
தேசிகனருளுஞானதீக்கையாற்பொன்றுமன்றே. (க)

(வேறு.)

அண்டமெலாம் வலம்புரிந்தானறுமுகவன் கரிமுகவ னறிவாலா யிந்திட், டெண்டிசைக்குஞ் சிவனிறைவன் சிவனையல்லா துலகுயிரு மில்லையென்றே, மண்டியவன் பாலெழுந்து வலம்புரிந்தான்மகிழ்ந்திறைமாங்கனியளித்தான், கண்டவிருவகையாலுங் கன்மபலஞானபலங்காணலாமே. (உ)

### ஆ திருவிருத்தம்-கஉஅ.

ஞானதீக்கையிலக்கணம் - முற்றிற்று.

---

## ஆசாரியனிலக்கணம்.

சிவகாருணியம்பாசவைராக்யஞ்சீர்பிறங்கி
யோவிலாவீசன்பத்தியொளிவளர்பிரமஞானந்
தாவியநான்குந்தானேகுரவற்குச்சடலமென்னுஞ்
சாவதும்பிறப்புமில்லாச்சங்கரனுகமங்கள். (க)

(வேறு.)

மண்ணலைநீரலைவளிநெருப்பலை
விண்ணலைமதியலைவிரிந்தபானலை
பெண்ணலையாணலைபேடுமல்லையா
லண்ணலேநீயெனவறைபவன்குரு. (உ)

(வேறு.)

சிவத்துவமசிசிவோகமத்துமிசிவோயமத்தி
நவத்துநிவாக்கியத்தைநவையறுசீடற்கோதி
யவற்றுறுபொருளைத்தேற்றியாங்கவன்கிலேசம்போக்கிப்
பவத்துயர்நசித்தான்றன்னைப்பரமவாசிரியனென்ப. (௩)

யானெனதெனுஞ்செருக்கையிரித்தொளியாயெறிக்கு
ஞானதேசிகற்குத்தன்னை*நதிர்கொடுத்திறைஞ்சாநின்ற

* நதிர் - திசைச்சொல்.

வானமாணுக்கற்கிந்தவனுபவமறையலாகு
மேனையோர்க்குரைப்பினன்றேனிருள்புரைநிரையத்தெய்தும். (௪)

(வேறு.)

சீடன்றன்பவநோய்க்குத்தேசிகன்வாய்மொழிமருந்தா
மாடகமாமலையேறியானந்தமடைந்தான்போ
னூடரியவுயர்முத்தன்ஞானத்தாலடைந்தோனை
வீடுபுகக்குடியேற்றும்வித்தகனுமிவனுமால். (௫)

ஆ திருவிருத்தம் - கஙௗ.
ஆசாரியனிலக்கணம் - முற்றிற்று.

---

## சீடனிலக்கணம்.

பூதகாரியங்களெல்லாம்பொய்மைமெய்ப்பூசநாத
ஞதலாற்புவனத்தாசையந்தரத்தாசையற்ப
மோதறுவகைச்சம்பத்துமுயர்முத்திவிருப்புமிந்தச்
சாதனநான்குந்தானேசீடற்குச்சடலமென்ப. (௧)

(வேறு.)

நரனலனிவனமையாளவந்திடும்
பரசிவனெனத்தினம்பணியத்தக்கவ
னிருவினையாழியையெளிதினீந்துவான்
றிரும்விமுத்தியைச்சேருந்திண்ணியன். (௨)

(வேறு.)

கடப்பருங்கடல்கடத்துங்கருணையாரியன்முனிந்தே
யடித்துதைத்தருவருத்திட்டக்கிரமஞ்செய்தாலு
முடற்பிணியகற்றவல்லவுத்தமனிவனேயென்று
திடப்படுசிரத்தையுள்ளோன்சீடனென்றுரைக்கும்வேதம். (௩)

மன்னர்முன்காலன்முன்னுமகிழ்ச்சியைப்பிரிக்கவந்த
தன்னிகர்நோயின்முன்னுந்தானடங்கிடுவார்போல
மின்னமர்கயிலைநீத்துமெய்யுடையார்போல்வந்த
கொன்னமர்குரவன்முன்னரடங்குவான்குலமாணக்கன். (௪)

குருவிலான்பெற்றஞானங்குமரியைக்குமரிகூடி
மருவியவின்பமொக்குமண்ணிடைநம்போல்வந்த
குருவினற்பெற்றஞானங்குமரியைக்குமரன்கூடி
மருவியவின்பமொக்குமென்பர்நன்மதியுளாரே. (௫)

முந்துநூலுழைப்புமின்றிமுத்தர்பாலிணக்குமின்றிச்
சுந்தரக்குரவன்பாதத்தொழும்புகள்சிறிதுமின்றி
யந்தமில்ஞானம்வேண்டுமெவரவெலாங்கொழுனற்கொன்று
சந்ததிவேண்டிநோற்குந்தன்மையோடொக்குமன்றே. (௬)

(வேறு.)

முன்புறுவானிரவெல்லாமுப்போதும்பணிந்தெழுவான்
பின்புறுவான்பகலெல்லாம்பெட்புறுவானெப்போதுங்
கொன்புனைந்தவுரைகொள்ளான்குறிக்கொள்வான்றிருமொழியை
யன்புடையமாணுக்கர்களவில்குறியுண்டாமால். (௭)

(வேறு.)

நானார்கொல்லோவென்றனக்குநாதனார்கொல்லோவெனக்கிங்
கானப்பிறப்புமிறப்புமிவணடைந்ததென்கொலோவென்று
தானேதனக்கிவ்விசாரங்கடலைப்பட்டிடலுந்தேசிகனைத்
தேனாரளிபோற்றேயமெலாந்தேடுமவனேசற்சீடன். (௮)

ஆக திருவிருத்தம் - ௪௱௧.

சீடனிலக்கணம் - முற்றிற்று.

---

## ஞானகுருமான்மியம்.

பிதிர்க்கடம்பூசையாவும்பேசிடிற்பாசதன்மம்
புதுப்பொழிற்றடாகமாதிபுகல்பசுதன்மமாகு
முதுக்குறையறிஞர்பூசைமுப்புரதகனன்பூசை
துதிக்கருமாசான்பூசைசொலிற்சிவதருமமன்றே. (௧)

(வேறு.)

எந்நாளிருப்பினுமிறப்பதுநிச்சயம்
பொன்னாட்டிலிந்திரனாயினும்பொன்றுவ
னன்னாட்கழியுமுன்ஞானத்தினாலே
தன்னையறிவதுசற்குருபாதமே. (௨)

சித்தஞ்சிவத்தோடொருக்கிச்சிவமான
முத்தன்சிவமெனமொழிந்திடுமாகமஞ்
சத்தியஞ்சீவன்சங்கரனென்றே
குற்றமின்றுன்மறைகூறும்வருத்தே. (௩)

(வேறு.)

ஆதலாற்குருப்பிரானதிகமென்றுநால்
வேதமுமுறையிடும்விவேகியானவன்

போதொடுநீரொடும்போற்றிநாடொறுங்
காதலாற்குருபதங்கைவிடானரோ. (௫)

ஆ திருவிருத்தம் - ௧௪௫.
ஞானகுருமான்மியம் - முற்றிற்று.

---

## கொல்லாவிரதம்.

ஆருயிர்க்கொலாதமேலோரறிவினையறிந்தநல்லோர்
தீமனமொடுக்கவல்லோரிவர்களேதேவராவர்
காமராய்க்கற்பழித்தோர்களவுசெய்துடல்வளர்த்தோர்
மாமிசந்தின்போரெல்லாமானிடப்புலையராவார். (௧)

(வேறு.)

அரியவாக்கையின்மானிடவாக்கையேயாக்கை
விரியுநோன்பினிலுயிர்க்கொலாவிரதமேவிரதங்
கருதிற்றெய்வதங்கண்ணுதற்றெய்வமேதெய்வந்
தெரியிற்றேவிகாலோத்தரதேற்றமேதேற்றம். (௨)

(வேறு.)

அம்மாவெனவலறவாருயிரைக்கொன்றருந்தி
யிம்மானிடரெல்லாமின்புற்றிருக்கின்று
ரம்மாவெனுஞ்சத்தங்கேட்டகன்றமாதவர்க்கும்
பொய்ம்மாநிரையமென்றுற்புசித்தவர்க்கென்சொல்லுவதே. (௩)

(வேறு.)

கங்கையிற்படிந்திட்டாலுங்கடவுளைப்பூசித்தாலு
மங்குல்போற்கோடிதன்மம்வள்ளலாய்வழங்கினாலுஞ்
சங்கையில்லாதஞானதத்துவமுணர்ந்திட்டாலும்
பொங்குறுபுலால்புசிப்போன்போய்நரகடைவனன்றே. (௪)

கொலையிலானுதவுமன்னங்கூறிற்பேரமுதமாகுங்
கொலையுளானுதவுமன்னங்கூறிற்பேர்விடமதாகும்
புலையர்தம்மனையிலுண்போன்புலையனுமாறுபோலக்
கொலைஞர்தம்மனையிலுண்போன்கொலைஞனேயாவனென்றே. ()

கலையெலாமுணர்ந்தானேனுங்கரிசறத்தெளிந்தானேனு
மலையெனவுயர்ந்தானேனுமனமயலகன்றானேனு
முலகெலாம்புகழப்பல்லோர்க்குதவியகையனேனு
மிலகியவிரக்கமின்றேலெழுநரகடைவனன்றே. (௬)

இத்திறனருள்கைப்பற்றியுயிர்க்கெலாமிதத்தைச்செய்க
சத்தியவிரக்கமின்றேன்முத்தியைச்சாராருங்
பத்தியால்யோகஞ்சாரும்யோகத்தாற்பரமஞானஞ்
சித்தியாமிதற்காதாரஞ்சீவகாருணியமன்றே. (எ)

ஆ திருவிருத்தம் - ௧௫௩.

கொல்லாவிரதம் - முற்றிற்று.

---

## யாக்கையருமை.

மக்களாக்கையிற்பிறத்தலேயரிதுமற்றதிலுங்
துக்ககூன்குருடூமையைத்துறத்தலுமரிது
நற்குலத்திடைவருதலுமரிதுஞானத்தான்
முக்கணீசனுக்காட்படல்முற்றிலுமரிதே. (௧)

(வேறு.)

உடம்பெலாநீங்கிநல்லுடம்புபெற்றவ
ருடம்பினாலுறுபயனொன்றுமோர்கிலா
ருடம்பினாலுறுபயனுவதேதெனி
லுடம்புயிருணர்வையுமோரலாகுமே. (௨)

(வேறு.)

அரிதுமானிடயாக்கையிற்பிறத்தன்மற்றதினு
மரிதுவேதநூல்சைவநூலாலகந்தெளித
லரிதவ்வீசனேநாமெனவறிவுமேலிடுத
லரிதுவாய்ப்பறையறைந்திடாதினடங்கிடலே. (௩)

ஆ திருவிருத்தம் - ௧௫௬.

யாக்கையருமை - முற்றிற்று.

---

## சரிதைகிரியாயோகவிலக்கணம்.

பெரியவிம்மானிடயாக்கைபெற்றவர்
சரிதையுங்கிரியையுந்தான்செய்கின்றிலர்
சரிதையுங்கிரியையுந்தான்செயாவிடி
லுரியயோகத்தினையுணரலாகுமே. (௧)

(வேறு.)

எங்கணுநிறைந்துநின்றவீசனேடொன்றலாலே
சங்கரனுமேயென்னச்சமாதியோகம்புரிந்து

துங்கவெண்மதிபோலுள்ளந்துலங்கிடச்சுவாறுபூதி
யங்குதித்திடவானந்தமடைவதேயமலயோகம். (உ)

(வேறு.)

அரியவிம்மானிடயாக்கைபெற்றவர்
கருமயோகங்களாற்காலந்தள்ளுவ
துரியமெய்ஞ்ஞானயோகத்திலாரன்
றுரியயோகத்தினைச்சோதியார்களே. (ஙு)

(வேறு.)

ஒருகணமிருப்பன்றெய்வவுருவினிலீசன்மூன்மற்
றிருகணஞ்செங்கோலோச்சுமிறையவர்பாலிருப்ப
னருமறையவர்குழாத்துளம்புவீழளவிருப்பன்
றுரியயோகிகளுளத்திற்றூங்குவனிருந்தெப்போதும். (சு)

ஆக திருவிருத்தம் - கசுo.

சரிதைகிரியாயோகவிலக்கணம் - முற்றிற்று.

---

## ஞானநிட்டையிலக்கணம்.

சராசரப்பொருள்கடோறுந்தங்கிநின்றவைற்றின்றன்மை
விராவுதலின்றியொன்றாய்விமலமாய்விண்ணிறைந்தாய்ப்
பராபரவெளியாய்நீங்காப்பாசசாலங்கடந்த
நிராமயசிவந்தானாகிநிற்பதுஞானநிட்டை. (க)

மத்திமவுடறாகாவளர்கரணந்தானாகா
மொய்த்தவிந்தியந்தானாகாமூலவாயுவுந்தானாகா
சித்திரதீபம்போலச்சிவபாவங்கழன்று
நித்தியசிவந்தானாகிநிற்பதுஞானநிட்டை. (உ)

கன்மவாதாரமாறுங்கடந்துகற்பனைகடந்த
வுன்மனைகடந்துசிவவுணர்வையுங்கடந்துமேலாய்ச்
சின்மயமாகிநின்றசிற்பரநிலைகடந்து
நின்மலசிவந்தானாகிநிற்பதுஞானநிட்டை. (ங)

மக்களுமனையுநீத்துமாதராராசைநீத்துச்
சொர்க்கமேலாசைநீத்துச்சுத்தனைப்பற்றொன்றின்றிக்
கற்கவேண்டியதுநீத்துக்கருதிருவினையுநீத்து
நிர்க்குணசிவந்தானாகிநிற்பதுஞானநிட்டை. (ச)

(வேறு.)

சிந்தனைபுறஞ்செலாச்சிவோகம்பாவனை
சந்ததமுனூற்றிடிற்சமாதிவந்துறு
மந்தநற்சமாதியாலறிவுமேலிடு
மிந்தநன்னிலையிலேயிருக்கற்பாலையே. (௫)

ஆங்கறியாமையுமறிவுநீங்கவே
யோங்கியவறிவொடுமொன்றுபட்டவண்
டேங்குபேரானந்தத்தூக்கம்வந்துறு
மூங்கைகாண்கனவெனமுத்திகாண்டியே. (௬)

(வேறு.)

பாவனாதீதந்தன்னிறொடொறும்பதிந்துநிற்பாய்
பாவனாதீதந்தன்னினெஞ்சகம்பதியாதாயின்
பாவனைதனிலேநெஞ்சைப்பழக்கிடுபழுத்தகாலைப்
பாவனாதீதம்வந்துபதிந்திடும்பான்மையோடே. (௭)

ஆக திருவிருத்தம் - ௧௬௬.
ஞானநிட்டையிலக்கணம் - முற்றிற்று.

---

## ஐம்புலனால்வருமிலக்கணம்.

சத்தத்தாலசுணமாயும்பரிசத்தாற்றந்திமாயும்
வெற்றிசேருருவத்தாலேவிட்டிலம்பறவைமாயும்
பற்றியாரிரதத்தாலேபாணிமீனங்கண்மாயும்
மொய்த்தகந்தத்தினாலேமூசுவண்டினங்கண்மாயும். (௧)

ஓதியவசுணமாதியொன்றொன்றாலழியாநிற்குங்
காதினற்றொக்கான்மூக்காற்கண்ணினாலுவாலிந்தச்
சாதிமானிடர்களெல்லாமஞ்சினாற்சாகாநிற்பர்
போதமேலிட்டகாலம்புலன்வழிப்போகாரன்றே. (௨)

(வேறு.)

ஐம்புலன்வழியோடிமானிடரெலாமழிவார்
ஐம்புலன்வழித்தாவிமேலமரருமலைவார்
ஐம்புலன்வழியடைத்தவன்யோகியேயன்றி
ஐம்புலன்வழியடைத்தவருலகினில்யாரோ. (௩)

ஆக திருவிருத்தம் - ௧௬௯.
ஐம்புலனால்வருமிலக்கணம் - முற்றிற்று.

---

## ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம்.

ஐம்புலனடக்கலாலுமறிவினையறிதலாலு
மின்பதுன்பங்களெல்லாமியல்பெனவொறுத்தலாலுஞ்
செம்பொருளறைதலாலுஞ்சிவோகம்பாவித்தலாலும்
நம்பனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே. (க)

வேதநூலுணர்தலாலும்விதிவழியொழுகலாலுஞ்
சூதகந்துறத்தலாலுஞ்சுகமயமாதலாலும்
பேதமற்றிருக்கையாலும்பெரியவர்கூட்டத்தாலு
நாதனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே. (உ)

ஆ திருவிருத்தம் - கஎக.

ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம் - முற்றிற்று.

---

## சந்நியாசியிலக்கணம்.

ஆக்கைக்குஞ்சாக்கிரமேயனைத்திற்குஞ்சாக்கிரமே
போக்கொடுவரவுமில்லைபுண்ணியபாவமில்லை
வாக்கொடுமனமுமில்லைமந்திரந்தியானமில்லை
சாக்கிமாத்திரமேயென்றுதெளிந்தவன்சந்நியாசி. (க)

(வேறு.)

அறிவிலறிவாயகண்டிதமாயனந்தானந்தமயமாகிச்
செறியும்பரமசிவந்தன்னைத்தன்னுட்கண்டுநியாளித்துங்
கறவையருந்தப்பால்சுரக்குங்காலமேனுங்கடைப்பிடிப்போர்
பிறவிக்கடலைக்கடந்தோர்களவரேயுலகிற்பெரியோரே. (உ)

மண்போற்பொருமையுடையோருமதிபோற்சாந்தமுடையோரும்
புண்போலுடலைப்புனைந்தோரும்புனல்போலொழுக்கம் பூண்டோருங்
கண்போலிரக்கமுற்றோருங்கனல்போற்புசிக்குங்கதியோரும்
விண்போலறிவையறிந்தோரும்பிறவாரிந்தமேதினிக்கே. (ங)

ஆ திருவிருத்தம் - கஎச.

சந்நியாசியிலக்கணம் - முற்றிற்று.

---

## அதிவன்னாச்சிரமியிலக்கணம்.

ஊன்றுமூன்றவத்தைக்கப்பாலுயர்மூத்தனுகியந்த
மூன்றவத்தைக்குஞ்சான்றாய்முதலொளியாய்ப்பிறங்கித்

தோன்றுமாதேவதேவையெவன்சும்மாவனுபவிப்போ
ரூன்றவனவனேமேலாமதிவன்ருச்சிரமியாவான். (௧)

(வேறு.)

நிறைந்தமாகடற்போலுயர்நெடுமறைமுடியிற்
சிறந்தபோதமாவாக்கியசிரவணத்தாலே
யிறந்தசிந்தையினூற்றனையீச்சுரனாக
வறிந்தவன்சொலுமதிவன்ருச்சிரமியாவானல். (௨)

(வேறு.)

வருணமாச்சிரமமாகிமலினதேகத்தின்கண்ணே
கருமலிமாயைதன்னாற்கற்பிக்கப்பட்டதெல்லாம்
பொருவருபோதனுமெற்கெப்போதுமில்லையென்றே
யருமறையாலுணர்ந்தோனதிவன்ருச்சிரமியாவான். (௩)

சொன்னத்திற்கடகமாதிசூழணிதோன்றுமாபோ
லென்னிடத்தகிலமெல்லாங்கற்பிக்கப்பட்டதென்றே
பன்னுமாமறையந்தத்தாற்பகுத்தறிந்தனுபவித்திங்
கன்னியமிலாமைகண்டோனதிவன்ருச்சிரமியாவான். (௪)

ஆதித்தன்சன்னிதானத்தகிலஞ்சேட்டிக்குமாபோற்
போதத்தென்சனிதானத்திற்புவனஞ்சேட்டிக்குமென்றே
வேதத்தினந்தத்தாலேமெய்ப்படவறிந்துணர்ந்தோ
ஞதித்தனிவனேயென்னவதிவன்ருச்சிரமியாவான். (௫)

இப்பியிற்பிராந்தியாலேயிரசிதந்தோன்றுமாபோன்
மெய்ப்படுமென்னிலிந்தவியன்சகமுதித்ததென்றே
யிப்படியாவனேனுமெழின்மறைமுடிவினாலே
யற்புதவறிவுணர்ந்தோனதிவன்ருச்சிரமியாவான். (௬)

பறையர்தம்முடம்பின்கண்ணும்பசுவாதியுடம்பின்கண்ணு
மறையவருடம்பின்கண்ணும்வானவருடம்பின்கண்ணு
நிறையுமாகாயம்போலநிற்குமாதேவன்முனென்
றறிவினாலறிந்துணர்ந்தோனதிவன்ருச்சிரமியாவான். (௭)

இந்தஞானத்தினாற்றன்னஞ்ஞானமிறக்குமத்தாற்
செருந்தமாந்துவிதவத்துதொலைந்திடுந்தொலைந்தவத்தாற்
புந்திதானசிக்குமத்தாற்புகழிகழ்நசிக்குமத்தா
ணந்திடுங்குடும்பமத்தாறனெனுஞ்சொரூபந்தோன்றும். (௮)

பாம்பிதென்றுணர்ந்தபோதுபழுதையேயில்லைவெய்ய
பாம்பிதன்றெனவுணர்ந்தாற்பழுதையேயானாற்போலச்

சோம்புருகும்பியென்னிற்றுகளுறுசிவனுருஞ்
சோம்புருக்கும்பியென்னிற்றுகளறுபிரமமாவான். (௬)

ஆ திருவிருத்தம் - ௧௮௩.

அதிவன்னச்சிரமியிலக்கணம் - முற்றிற்று.

---

## மகாவாக்கியவிலக்கணம்.

ஆதிதிருநான்மறைமுடியிலறையுந்தத்துவமசியென்றே
யோதிலதுநீயானுயென்றுரைக்குமும்மைப்பதமாகப்
போதமுடையோயிதன்பொருளையெவ்வாறெடுத்துப்போதிப்பேன்
பேதமகன்றவுள்ளத்தாற்காணும்பெரியவாக்கியமே.. (௧)

(வேறு.)

கன்னனன்புளிஞனென்றேகவலையுற்றழுங்குங்காலைக்
கன்னநீகிராதனன்றுகௌந்திபுத்திரனென்றுற்போ
லன்னியவுடலானென்றேயயர்ந்துளமழியேன்மைந்த
வன்னியமென்றுகண்டவறிவுநீயுணர்ந்துகொள்ளே. (௨)

கல்லெல்லாமெறிந்துமீதிக்கையினையெறிவாருண்டோ
சொல்லியகருவியெல்லாந்தொலைத்தவன்மீதியன்றோ
வல்லதீரவனேசோதியாகியபிரமமாவா
னெல்லையின்மறைகளெல்லாமிவ்வணமுரைக்குமன்றே. (௩)

(வேறு.)

ஒருவனொருதேயத்திற்பிரமசாரியாயுற்றான்
மருவிமற்றோர்நாட்டகத்தின்மகிழ்கிரகியாயினன்
பரவிபின்னோர்மண்டலத்திற்பகர்துறவியாய்நடித்தான்
விரவியகோலம்போக்கின்வேறில்லையவனிவனே. (௪)

(வேறு.)

ஓடிமாநதிகடந்தோரொன்பதுபேரையெண்ணித்
தேடிம்பத்தானைக்காணன்றிகைத்துநின்றலறுகிற்ப
நீடியவொருவனுலேநீபத்தாமெனன்னவோடும்
வீடியதுயரமெல்லாம்வியப்பினையடைந்தானன்றே. (௫)

அன்னியகருவியெல்லாநாமலவென்றறிந்தோன்
பின்னரக்கருவியெல்லாம்பிரித்தவன்றனைமறப்ப
மன்னியசேடநீயேயென்றுமாதவத்தின்வந்த
செந்நிலக்குரவன்சொல்லாற்றெளிவதுஞானமாமே. (௬)

மச்சுக்கூப்பிட்டுதென்றேமதிப்பவருண்டோவந்த
மச்சுளேயொருவனன்றிமச்சுக்கூப்பிடுமோபேதாய்
நச்சியதேகசேட்டையாவையுநாடிப்பார்க்கி
லச்சுளேநின்றவான்மாவாலெனவாய்ந்துகொள்ளே. (௭)

முப்பகைகடந்துஞானமூத்திறைநிகழவேதஞ்
செப்புமாவாக்கியத்தின்றெரிசனங்கிடைத்தமேலோ
ரப்பிரமேயமானவறிவொடுங்கலவாராயி
னிப்புவிதன்பான்மீட்டுமெய்துவரையமின்றே. (௮)

(வேறு.)

பொன்னையன்றிப்பூணில்லைபூணையன்றிப்பொன்னில்லை
யென்னையன்றிச்சிவனில்லைசிவனையன்றியானில்லை
யின்னவண்ணமறிந்தோனேயீசன்றனையுமறிந்தோனு
மின்னவண்ணமறியாதானீசன்றனையுமறியானே. (௯)

(வேறு.)

நிறையறிவாயிருந்துநின்மலன்றன்னைத்தேடி
மறைமுதனூலாராய்ந்தும்பின்னருமயங்குந்தன்மை
யிறைவனேயெனக்குநாக்குண்டில்லையோவென்றுகேட்க
வறைவதுநாக்கேயென்னவகந்தெளியானைப்போலும். (௧0)

ஆதவன்றன்னைப்பார்த்திட்டகிலத்தைப்பார்த்தபோது
வாதவனொளிமேலிட்டேயகிலந்தோன்றுதவாபோற்
சேதனச்சிவத்தைநோக்கிச்செகத்தினைநோக்குங்காலைச்
சேதனச்சிவமேலிட்டுச்செகமெலாமறைந்துபோமே. (௧௧)

(வேறு.)

என்றுமிருந்தபடியிருக்குமியல்பேயென்னுமொருவேத
மொன்றேயொழியவிரண்டாம்வத்தில்லையென்னுமொருவேதம்
வென்றிப்பரமுநீயும்வேறில்லையென்னுமொருவேதந்
துன்றுமதுவேநீயாறுயென்றேசொல்லுமொருவேதம். (௧௨)

(வேறு.)

நாலுவேதமுந்தத்துவமசியெனநவிலுஞ்
சாலநீர்தெளிந்துறுதிகொள்வீரெனச்சாத்திப்
பாலலோசனன்மவுனமுற்றிருந்தனன்பருவக்
கோலநால்வருநிட்டையைக்கூடினரன்றே. (௧௩)

ஆ திருவிருத்தம் - ௧௫௬.

மகாவாக்கியவிலக்கணம் - முற்றிற்று.

---

## அநுபவவிலக்கணம்.

ஊசலாடுளமுமின்றியுருவருவுபயமின்றிக்
கோசரவகோசரங்கள்குறிகுணபேதமின்றிப்
பாசசாலங்கடந்துபராபரைக்கப்பானின்ற
வீசனையறிந்தஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (௧)

சிறையறக்கடலொடுங்குஞ்செறிநதிக்குலங்கள்போலு
மறுகுறுவேடுநீக்கமன்னனைக்கூடல்போலு
மறிவறியாமைநீங்கவறிவினுளறிவாய்நின்ற
வினறவனைக்கூடுஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (௨)

(வேறு.)

அரியணையிலிருந்துலகவரசாட்சிபுரிந்தாலுமங்கையேற்றுத்
தெருவுதொறுந்திரிந்திரந்துநின்றாலுமினியபருவத்தெரிவைமாரைப்
பிரியாமலிருந்தாலும்பிரிந்துதவம்புரிந்தாலும்பேசிற்றெல்லாம்
விரிசிவன்முத்தனுக்கிங்குடம்பாடேயன்றியொன்றும்விரோதமின்றே

(வேறு.)

ஆயிரமடந்தையராகந்தோய்ந்துநான்
றூயவனென்றுமால்சூளுஞ்சாற்றினான்
காயமுங்கரணமுங்கடந்ததன்மையா
னீயுமந்நிலையிலேநிற்கப்பாலையே. (௩)

அறுசுவையடிசிலையாவுண்டவன்
வெறுமுபவாசிநானெனவிளக்கினான்
சிறுநுதற்பேதையைத்தினமுஞ்சேர்ந்தவன்
றுறவிநானெனவுளந்துலங்கக்காட்டினான். (௫)

(வேறு.)

கேவலச்சனகன்முன்னுட்கேள்பகையிரண்டுமின்றி
மேவியசுத்தமென்னுமெல்லையணைமீதிருந்து
சாவுயர்பிறப்புமில்லாத்தத்துவச்செங்கோலோச்சிப்
பாவனையிலாதகானம்படர்ந்தருமாறினானே. (௬)

ஆ திருவிருத்தம் - ௨0௨.

அநுபவவிலக்கணம் - முற்றிற்று.

---

## சிவயோகவிலக்கணம்.

காமமாதிகளை நீத்துக்கரணவாதனை கடந்து
நாமதுவெனுஞ்சம்பந்தஞானமேஞானமாகி
யோமொழிப்பொருளைத்தேறியுணர்வுணராமைபோக்கி
யாமைபோலடங்கிநிற்பதேயமலயோகம். (க)

அறுவகைச்சமையத்தோர்க்குமதீதமாயகளமாகி
மறுவறுபொருளாயொன்றாய்மன்பதைதொறுநிறைந்து
குறைவறுபிரமநாமேயென்றுகோசங்கணீங்கி
யறிவுருவாகிநிற்றலழகியயோகமாமே. (உ)

உடலுருமுயிருமாகியுயிர்தொறுமுணர்வுமாகிச்
சடமசடங்கடோறுஞ்சாக்கியுமாகிநின்ற
வடல்புனைசிவனுநம்மையன்றிவேறில்லையென்றே
யுடைகுடவிசும்புபோலொன்றுதலேயோகமாமே. (௩)

சிந்தையைப்புறத்தேவிட்டுத்தேகமேநாமென்றுன்னி
யந்தமில்போகம்வேண்டியார்வமீதூரநோற்குஞ்
சந்தமற்றுளிருமந்தயோகியைச்சந்தித்தோரும்
வந்தனைசெய்துளோரும்பெறுவர்மாநிலையவைப்பே. (௪)

ஆகையாற்கருத்தடங்கியசைவறலியோகமாகு
நாகமார்முழைஞ்சுபூங்காநதிபாழுங்கோயிலாதி
யோகதானங்கள்புக்கியுயர்சிவோகம்பாவித்துத்
தேகமாதிகணானல்லவென்றுசித்திரம்போனிற்பாய். (௫)

இம்முறைசிவயோகத்திலிருப்பவர்சீவன்முத்தர்
நன்மையினுதந்தோன்றுநவவிதங்கடந்துபோனோற்
செம்மையசுவானுபூதிசெனித்திடுமனந்தானந்த
விம்மிதந்தோய்ந்துந்தோயாதிருப்பர்கள்விதேகமுத்தர். (௬)

காட்டெரிமாசுணங்கள்கண்படுவரிமாவேங்கை
வீட்டுறுபுலவன்றாதால்வெருவுறாதிருக்கும்யோகி
நாட்டமுன்றுடையாநாதனடிவலநண்ணலாலும்
வேட்டுறுபுலனொடுங்கிவிவேகமேவிடுதலாலும். (௭)

மித்தையாமுடலமென்னவிவேகமேவிடுதலாலே
நித்தனுனெனும்விவேகநேரிடும்நேர்ந்தகாலை
முத்தர்பேரவைகிடைக்குங்கிடைத்தலான்முதிர்ந்தஞானஞ்
சித்தியாமன்றேசீவன்முத்தனுய்ச்சிவனுமாவன். (அ)

காசியிலிறக்கமுத்திகமலையிற்பிறக்கமுத்தி
தேசுறுதில்லைமன்றுட்டெரிசிக்கமுத்தியென்ப
ராசையையிறக்கமுத்தியாருயிர்பிறக்கமுத்தி
யீசனைக்காணமுத்தியெதுவரிதானமுத்தி. (௯)

ஆக திருவிருத்தம் - உ௧௧.

சிவயோகவிலக்கணம் - முற்றிற்று.

---

## வாதனைமாண்டாரிலக்கணம்.

இல்லறம்பொருளனவிருந்துகாமிய
வல்லல்சேர்வாழ்க்கையினமிழ்ந்திநிற்பினு
மெல்லையில்ஞானவின்பத்தையெய்தியே
புல்லியும்புல்லிடாதிருப்பர்புண்ணியோர். (௧)

போதெலாமவத்திலேபோக்கிடாவகை
சாதலும்பிறத்தலுந்தணந்தஞானியர்க்
காதரம்பெருகிடவடிமைசெய்குவார்
காதகங்கரத்தையுங்கடந்தகாரணர். (௨)

(வேறு.)

சாத்திரஞ்சமயம்வேண்டார்தத்துவக்கத்துவேண்டார்
கோத்திரங்குலங்கள்வேண்டார்கூறுமாவிரதம்வேண்டார்
மூர்த்திசேவைகளும்வேண்டார்முன்னவன்பூசைவேண்டார்
தீர்த்தமும்வேண்டார்ஞானச்சின்மயமானமேலோர். (௩)

உம்பர்வாழுலகம்வேண்டாருலகரசாட்சிவேண்டார்
பொன்புனைமகளிர்வேண்டார்புண்ணியபாவம்வேண்டா
ரின்பொடுதுன்புவேண்டாரிறப்பொடுபிறப்பும்வேண்டா
ரைம்புலப்பகையைவேண்டாரறிவினையறிந்தமேலோர். (௪)

(வேறு.)

அன்னமயமுதலாகவானந்தமயமீருய்ப்
பின்னநிலையிவைகடந்தபேரின்பசாகரத்து
ளின்னபடியென்றறியாதிருந்தசிவயோகிக்குச்
சொன்னமகளும்புவியுந்துரும்பாகத்தோற்றுமால். (௫)

ஆக திருவிருத்தம்-உ௧௬.

வாதனைமாண்டாரிலக்கணம் - முற்றிற்று.

---

காசியிலிறக்கமுத்திகமலையிற்பிறக்கமுத்தி
தேசுறுதில்லைமன்றுட்டெரிசிக்கமுத்தியென்ப
ராசையையிறக்கமுத்தியாருயிர்பிறக்கமுத்தி
யீசனைக்காணமுத்தியெதுவரிதானமுத்தி. (௬)

ஆ திருவிருத்தம் - உ௬௬.

சிவயோகவிலக்கணம் - முற்றிற்று.

---

## வாதனைமாண்டாரிலக்கணம்.

இல்லறம்பொருளெனவிருந்துகாமிய
வல்லல்சேர்வாழ்க்கையினமிழ்ந்திநிற்பினு
மெல்லையில்ஞானவின்பத்தையெய்தியே
புல்லியும்புல்லிடாதிருப்பர்புண்ணியோர். (௧)

போதெலாமவத்திலேபோக்கிடாவகை
சாதலும்பிறத்தலுந்தணந்தஞானியர்க்
காதரம்பெருகிடவடிமைசெய்குவார்
காதகங்கரத்தையுங்கடந்தகாரணர். (௨)

(வேறு.)

சாத்திரஞ்சமயம்வேண்டார்தத்துவக்கத்துவேண்டார்
கோத்திரங்குலங்கள்வேண்டார்கூறுமாவிரதம்வேண்டார்
மூர்த்திசேவைகளும்வேண்டார்முன்னவன்பூசைவேண்டார்
தீர்த்தமும்வேண்டார்ஞானச்சின்மயமானமேலோர். (௩)

உம்பர்வாழுலகம்வேண்டாருலகரசாட்சிவேண்டார்
பொன்புனைமகளிர்வேண்டார்புண்ணியபாவம்வேண்டா
ரின்பொடுதுன்புவேண்டாரிறப்பொடுபிறப்பும்வேண்டா
ளைம்புலப்பகையைவேண்டாரறிவினையறிந்தமேலோர். (௪)

(வேறு.)

அன்னமயமுதலாகவானந்தமயமீறாய்ப்
பின்னநிலையிவைகடந்தபேரின்பசாகரத்து
ளின்னபடியென்றறியாதிருந்தசிவயோகிக்குச்
சொன்னமகளும்புவியுந்துரும்பாகத்தோற்றுமால். (௫)

ஆ திருவிருத்தம்-உ௬௫.

வாதனைமாண்டாரிலக்கணம் - முற்றிற்று.

---

## பிராரத்தவிலக்கணம்.

வேம்புறுபுழுவைவாங்கிமென்கரும்பிடைவிட்டாலும்
வேம்பையேநோக்கிப்பின்னும்வியப்புறுமாறுபோலச்
சோம்புமூன்றவத்தைநீக்கித்துரியத்தில்வைத்தபோதுஞ்
சோம்புமூன்றவத்தைதன்னைத்தோயவேநினைக்குஞ்சீவன். (௧)

பாசத்தைநீக்கியாசான்பதியிடைப்பதியவைத்தும்
பாசத்தைமீட்டுநோக்கிப்பரிந்திடும்பசுவின்றன்மை
மாசுற்றவுவரைப்போக்கிமலைமிசைவைப்பமேக
மாசற்றவரையைநீங்கிவாரியிற்புகுநீர்போலும். (௨)

ஆக திருவிருத்தம்-௨௧௮.

பிராரத்தவிலக்கண - முற்றிற்று.

---

## சிவத்துரோகவிலக்கணம்.

சுருதிகண்முறைமுறைதுதித்தகத்திய
னிருவினைக்குறும்பெறியெதியொடும்வரப்
பரசிவமிவரெனப்பதைத்தெழாமையால்
வரனெனுமாதவன்மகிடமாயினான். (௧)

பாசமோசகன்சிவன்பரசுவார்வினை
நாசமாக்குவனெனமறைநவிற்றியு
மீசனைப்புகழ்ந்திடாதிகழ்ந்ததக்கனு
ராசுறுதகர்முகமாயினாரரோ. (௨)

ஆக திருவிருத்தம் - ௨௨௦.

சிவத்துரோகவிலக்கண - முற்றிற்று.

---

## சுவானுபவவிலக்கணம்.

நன்னெறியறிதருநல்லமாணவே
யென்னனுபவமெலாமெடுத்தியம்பினே
னுன்னனுபவந்தனையுரைத்தியென்றலுந்
தன்னனுபவந்தனைச்சாற்றன்மேயினான். (௧)

(வேறு.)

ஆகிநின்றழிதலாலுமருவெருப்புடையதாலுங்
காகநாய்கவர்தலாலுங்கனலிடைப்படுதலாலுஞ்

சோகமேவிளைத்தலாலுஞ்சுகதுக்கமறியாத்தாலுந்
தேகநானல்லவென்றுந்தேகிநானென்றுங்கண்டேன். (௨)

இந்தியமான்மாவென்பரிறைவனின்றிருநோக்கில்லார்
முந்தியபிராணன்றன்னையுயிரெனமொழியாநிற்பர்
சிந்தையைமனவகத்தைப்புந்தியைச்சிவனென்பர்
சந்துறுமிவைகட்கெல்லாஞ்சாக்கிநானென்றுகண்டேன். (௩)

பிண்டமாமுடனல்லேன்பிராணவாயுவுநானல்லேன்
கண்டவைம்பொறியுமல்லேன்கரணமோர்நான்குமல்லேன்
பண்டையவறிவனென்றுன்னருள்கொண்டுபார்க்கி
லெண்டிசைகீழ்மேலெங்குமேகனாயிருக்கின்றேனே. (௪)

(வேறு.)

தூலத்தனுவுநானல்லேன்சூக்கத்தனுவுநானல்லேன்
மூலத்தனுவுநானல்லேன்மும்மைத்தனுவும்பொய்யன்றோ
ஞாலத்தனுவைநானென்றேநம்பிக்கெட்டேனெங்காலஞ்
சாலத்தெளிந்தேனினிஞானதனுவேயெனக்குத்தனுவென்றே.

(வேறு.)

கானலைநீரென்றுன்னிக்காதலித்திடுவார்போல
ஆனுடனென்றுன்னியுணர்வினைப்பிரிந்திருந்தேன்
கானலைநீரன்றென்றுகைவிடுவார்கள்போல
ஆனுடனன்றென்றேயுணர்வொடுமுறங்கினேனே. (௬)

ஊனுடல்பொறிபிராணனுறுகரணங்களென்றுங்
கானகங்கடந்தஞ்ஞானக்காரிருட்பரப்புநீங்கித்
தானெனுஞ்சிறார்நீத்துத்தற்பரைப்பொழிலினின்று
மோனியாய்ஞானானந்தமுத்திமாநகரங்கண்டேன். (௭)

வானகம்போலெங்கண்ணுமருவியெப்பொருளுந்தானாய்ச்
சூனியப்பொருளாயொன்றாய்த்துரியமுங்கடந்தபாழாய்
ஞானமாத்திரமாய்நின்றநாதாந்தவின்பந்தன்னைத்
தானறிந்திருப்பதல்லாற்சாற்றிடப்படாதேயெந்தாய். (௮)

(வேறு.)

எல்லாமிறந்தயோகியர்க்குமெட்டாதிருந்தபேரின்பை
யெல்லாநானென்றகங்கரிக்குமேழையறியாப்பேரறிவைச்
சொல்லார்மனத்தாரிறந்திருந்ததுரியாதீதப்பெரும்பாழைச்
சொல்லாலுரைக்கப்படுங்கொல்லோவென்போல்வந்ததாயோனே. (௯)

(வேறு.)

ஆகையாலிதுவேசிவவறிவையுங்கடந்தமுத்தி
யோகமாமறையின்சென்னியுபநிடதத்துமீதே
சேகறுமனத்தாயிந்தத்தேகம்போமளவுநிற்பாய்
சோககட்கத்தால்வெட்டித்துமியெதிர்பிறவியெல்லாம். (௧௦)

ஆ திருவிருத்தம் - உ௯௦.

சுவானுபூதியிலக்கணம் - முற்றிற்று.

---

## குருதோத்திரம்.

காயனையகாயனுக்கிக்கண்டனையகண்டனுக்கிப்
பேயனைப்பிரமமாக்கிப்பிறப்பிறப்பிலாமையாக்கித்
தாயினுமினியனாகிவந்தெனைத்தகைந்தாட்கொண்ட
தூயசற்குரவனின்னைத்தொழுந்தொறுங்களிதுளங்கும். (௧)

(வேறு.)

ஆழ்ந்தேகிடந்தேன்பவக்கடலிலனேககாலம்புகலின்றிச்
சூழ்ந்தேகருணையாலெடுத்துத்துரியக்கரையிற்சேர்த்தாய்க்கு
வீழ்ந்தேவீழ்ந்தேபணிந்திலமறஞ்சிவியந்துவியந்தமகிழ்க்கடலில்
வாழ்ந்தேன்வாழ்ந்தேன்கைம்மாறுகாணேன்வலியத்தடுத்தாய்க்கே. ()

(வேறு.)

மும்மாயைக்கப்பால்முழுப்பாழுக்கப்புறத்தே
சும்மாவிருக்கத்துரியங்கடந்தநலச்
சிம்மாதனமளித்தசிவஞானதேசிகற்குக்
கைம்மாறுபோதமலாற்காணேன்கடையேனே. (௩)

உண்ணுதசோறுமுடுக்காதவத்திரமும்
பண்ணுதபாயும்படுக்காதநித்திரையு
மெண்ணுமெனுவுமியம்பாததோத்திரமுங்
கண்ணுலளித்தார்க்குக்கைம்மாறுகாணேனே. (௪)

தீராதவைம்பொறியுந்தீர்த்துச்சிவமாக்கிப்
பேராதவானந்தப்பிறங்கன்மிசைவைத்தாருக்
காராதவன்பாலகங்குழைந்துமெய்யரும்பிப்
பாராதவெண்டனிட்டுப்பத்திசெயக்கடவேனே. (௫)

கல்லாலின்கீழிருந்தகண்ணுதலென்போலாகிக்
கல்லாவுலகிற்கருணையொடும்வந்தெனக்குச்
சொல்லாதசொல்லையொருசொல்லாலுரைத்தார்க்குச்
சொல்லாதசொல்லானற்றோத்திரங்கள்செய்வேனே. (௬)

(வேறு.)

ஒன்றென்றும்பலவென்று முபயமென்று முருவென்றுமருவென் றுமுறைவதென்று, நன்றென்றுந்தீதென்றுநாமனையென்று ஞானமெ ன்றுஞேயமென்றுஞாதாவென்று, மன்றென்றுமாமென்றுஞ் சமயப் பேய்க ளறைகின்றபிணக்குவழியனைத்துநீத்துக், குன்றலிலாவானந் தக்குரவநின்னைக்கும்பிட்டேனென்பிறவிபின்பிட்டேனே. (எ)

செறிவாகுமலமற்றுமாயையற்றுத் திரிவிதமாங்கன்மமலத்திரளு மற்றுப், பிறிவாகுங்குணமற்றுக்குறியுமற்றுப் பேதாபேதங்களற்றுப் பேச்சுமற்று, வறியாமையறிவற்றுவணந்தகோடு யாதவர்போலெழுகி ன்றபவைாயுமற்றுக், குறியாதவானந்தக்குரவநின்னைக் கும்பிட்டேனெ னபிறவிபின்பிட்டேனே. (அ)

பொய்யாதபுனன்மூழ்கிச்சாந்தமென்னும் பெருடிபூசிக்கருணைம ணிபுனைந்தெஞ்ஞான்று, நையாதவுளமெல்லாநையநாவா லவிலாத மாமனுவைநவின்றுமேலீ, வாயாறுமாறுறுங்கடந்துநின்ற வானந்தத் தேசிகநின்னடிப்போதுக்கே, கொய்யாதமலர்கொண்டர்ச்சித்தேத் த்திக் கும்பிட்டேனென்பிறவிபின்பிட்டேனே. (௯)

ஆசிலன்னமயகோசந்தாண்டியப்பா லழியாதபிராணமயகோசந் தாண்டி, மாசின்மனோமயகோசந்தாண்டியென்று மாறுவிஞ்ஞானமய கோசந்தாண்டி, நாசமுறுமானந்தகோசந்தாண்டி ஞானவடிவாய்நின் றகுரவநின்னைக், கோசமெலாமற்றசிவகோசியாகிக் கும்பிட்டேனெ ன்பிறவிபின்பிட்டேனே. (௧௦)

தத்துவங்களாறுறும்பின்னிட்டப்பாற் றத்துவாதீதமாந்தன்னை க்கண்டு, பற்றொன்றுமில்லாதபரையைக்கண்டு பரிந்துபரிந்துள்ளுரு கியதிலொடுங்கி, வெற்றவெறுமானந்தவுருவங்கண்டு விழையாமல்வி ழைந்தப்பால்வெளியைக்கண்டு, குற்றமெலாமறநீத்தங்கறிவாய்நின்று கும்பிட்டேனென்பிறவிபின்பிட்டேனே. (௧௧)

(வேறு.)

பாசத்தாற்பாசியாகிப்பலபலபிறப்பிற்சென்று
பாசத்தாற்பிறந்திறந்துபலபலபோகந்துய்த்து
பாசத்தைத்தாளாற்போக்கிப்பதித்துவம்பதித்தநாதன்
பாசத்தைநினையுந்தோறும்பசுத்துவங்கழலுமன்றே. (௧௨)

ஒன்றென்பாரொன்றேயென்கவோரிரண்டென்பாரென்க
நன்றென்பார்நன்றேயென்கநவையென்பார்நவையேயென்க
வின்றென்பாரென்கவன்றியுண்டென்பாருண்டேயென்க
வன்றிதாமென்னுமுத்தியடியனேற்களித்தாருசான். (௧௩)

வடக்குளேதெற்குந்தெற்கில்வடக்கையுங்காட்டுவார்போ
லுடற்குளேயுயிருமந்தவுயிர்க்குளேயுணர்வுங்காட்டி

பாழிற்குடியேற்றிப்பரமசுகமெற்களித்தோன்
வாழிநெடுங்காலமாணாக்கர்க்கருள்புரிந்தே. (௪)

பாரோருவிண்ணோரும்பங்கயன்மாலிந்திரனு
மாராய்ந்துங்காணாதலம்வந்தாளந்தளர
வாராமல்வந்தெனக்குமாரூதபேரின்பந்
தாராமற்றந்தார்க்குத்தனுவாதிமைம்மாறே. (௫)

ஆ திருவிருத்தம் - உ௫உ.

விம்மிதவிலக்கணம் - முற்றிற்று.

## நூலருமையிலக்கணம்.

மைப்பொலிமிடற்றோன்சொன்னவாதுளாகமத்திற்சொல்லு
முப்பொருள்விளக்கத்தாலேமும்மலங்களைந்தொன்றாய
சிற்பதம்பெறுவர்மீண்டுஞ்சென்மவாரணியங்காணார்
தற்பரஞானத்தோர்கள்சமயசாத்திரமிகழ்ந்தே. (௧)

ஆகையாலிந்நூலுக்கதிகாரிகும்பந்துன்ப
சாகரமெனத்துறந்துசற்குருசாமிபாத
மோகமீதூர்ந்திழுக்கமுறுக்கவிழ்கமலந்தேடுந்
தாகவண்டனையனாகித்தவிப்பவன்றானேயம்ம. (௨)

(வேறு.)

இந்நூலைப்பருவமிலார்க்கீயற்கவீந்தக்கான்
மூன்னூலைச்சூத்திரர்பான்மொழிந்தகளிசுறுகின்றாய்
நன்மாலைகுரங்கறியாநலம்போலுஞானத்தைத்
துன்மார்க்கரறியாததோற்றம்போலுந்துணிந்தே. (௩)

(வேறு.)

வாழிசுயம்பிரகாசப்பெயரோன்மாணாக்கர்
வாழியெனத்தூக்கிமதிதந்தவார்கழல்கள்
வாழியொருமொழியான்மயக்கறுத்ததிருச்செவ்வாய்
வாழியருள்கொழிக்குந்திருவதனமண்டலமே. (௪)

ஆ திருவிருத்தம் - உ௫௬.

நூலருமையிலக்கணம் - முற்றிற்று.

பதிபசுபாசவிளக்கம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## மூன்றாவது

## சித்தாந்ததரிசனம்.

### பாயிரம்.

### விநாயகர்துதி.

சீரார்சித்தாந்த தெரிசனத்தையாரோதக்
காராணைமாமுகனே கா.

அம்மையப்பனு யுயிருக்காதார மாய் நிறைந்த
செம்மைசிவன் றாளென் சிரம். (௧)

ஒன்றாய னேகவித சத்தியா யுன்மனையாய்
நின்றாடன் பாத நினை. (௨)

சற்குருவாய் முன்னாட் சனகாதி கட்கருளு
முக்கணனை நாவே மொழி. (௩)

திருப்பா சுரத்தானற் சித்தாந்தஞ் செய்தோன்
றிருப்பாத மென்றன் சிரம். (௪)

நின்றதிருத் தாண்டகத்தா னீடுயிர்பொய்ப் போதமற
வன்றுரைத்தோன் றாளகம் வைப் பாம். (௫)

வாழ்வா வதுமாய மென்றுரைத்தோன் மாமலர்த்தா
டாழ்வாமெய் போதுந் தலை. (௬)

சிவபுரா ணத்தகவ லாலுயிரின் சிக்கறுத்தோ
னவமலர்த்தாட் சென்னிநயப் பாம். (௭)

சிவவாக்கி யதேவர் திருமொழியைக் கொண்டே
யவவாக்கி யத்தையடு வாம். (௮)

திருமூலர் மாலையெனுந் தெப்பத்தைப் பற்றிக்
கருவேலை யைக்கடப்போங் காண். (௯)

மெய்கண்டேன் மேற்பிறவி காணேன் றிருவெண்ணை
மெய்கண்டா னூலை விருவி. (௧௦)

முன்னூலிற் சொன்னவொரு முப்பொருளை யும்விரித்திங்
கிந்நூலிற் சொல்வே னிசைத்து. (௧௧)

அவாக்கடலுள் வீழ்ந்தழுந்து மாருயிரைத் தூக்குஞ்
சிவாகமசித் தாந்தக் குறள். (கஉ)

பாயிரம் - முற்றிற்று.

---

## பதியியல்.

மதிதவழுஞ் செஞ்சடையோன் மாமலர்த்தா ளுன்னிப்
பதியியல்பைச் சொல்வாம் பணிந்து. (க)

பதியாவ தொன்றாய்ப் பரிபூ ரணமாய்த்
திதமாகி நிற்குஞ் சிவம். (உ)

அற்றார்கட் கண்ணிதா யல்லார்க்குச் சேய்மையாய்ப்
பற்றறற் றிருக்கும் பதி. (ங)

எங்குமிலை யென்பா ரிதயத் தொறுமறிவா
யெங்குமிருப் பானெம் மிறை. (ச)

உன்மனைக்குமேலா யுருவருவ மின்றாகிச்
சின்மயமாய் நிற்குஞ் சிவம். (ரு)

அசல னகளங்க னனந்த ரூபன்
சசிசேக ரன் சங்கரன். (சா)

சச்சிதா னந்தன் சதாசித்தன் சுத்தன்
மெய்ச்சருவா னந்த விம லன். (எ)

நிராமயனிற் சங்க னிராலம்பன் சோதி
பராபர னாதி பக வன். (அ)

விருப்பு வெறுப்பில்லான் வேதவிதி செய்தோ
னெருப்புருவ னெங்கணிம லன். (சூ)

பத்தர்க்கெளியன் பதிதர்க்கறவரியன்
சித்தத்து ணின்றுஞ் சிவன். (க0)

ஊனக் கண்ணார்க்கொளித்து மூட்புறம்பு மொன்றாய
ஞானக்கண் ணார்க்கருள்வ னாடு. (கக)

மலரயனு யாக்கி மாலாகிக் காத்திட்
டுலைவிலர னாயொடுக்கு வான். (கஉ)

பஞ்சவதி காரத்தாற் பாகம்வரு வித்துயிரைத்
தஞ்சரணில் வைக்கு மிறை தான். (கங)

சிருட்டிதிதி சங்காரந் திரோபாவ ஞான
வருட்டிறத்தோ டைந்தொழில்க ளாம். (கச)

தேகத்தின் மூன்றுமூன்றுஞ் சிவன்பான் மற்றிரண்டு
மாகத்தான் செய்வா னரன். (௧௫)

அவிகாரி யீச னனாதிமுத்த னென்று
லிவிகார முண்டோ விறைக்கு. (௧௬)

ஐவகை யசத்தியினா லைந்தொழிலு மாருயிர்க்காய்ச்
செய்யாமற் செய்யுஞ் சிவம். (௧௭)

வாளிரவி சந்நிதியின் மரைமலர்ந்து வாடிடினும்
வாளிரவிக் குண்டோ மயல். (௧௮)

ஆக்க லளித்த லழித்தன் மறைத்தலரு
ளாக்க விறைக் குண்டோ நுவல். (௧௯)

அரையன்வறிதிருக்க வைந்தொழில்செய் வார்செய்
தரையன்மே லேறு மஃது. (௨௰)

பரமன்வா ளாங்கிருந்து பரையைந் தொழில்செய்தும்
பரமன்மே லேறும் பழி. (௨௧)

ஐங்கரும சாக்கியா யப்பாலைக் கப்பாலாய்ப்
பங்கறனிற் பானெம் பரன். (௨௨)

அறிவுக் கறிவா யவிகாரி யாகி
நிறைதல் பதிநிச் சயம். (௨௩)

கேவலத்துங்காணக் கிடையான் கிளர்ந்தெழுந்த
வாவல்சக லத்துமனு கான். (௨௪)

சாற்றிரண்டு மற்ற சமநிலைய சுத்தத்து
வீற்றிருப்ப னெங்கள் விமலன். (௨௫)

ஆகி லவனை யறியப்ப டாவோபெண்
பாகம் பிரியாப் பரன். (௨௬)

அறியாப் பொருளுமல னறிவாலுன் கண்ணா
லறியும் பொருளு மலன். (௨௭)

ஆகாயம் போல வறிவாகி நிற்பானை
நீகா ணறிவாகி நின்று. (௨௮)

நீருக்குட்டப்பம்போ னின்னறிவி னின்றானைப்
பாரருட்கண் கொண்டு பரிந்து. (௨௯)

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்தானை
யுள்ளுக்குட் பார்நீ யுவந்து. (௩௰)

எங்கு மிருப்பானை யேகமிரண் டென்றமை
லெங்குமாய் நீகண் டிரு. (௩௧)

மோகமுறு பெத்தத்துண் மூடர்க் கிரண்டாகு
மேகமே முத்தருக்கீ சன். (௩௨)

இன்ப மயனீச னின்பம் விளைத்தலாற்
சம்புவெனும் பேருந் தகும். (௩௩)

குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப்
பருவரலை நீக்கும் பரன். (௩௪)

போக்குவர வில்லாத பூரணா நந்தர்க்குப்
போக்குவர வுண்டோ புகல். (௩௫)

ஆருயிரி னுள்ளினிருந் தாங்காங் கறிவிப்பா
ராருயிரோ மேனி யவர்க்கு. (௩௬)

அறிவுக் கறிவா யறிவிப்பான் சில்லோர்க்
கறிவுருவு கொண்டருளு வான். (௩௭)

பார்த்தும் பரிசித்தும் பஞ்சமலக் கொத்தையெலா
நீத்தொழிப்பா னெங்க ணிமலன். (௩௮)

பக்குவர்க்குத் தோன்றும் பயன்கொடுக்கு மற்றொழிந்த
பக்குவர்க்குத் தோன்றியுமென் பாழ். (௩௯)

பாற்கடல்போ லாவி பலமீன்போ லாருயிர்கள்
பாற்கடலா லுண்டோ பயன். (௪௦)

அருட்கண்ணார்க் கீச னலரொளியாய் நிற்பன்
மருட்கண்ணா ருக்கிருளா மன். (௪௧)

செங்கதிரோன் வந்துதயஞ் செய்தாலு நாட்டமிலோன்
செங்கதிரோ னில்லையெனுஞ் சீர். (௪௨)

மனவாக்குக் காய மசையாம னிற்பர்
சனுதவின் பத்தைத் தழீஇ. (௪௩)

பூனை விழிக்கியுறு பொங்குமிரு ளற்றதுபோல்
ஞானவிழிக் கில்லை நவை. (௪௪)

சிதம்பரமா யெங்குஞ் செறியினுமென் னாவி
மதமடங்கிக் காணு வகை. (௪௫)

கூகை யறியாக் குலவுங் கதிரவனை
மூகரறி யார்சிவனை முன். (௪௬)

கண்ணிரவி யின்றிக் கலந்தறியா தொன்றையுமக்
கண்ணுங் கதிருமொன் றோ காண். (௪௭)

காக்கை விழிக்குக் கருமணியொன் றாற்போ
லாக்கைக்குச் சாக்கி யவன். (௪௯)

அத்துவித மொன்றேயா மாங்கிரண் டின்மையெனி
லத்துவித மன்றோ வது. (௪௬)

துவிதமிரண் டாகுமத் துவிதமொன் றாகுந்
துவிதமயல் கெட்டோய் துணி. (௫௦)

அத்து விதத்துக் கருத்தம் பலவென்னுஞ்
சிற்றறிவு கொண்டசில கீழ். (௫௧)

பதியியல் - முற்றிற்று.

---

## பசுவியல்.

சசிசே கரகுரவன் றாடலைமேற் கொண்டு
பசுவியலி னைப்பகரு வாம். (௧)

பசுவென்ப தான்மாமுப் பந்தமுளா னன்றே
சசிசே கரனிறைவன் றான். (௨)

கட்டியவன் றானவிழ்க்கி னல்லாற்றன் கண்ணறிவா
லெட்டுணையுந் தானவிழ்க்கா தின்று. (௩)

ஆணவத்தான் மூடமா யன்றுமுத லின்றளவும்
வீணவத்தைக் குள்ளே விழும். (௪)

இருட்டறையிற் கண்ணி விளங்குழலி போலு
மருட்டறையி லாவி மயங்கி. (௫)

மெய்ஞ்ஞானக் கண்ணை மிகமறைப்ப வாவியா
ரஞ்ஞானக் கண்ணி லழுந்தும். (௬)

பாம்பின்வாய்ப் பட்ட பருதியைப்போ லஞ்ஞானப்
பாம்பின்வாய்ப் பட்டழுங்கும் பார். (௭)

உவர்மூடு சிந்து முமிமூடு நெற்போற்
சவிமாறு மாணவத்தாற் றான். (௮)

ஈசனி ரங்கி யிணையில்கலைக் கரத்தாற்
பாச நெகிழ்த்திடலும் பண்டு. (௯)

தனுவாதி நாலைத் தழுவிவெளிப் பட்டு
நனவாதி யைந்தினை நண்ணி. (௧௦)

யானென தென்னு மிருசெருக்கா லாருயிர்கள்
யோனிபே தத்துழலு மூற்று. (௧௧)

புற்ருறு இடங்கள் புள்விலங்கு மானிடர்கள்
சொற்றேவ ரேழ்வகைத்தோற் றம். (கஉ)

அண்டசஞ்சு வேதசமுற் பீசஞ்ச ராயுசங்கள்
மண்டியநால் யோனி வகுப்பு. (கங)

எண்பத்து ஞன்கிலக்கம் யோனிதொறும் புக்குறுவாய்ப்
புண்பொதியு மியாக்கை புணரும். (கச)

புல்லாய னேகவுருப்போனபினர் நல்லறுகம்
புல்லாய்ப் பிறக்கவது போம். (கரு)

பூமரங்களாய்ப்பிறந்து புண்ணியனுக் கானமையாற்
போமரத்தி ஞர்பிறவி போல். (கசு)

புண்ணியதீர்த்தத்துட் புழுவாய்ப் பிறந்தமையாற்
கண்ணும் புழுப்பிறப்புக் காண். (கஎ)

புள்ளா யனேகவுருப் போயபினர்ப் புட்பிறவி
விள்ளுநதி தோய விரைந்து. (கஅ)

துட்டமிரு கப்பிறப்பிற் றுதைந்து நெடுங்காலங்
கட்டப்படு முயிரார் காண். (கக)

எல்லாவுருவு மெடுத்தெடுத்து நல்வினையா
னல்லா வுருவாகு நாடு. (உ0)

ஆனைந்து மைம்முகனுக் கபிடேக புண்ணியத்தா
லானுருவை நீங்கு மற. (உக)

ஆனுருவ நீங்குதலு மளவில்சிவ புண்ணியத்தான்
மானிடரா யிங்ஙன் வரும். (உஉ)

வேதாக மம்வழங்கா மேதினியிற் போய்ப்பிறந்திட்
டாதார மின்றியலை யும். (உங)

உடம்புமுக மொவ்வா வுருவமெடுத் துப்பின்
விடம்புரையுந் தானம் விடும். (உச)

நல்லசிவ புண்ணியத்தா னல்லார் பயிறேய
மெல்லவரு மாவிக்கு மெய். (உரு)

கிடையாத வாக்கை கிடைத்துமென்கொ லாவி
யடையாச் சிவனடி யாய்ந்து. (உசு)

இந்தமனி தப்பிறவி கொண்டறிவை யெய்தாம
லந்தரிக்கு மைம்புலன் களால். (உஎ)

அன்னை யுலகன்னை யப்பனம்மை யப்பனென்று
முன்னுதலை யுன்னு துயிர். (உஅ)

ஒப்புக்கு வந்தாரை யுற்றார்பெற் றாரென்னுங்
கப்புவினை யான்மயங்கிக் காண். (உகூ)

முந்தை வினையான் முகிழ்முலையா ராசையெனும்
பந்தக் கடலுட் படும். (௩0)

என்றந்தை யென்றாய வென்மனைவி யென்னொக்க
லென்சாதி யென்னவியம் பும். (௩க)

உயிர்ச்சார்வா லாவி யுணர்வழிந்து காகங்
குயிற்சார்வை யொக்குங் குறி. (௩உ)

தானல்லாச் சங்கடத்தைத் தானென் றிருமாக்கு
ஞானமிலா தாய நரர். (௩௩)

எல்லாமிறந்தாலும் யானிறவே னென்றோதுங்
கல்லாமை யாலுங் கடை. (௩௪)

பொருட்சார்வா லான்மாப் புழுங்குமெரி புக்க
கரிச்சார்வை யொத்துக் கடை. (௩ரு)

சனகாதிக் கீசன் றனித்திருத்தல் கண்டு
மனை வாழ்க்கை யைத்துறவாமல். (௩சு)

நல்லாரைத் தூடித்து நவைக ளெடுத்தோதிப்
பொல்லாரைக் கண்டுபுக ழும். (௩எ)

ஒழுக்கமுடை யார்சொல்லை யுற்றுக்கே ளாம
லிழுக்கர்மொழி கேட்கு மிசைந்து. (௩அ)

என்னுடம்பி தென்கால்கை யென்வயிறீ தென்விழிநா
வென்சென்னி யென்றுமயங் கும். (௩கூ)

ஆக்கை சடமென்று மான்மா வறிவென்று
நோக்காது நூலின் வழி. (௪0)

சன்மத்தா லாவிகறங்காய்ச் சுழன்றுழந்து
சென்மித் திறக்குந் தெரி. (௪க)

தந்தைவிந்து வாகனமாய்த் தாயுதரத் தேநுழைந்து
பந்தப் படுமறிபத் தும். (௪உ)

அன்னையகட்டி லனேகதுய ரென்சொல்கே
னென்னைப் பிறவி யிது. (௪௩)

இனிப்பிறவே னீசனருள் பெற்றுய்வே னென்னு
நினைப்பு மறக்கு நிலத்து. (சுச)

பிறக்கும் பொழுதுமிகும் பேரிடும்பை பின்னுந்
துறக்க முடியாத் துயர். (சுரு)

சுகர்வாம தேவர் துறந்தாரித் துன்பை
யகன்ஞாலத் தியார்க்கு மரிது. (சுசு)

குழந்தை பருவத்துங் குமார பருவத்
தழுந்துந் துயருக் கணு. (சுஎ)

காயவிளக் களித்த கண்ணுதலை யுள்ளாமன்
மாயையினை யுள்ளு மனம். (சுஅ)

இல்லத் திருந்தெழிலா ரேந்திழையா லார்ப்புண்டு
புல்லிக் கிடக்கும் புயம். (சுகூ)

வசம்புந் தசையு மலசங் குலமாம்
பசுந்தொடியைப் புல்லும் பசு. (ருo)

நாற்ற விதழ்ப்புனலை நாணும லுண்ணும்பின்
காற்றுணையில் வீழுங் கரைந்து. (ருக)

இன்னணமா யாவி யிளமையினை நீத்திட்டுத்
துன்னுமுறு மூப்பைத் தொடர்ந்து. (ருஉ)

நல்லிளமை காலத்தி னுதனைச்சற் றுன்னுறு
கொல்மூப்பா லாவிகுலை யும். (ருங)

அமுதத்தாற் கால்கழுவி யாதனத்தனுய்கடவிச்
சமிதைமிசை யேறுந் தனி. (ருச)

காலபடர்க் கண்டஞ்சிக் கண்ணீர் சொரிந்தழுங்கி
யோலமிடு மந்தோ வுயிர். (ருரு)

மாசற்ற சோதி மலரடியை யுன்னுமற்
பாசத்தை யுன்னும் பசு. (ருசு)

இவ்வண்ண மான்மா விறந்து பிறந்துழலு
மவ்வண்ண மின்றி யொதுங்கி. (ருஎ)

மாலாயயனுய் மகபதியாய் வானவராய்
மேலாய வாக்கைவிர வும். (ருஅ)

புண்ணியத்தான் மேலேறும் பாவத்தாற் கீழிறங்கும்
புண்ணியபா வத்தாற் புவி. (ருகூ)

ஈகைதவ மின்றி யிரக்கமறி வின்சொல்லு
மேக விருக்கு மிவண். (சு0)

அபுத்திபுத்தி பூருவத்தா லாங்கிருநா லெய்திச்
சுபுத்திவரு மாவிதுலங் கும். (சுக)

மூர்த்திகள்சே வித்தத்துந் தீர்த்தத்துண் மூழ்கியத்துஞ்
சேத்திரத்திற் சென்மித்தத் தும். (சுஉ)

தெய்வஞ் சிவமென்னுஞ் சித்தமுண்டா மக்கணமே
யுய்யுநெறி யுண்டா முயிர்க்கு. (சுங)

ஈசனடி யார்க்காணி லென்புருகிக் கைகுவித்து
மாசில்சரி தைக்குள் வரும். (சுச)

சென்றா லயந்தோறுந் தீபமல கிட்டுருகி
நன்றா மலர்தொடுக்கு நாடு. (சுரு)

பருப்பதங்கே தாரம் பகர்காசி காஞ்சி
திருப்பதிநற் காளத் திரி. (சுசு)

கழுக்குன்றஞ் சோணகிரி கனகசபை யோத்தூர்
செழுக்கமலை சிரொற்றி யூர். (சுஎ)

விரிஞ்சிபுரந் தீர்த்தகிரி வெண்கா டிடைமருது
சிரபுரங் கோகன்னந் தினம். (சுஅ)

ஈச னிருக்குமிட மீதெல்லாஞ் சென்றிறைஞ்சிப்
பாச மறுக்கும் பசு. (சுகூ)

முன்னோன் சரிதைமுற்றி முற்கிரியை வந்தணைந்திட்
டுன்னுசுத்தி யைந்தினை யுற்று. (எ0)

மிருத்திகைலிங் கத்தின் விதிப்படியர்ச் சிக்கின்
மரித்தல் பிறப்பகற்று மால். (எக)

பால்வண் ணமான படி கலிங்கம் பூசிக்கின்
மால்வண்ண நீங்கு மதி. (எஉ)

மன்னும் படிகத்தின் வாணலிங்க மேயதிகம்
பன்னுசுயம் பாதலினாற் பண். (எங)

மூவிலிங்கத் தும்பூசை முற்றிற் சிவனருளா
லாவியிலிங் கத்தையணை யும். (எச)

திருப்பணியி னாலுஞ் சிவபூசை யாலுங்
குருக் கரணமாகுங் குறி. (எரு)

அந்தரியா கப்பூசை யாலு மகந்தெளிந்து
சிந்திதயோ கத்திற் செலும். (௭௬)

ஐயெரிநாப் பண்ணின் றனிலந்த னையடக்கித்
துய்ய மதியமுதந் துய்த்து. (௭௭)

ஆதார மாறுங்கண் டப்பாற் பரவெளியி
னாதாந்த வின்பத்தை நாடி. (௭௮)

ஊனமிலா யோகத்தைச் சின்னா ளொழுக்கியொரீஇ
ஞானத்தைத் தாவுமுயிர் நாடு. (௭௯)

ஈச னருணூலை யெஞ்ஞான்று காண்பமெனு
மாசை பெருகு மற. (௮௦)

வினையொப்பு பாகம் வியன்சத்தி பாதந்
தனையெய்து மெய்துந் தரம். (௮௧)

துறவு மவாவிற் றுயரும் பிறப்பி
லுறவு மருட்பாலு முறும். (௮௨)

பிறவாமை கள்ளாமை பேணிவெகு ளாமை
மறவாமை மற்றுமரு வும். (௮௩)

கொல்லாமை தின்னாமை கோள்குறளை குத்திரங்கள்
சொல்லாமை யாவுந் தொடும். (௮௪)

பாசவெறுப்பும் பரவிருப்பும் வந்தவுயி
ராசானால் முத்தியடை யும். (௮௫)

தந்தைதமர் மேல்வெறுப்புஞ் சங்கரன்றன் மேல்விருப்புஞ்
சிந்தையிடை வந்துதிக ழும். (௮௬)

அத்திகழ்வா லீச னருளுருவு கொண்டருளி
முத்தியடை விப்பன் முறை. (௮௭)

பசுவியல் - முற்றிற்று.

---

## பாசவியல்.

பாசவிய லைந்து பகுப்பா யிருக்குமதை
யீசனருள் கொண்டியம்பு வாம். (௧)

மல்மாயை கன்மமா மாயைதிரோ தாயி
குலமொன்று வேறுங் குணம். (௨)

பாசமறி யாமை பகராண வம்விச்சை
மூசுபெத்த மூல மலம். (௩)

அனேகவித சத்தியினு லாருயிரை மூடுந்
தினகரனைப் பன்னகம்போற் சென்று. (சு)

அன்னியத்தைக் காட்டி யனன்னியத்தைத் தான்மறைக்கு
மென்னே மலத்தி னியல். (ரு)

தண்டுலத்தைச் சில்லுமியுந் தாம்பிரத்தைக் காளிதமு
மண்டுதல்போ லாவிமறைக் கும். (சு)

ஆனை யுலாவு மடவியைப்போ லாருயிராங்
கானிலுலாவு மலங் காண். (எ)

கிஞ்சிக் கியன்மூடன் கேடன் கொடும்பாவி
வஞ்சனித னல்வந் தது. (அ)

பாசன் பெரும்படிறன் பாமரன்பே ராங்காரி
மாசனித னல்வந் தது. (கூ)

கன்மவிருப்புங் களேபரத்தில் வாஞ்சனையுங்
குன்மமலத் தின்றீக் குணம். (க0)

இச்சைவழி சென்றங் கிருவினையை யீட்டிவரல்
கொச்சைமலத்தின் குணம். (கக)

தாட்டுணைக்கீழ் நின்றபினுஞ் சாதிபா ராட்டலிந்தக்
கோட்ட மலத்தின் குணம். (கஉ)

ஈச னகத்திருக்க வில்லையெனக் கூறலிந்தக்
கூசு மலத்தின் குணம். (கங)

ஆசையுறுங் காலமெலா மாலிங் கனஞ்செய்யு
மாசு மலமா மகள். (கச)

உலகந் தெரியா துபத்தத் தடக்குங்
கலகமலக் கன்னி கை. (கரு)

உண்ண வுறங்க வுயிர்க்கும் பொழுதெல்லா
மெண்ணைப் பிரியா ளிவள். (கசு)

கன்மமகப் பெற்றநின்பாற் காயமெனும் பேரனையுஞ்
சென்மிக்கப் பண்ணுந் திரு. (கஎ)

அந்தோ மலத்துயர மாற்றகிலே னுற்றகிலே
னெந்தா யிரங்கா யினி. (கஅ)

கலையாங் கரத்தாலிக் கட்டவிழ்த்தாற் றீதோ
வலரோ வடியேற் கருள். (கசு)

ஈச னருளுதய காலத் திறக்குமிது
பேசுவா மாயைப் பெயர். (உ0)

மாயை சடமயக்க மதந்தா மதம்பொய்ம்மை
காயம் விளக்குக் கறு. (உக)

மூலே யிருந்தாரை முத்தத்தில் விட்டதன்றிச்
சாலப் பெருமயக்கந் தான். (உஉ)

பிருதிவியப் புத்தேயு பெருமருத்து வானேம்
பொறிபுலன் கன்மேந் தியம். (உங)

மனம்புத்தி யாங்கார மாருத சித்த
மினமான்ம தத்துவமென் றெண். (உச)

காலநியதி கலேவித்தை ராகமொடு
மாலும் புருடன்மா யை. (உரு)

முன்னான்ம தத்துவமும் பின்வித்யா தத்துவமுஞ்
சின்மாயை யார்தந் திரம். (உசா)

சுத்தவித்தை யீச்சுரம்பின் சொல்லுஞ் சாதாக்கியங்கள்
சத்திசிவ மைந்துந் தனி. (உஎ)

சிவதத் துவமிதனுற் சேட்டிக்கு மெல்லா
மிவைதந்த மாமாயை யெண். (உஅ)

ஆறாறுக் குள்ளா யகப்பட் டுயிர்சுழலு
மாறுப் பிரானே மறந்து. (உகூ)

மயிரொலும்பு தோனரம்பு மன்னுதசை யைந்துஞ்
செயிர்புவியின் கூறென்று தேர். (ஙo)

ஓடும் புனலுதிர மொண்சுக் கிலமூளே
கூடுமெச்சை யப்புவின்கூ று. (ஙக)

ஆகாரந் தூக்கம் பயமை துனஞ்சோம்பு
நீகாணெ ருப்பின்கூ று. (ஙஉ)

ஓட்ட நடைகிடத்த லூற்றிருத்த னிற்றலேந்துங்
கூட்டனிலன் கூறென்று கொள். (ஙங)

காமங் குரோதங் கழிலோப மோகமதஞ்
சேமவிசும் பின்கூறு தேர். (ஙச)

வாயுமொரு பத்து மலிநாடி யோர்பத்து
மோயகுண மூன்றக மூன்று. (ஙரு)

வசனாதி யைந்தும்பின் வாக்காதி நான்கு
மிசையுந்தொண் ணூற்றாறு மெண். (௩௬)

இதற்குள்ளாயாவி யிறந்து பிறந்தே யுழலு
மதுக்கொன்றை யானை மறந்து. (௩௭)

காய்விளக்களித்த கண்ணுதலை நண்ணி லிந்த
மாயைப் படலமறை யும். (௩௮)

நனவின்முப் பானைந்து நற்கனவி லையைந்து
மூனைசுழுத்தி யிற்கருவி மூன்று. (௩௯)

துரியத்திரண் டாகுந் துரியாதீ தத்திற்
கருவியொன்றா மைந்தவத்தை காண். (௪௦)

அந்தரங்கத் துள்ளிருந் தனையர்புறம் போதல்போ
லந்தரங்கத் துள்ளாவி யும். (௪௧)

ஆணவத்தான் மூடனு மாயையாற் கிஞ்சிகனும்
பூணும்வினை யாற்புருட னும். (௪௨)

குருவையெதிர் தூடித்தல் குற்றமெடுத் தோதல்.
குருக்கொல்லன் மாயா குணம். (௪௩)

பற்றற்றார் கண்ணும் பருவரலைச் செய்வித்தல்
குற்றமிகு மாயா குணம். (௪௪)

ஈசனிலை யாவியிலை யீசனடி யாரில்லை
மாசகலா மாயா மகற்கு. (௪௫)

நூலில்லை கேள்வியில்லை நுண்ணறிவு மில்லையால்
மாலகலா மாயா மகற்கு. (௪௬)

ஞானமிலைப் பத்தியிலை நல்லார்கண் ணட்புமிலை
மானமிலை மாயா மகற்கு. (௪௭)

முன்னவன்பா தாம்புயத்தின் முற்று மெனையடைக்கா
தன்னை வயிற்றிலடைக் கும். (௪௮)

மாயை விளக்கவியா தவியமா தேவனருண்
மோய வெயின்முகிழ்க்கு மோ. (௪௯)

மாயா புரமெரித்த மதிசேக ரர்க்கின்றென்
மாயாபு ரம்வலிதோ மற்று. (௫௦)

இம்மாயை நட்ட மெழிற்சோகம் பாவனையாற்
கன்மமலக் கட்டுடைப்பேன் காண். (௫௧)

கன்மம் வியாபி கடம்போற் சடமன்று
சென்மிக்கப் பண்ணுஞ் செயல். (௫௨)

வல்வினையாந் தாயகட்டில் வந்து பிறந்தனைவால்
நல்வினையுந் தீவினையு நாடு. (௫௩)

நல்வினையாற் புண்ணியமு நவிறீதாற் றீவினையுந்
தொல்லை வினைக்கேற்பத் தொடும். (௫௪)

முற்சொன்ன ஆழ்வினையான் முடியா விகாரமுறு
முற்சாக நன்முயற்சி யுற்று. (௫௫)

முயற்சியா லீசனையும் பின்னிட்டு முந்திப்
பயிர்செய்யு மூழ்வினையின் பால். (௫௬)

ஊழ்வினையாற் சஞ்சிதமு முலவில்பிரா ரத்தமுமேல்
வீழுமா காமியமு மே. (௫௭)

விருப்பும் வெறுப்புமாய் வேண்டல்வேண் டாமை
மரிப்போ டுதிப்பும் வரும். (௫௮)

கறங்குவரி கொள்ளிவட்டங் கடிதிற் சுழல்வண்
டுறுங்குலா லன்றிகிரி யொப்பு. (௫௯)

மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றவத்தை மூன்றுதுக்க
மூன்று பிராரத்த மொழி. (௬௦)

காமம் வெகுளி மயக்கமிவை மூன்றும்
வாமச் சமையத்தார் மாட்டு. (௬௧)

சாத்துவிதஞானஞ் சமநிலைய மற்றிரண்டுஞ்
சாற்றி லிருளொளியுந் தான். (௬௨)

சாக்கிரமுஞ் சொப்பனமுந் தணவாச் சுழுத்தியையும்
போக்கிற் றுரியம் பொருள். (௬௩)

ஆன்மீகம் பௌதிக மறையுந் தெய்வீகமிவை
யான்மாவுக் கில்லை யறி. (௬௪)

முன்னைவினைப் பின்னைவினை மூவா நிகழும்வினை
யுன்னை யணுகாமை யோர். (௬௫)

இச்சைய னிச்சை பரவிச்சை யிம்மூன்று
ணிச்சஞ் சுழலு முயிர் நின்று. (௬௬)

தன்னிச்சை யால்வருத முனிச்சி யாதுறுத
லன்னியரால் வந்தடைத லாம். (௬௭)

ஆன்மீகந் தெய்வீக மான பவுதீகந்
தான்மேவு மான்மாத் தனித்து. (௬௮)

மன்னவராற் கள்வரான் மாவாலுறுபிணியா
லின்னலுற லான்மீக மெண். (௬௯)

தாயகட்டிற் றங்க றரணிதனில் வந்தழித
லாயிற் றெய்வீக மெனலாம். (௭0)

வானி லிடியான் மழையான்மற் றச்சடத்தா
லூனமுறல் பௌதிகமா யோர். (௭௧)

சஞ்சிதமுன் கட்டுவினை சற்குருநோக்காற்சரியும்
பஞ்சுமலை பட்ட நெருப்பாய். (௭௨)

உள்ளப் பொசிப்பெல்லா முண்டொழிப்ப தன்றியிதைத்
தள்ளப் படாதெவர்க்குந் தான். (௭௩)

கொடுப்பானு மீசனதைக் கொள்வானு மீசனெனின்
மடுக்காவெதிர் வினைகள் வந்து. (௭௪)

ஞானபுலிவாழ்காட்டி னள்ளிரலை வாழுமோ
தானசிப்ப தல்லாற் றரித்து. (௭௫)

வறுத்தவிதையுண்ப தன்றிமா நிலத்தைக்கீன்று
செறித்துவிதைப் பாரோ தெளி. (௭௬)

வெறுப்புவிருப் பாற்பிறப்பா மேலைக்கிப் போதே
வெறுப்புவிருப் பற்றால் விடும். (௭௭)

கூத்தியைப்போற் பாவங் குலக்கொடிபோற் புண்ணியங்க
ணீத்தார்க் கிரண்டு நெருப்பு. (௭௮)

நாடுவினை யொப்புவந்த நாதாந்த யோகருக்கிங்
கோடுந் திரவியமு மொன்று. (௭௯)

இருவினை யொப் புற்ற வுயிரிதயத் தானந்
திருவம் பலமிறைக்குத் தேர். (௮0)

நற்சாதி துர்ச்சாதி நல்லாயுதத் தீயாயு
நற்போகந் துர்ப்போக நாடு. (௮௧)

நல்வினையா னாகம்போந் தீவினையாற் றீநிரயஞ்
செல்லு முயிரொன் செயும். (௮௨)

நல்லன்சிறு புல்ல னபுஞ்சன் விதுரனெனத்
தொல்கருமத் தார்தந் தொழில். (௮௩)

உன்ன லொருகால்பின் னுரைத்தலிரு காலதனைத்
துன்னன்முக்கா லொன்றே தொழில். (அச)

இன்னவகை யெவ்வுயிர்க்கு மேறுமிரு வினையு
முன்ன லொருக்கிலொழி யும். (அரு)

சற்கன்மத்தாலே தனுவைநா னென்றுவருந்
துர்க்கன்ம மெல்லாந் தொலை. (அசு)

இக்கன்மத் தாற்றுயர மென்சொல்கே னென்சொல்கேன்
முக்கண்ண நீயே முகிழ். (அஎ)

கன்ம வெயில்கற்றிக் காற்கமல நீழலின்க
ணென்னை யிருத்தா யினி. (அஅ)

அவிகாரி யீச னருளுதய காலஞ்
சவிமாளுங் கன்மமலந் தான் (அகூ)

ஓமாதி வாக்கியமா யுயிரறிவுக் கூடியமா
மாமாயை தன்னைவகுப் பாம் (கூ0)

வேதாக மங்கலைகள் விஞ்ஞானர் மாலாதி
நாதர்க் குடலாதி நாடு. (கூக)

எண்பத் தொருபதமு மேழ்கோடி மாமனுவு
மைம்பத்தோ ரக்கரமு மாம். (கூஉ)

சரிதாதி மூவர்க்குச் சாலோக மாதி
விரிபதமூன் றாகியுமே வும். (கூங)

இரவிலெழு சந்திரன்போ லென்றாழ்வரு மளவும்
விரியபர ஞானமாம் விந்து. (கூச)

இந்தவிந்து ஞானமின்றே லெவ்வுயிர்க்கு மெஞ்ஞான்றும்
பந்தமுத்தி யில்லையாம் பார். (கூரு)

சிவஞான சூரியன்முற் சீவமதிப் பல்கருவி
யவஞான மீனு மறும். (கூசு)

சனகாதி கட்கன்று சாற்றபரம் பொன்ற
வுனதபரஞ் சொன்னவனே யுற்று. (கூஎ)

அபர வுணர்வை யறவகற்றி யென்பாற்
சுபரம் வருமாறு சொல். (கூஅ)

மாமாயை யீசனருள் மாறுதெதிர்ந் தன்றிப்
போமாறு முண்டோ புகல். (கூகூ)

மறைப்புருவ மாயறிவின் மாறுசெயும் பொல்லாச்
சிறப்புமலஞ் சொல்வாந் தெரித்து. (க00)

அன்னை யருட்சத்தி யாவிமலம் பொன்றப்
பின்னைத் திரோதானப் பேர். (க0க)

இருவினையொப் பாவிக் கெய்தளவுஞ் செய்யுந்
திரைமயக்க மாறித் தினம். (க0உ)

மடித்துயிரின் வல்வினையை மாறுதருந்தி
யடித்துப் பாலூட்டு மருள். (க0௩)

செகத்தை மறைத்துச் சிவங்காட்டிப் பின்ன
ரகத்தை மறையா தருள். (க0௪)

மலமொழிந்த காலத்து மாறுந்தி ரோதை
சலமில் சிவஞானத் தாய். (க0௫)

அச்சோ நெடுங்கால மாவிநிகைத் தெய்த்தலைந்தே
னற்சோம சேகரனே நான். (க0௬)

பஞ்சமலத் தாலிடுக்கண் பட்டுயிர்க ளெஞ்ஞான்று
நஞ்சணிகண் டத்தனை நாடா. (க0௭)

கோடிசிவ புண்ணியத்தாற் குவியு மனம்பின்னர்
நாடுஞ் சிவனை நனி. (க0௮)

பாசவியல் - முற்றிற்று.

---

## பாசமோசனவியல்.

சிவஞான தீக்கையினாற் றிணிமலந்தீர்ந் தாவி
சிவமாதல் சொல்வாந் தெரித்து. (க)

அஞ்சு மலத்தாலு மாவிபடுந் துயரம்
வஞ்சிபங்கன் றீக்கையின்மா யும். (உ)

மீன்போற்றிரு நோக்கால் விமல னுருவாக்குந்
தான்போக்கி நின்ற தரம். (௩)

ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமாற்
காமாதி நீத்தவனைக் காண். (௪)

கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறுத்தாளு
மாழிவிட முண்ட வரன். (௫)

திருநோக்கான் மூலமலந் தீயும் பரிசத்தா
லிருண் மாயைக் கூட்டமிரி யும். (௬)

திருமொழியாம் கன்மமலஞ் சிந்துந் தியானத்தாற்
பெருமாயை போயொழியும் பின். (௭)

சிவநூலாற் பொன்றுந் திரோதையப்பா லாவிச்
சிவதீக்கை யாலாஞ் சிவம். (௮)

பசைநீங்கு மாருயிர்க்குப் பரமசிவன் சொன்ன
தசகாரிய மறைவன் றான். (௯)

கருவிசட மென்றவற்றின் கன்மத்தைக் காண்டல்
கருவிக் குருவமெனக் காண். (௧௦)

தத்துவத்தா னுமறியோஞ் சாட்சிநமைக் கொண்டறித
லுற்றுணர்தல் காட்சியா யுன். (௧௧)

பாசக் குழுக்குப் பதிநா மெனத்துறத்தல்
பாசசுத்தி யென்னப் படும். (௧௨)

சைதன் னியவுருநா னென்று தமநீங்கல்
சைதன்னிய னுருவந் தான். (௧௩)

எனைவிடவே றில்லையியானே பரப்பிரம
மெனவுணர்த றற்றெரி சனம். (௧௪)

சீவனுக்குச் சாக்கி சிவமென் றுணர்தலே
சீவனுக்குச் சுத்தியெனத் தேர். (௧௫)

சிவனன்றி யாருயிர்க்குச் சேட்டையிலை யென்னரில்
சிவரூப நன்றாய்த் தெளி. (௧௬)

எவ்வுயிர்க்கும் போத மிறையென் றறிதலே
செவ்வே சிவதரி சனம். (௧௭)

அந்தச் சிவநம்மை யன்றியிலை யென்றோர்த
லுந்துஞ் சிவயோக மோர். (௧௮)

உவனிவனென் றுன்னுதங் கொன்றாகிப் போதல்
சிவயோக மென்றே தெளி. (௧௯)

பத்துவித காரியத்தா லாவி பசையற்று
முத்தியிடை நிற்க முறை. (௨௦)

பத்தைவிட வுண்டோ பரமபத மாருயிர்க்குச்
சித்தைவிட வுண்டோ செயல். (௨௧)

ஈரைந்து காரியத்தா விச்சையறு மாருயிர்க
டாரமிழந் தானைத் தக. (௨௨)

உள்ளமொடுங்கி யுரையொடுங்கி யானந்த
வெள்ளத் தழுந்திநிற்கு மேல். (உங)

பெத்தத்தை நீங்கிப் பிராணே டிரண்டற்று
முத்தத்தி னிற்கு முதல். (உச)

ஐந்தடக்கி யாறுடுக்கி யம்பரம்போ லொன்றுகிச்
சந்தற்று நிற்குமுயிர் தான். (உரு)

விமரிசஞா னத்தால் வெறுப்புவிருப் பற்றுச்
சமரசத்தை யெய்துந் தனி. (உசு)

கண்ணு முயிர்களெல்லாங் காசத்தை மோசித்து
விண்கதிரோ டொன்றுய் விடும். (உஎ)

அறிவி லறிவை யறியா தறிந்து
குறியிறந்து நிற்குங் குலம். (உஅ)

ஐந்தவத்தை சென்றுலு மாவரண மற்றதவர்
சிந்தைசிவன் பாலே தெளி. (உகூ)

ஆமயத்தை நீங்கி நிராமயத்தை யாதரிக்கி
னுமயம்போ நீயே யவன். (௩0)

பின்னபின மாய்நோக்கும் பேசிற் கடையிடைக
டன்னையே நோக்குந் தலை. (௩க)

அவயவமோ நிரவயமோ வான்மா வறியேன்
புவனகுரு நாதா புகல். (௩உ)

உணருமுயி ரில்லை யுடம்பே யுயிரொன்
றுணர்வ னுலகா யுதன். (௩௩)

நான்பருத்தே னிளைத்தே னென்றுரைக்கு ஞானத்தா
லூன்சடல மன்றே யுயிர். (௩ச)

ஊமனெனி யில்லையெனி லொப்புவரோ வத்தன்மை
யேமவுயி ரின்றென்பா ரில். (௩ரு)

உள்ளே யிருந்த வுயிர்போன தென்றுலகஞ்
சொல்லுவதென் கொல்லோநீ சொல். (௩சு)

அவயவமே காய நிரவயமே யான்மா
வவயவமே தோன்றியழி யும். (௩எ)

கட்டை யடுக்கிக் களேபரத்தை மீதடுக்கிச்
சுட்டிடுவ தென்கொல்லோ சொல். (௩அ)

உடல்கிடக்க வாவி யோடியதென் றியாருங்
கடல்போற் கதறுவதென் காண். (௩௯)

மூட வுடலுயிரோ மூடா விதென்கொலுயிர்
கூடாமோ பக்கிக் குலம். (௪௦)

உணர்ச்சியுயி ரில்லையோ வென்றுரைக்குஞ் சொல்லை
யுணராயுலகா யுதா. (௪௧)

ஆக்கையகத் துள்ளேநல் லான்மா வுளதென்று
தூக்கிமறை சொல்லுந் துணி. (௪௨)

இந்தியமே யான்மாவென் றெண்ணு மறிவில்லா
மந்தச் சவலை மதம். (௪௩)

சத்தம் பரிச முருவரச கெந்தத்தை
யுய்த்தறிவான் சீவனென வோர். (௪௪)

இந்தியத்துக் கெல்லா மிறைவ னுயிரன்றி
யிந்தியத்துக் குண்டோ விறை. (௪௫)

ஒன்றறிந்த தொன்றறியா தாலு முயிரல்லை
மன்றலன்றி மூக்கறியா மற்று. (௪௬)

கண்ணுருவ மன்றியொன்றைக் காணறியாக் கையார
வுண்ணலன்றி நாக்கறியா தோர். (௪௭)

காதொலியை யன்றியொன்றைக் காணறியா விவ்வுடம்பு
மோது பரிசமன்றி யுற்று. (௪௮)

ஆகையா லைந்தறிவைக் கொண்டறிவ தான்மாவென்
றோகையொடுஞ் சொல்லுமறை யோர். (௪௯)

செல்லும் பிராணனன்றிச் சீவனிலை யென்றுணர்ந்து
சொல்லுஞ் சுவாசமதஞ் சூழ். (௫௦)

மூக்குறுநன் மூக்கணியை மூடச் சுழுத்தியினிற்
போக்கடித்த தாமோ பொருள். (௫௧)

பிராணனைமுன் விட்டுப் பிடிப்போன் பிராணனென
வராவணியான் வேதமறை யும். (௫௨)

மனமே புருடனன்றி மற்றிலையென் றோதுங்
கனமாயா வாதிமதங் காண். (௫௩)

என்மனத்தா லியானுஞ்தே னென்றுரைக்கப் பட்டமையாற்
றன்மனந்தா னன்று தனி. (௫௪)

புத்தியே யான்மாவா மென்றுணராப் போதித்த
புத்திகெட்ட புத்தன்மதம் பொய். (ருரு)

புத்திக்குச்சாக்கியாம் போதமய வான்மா
புத்திசட மாதலினுற் பொய். (ருசா)

ஆங்கார மான்மாவா மென்றுரைக்கும் பேரிருளா
ராங்கார வாத மறி. (ருஎ)

சடஞ்சித்தத் தாலறியுஞ் சைதனிய னன்றென்
றிடமறைக ளோது மெடுத்து. (ருஅ)

சித்தமியமான னென்றுணரோல் சிர்சான்ற
சித்தர்மதம் பின்னிடநீ செல். (ருகூ)

சைதனியன் சந்நிதியிற் றுனறியுங் கிஞ்சிக்கியன்
சைதனிய னுக்குச் சடம். (சாO)

காயமுதற் சித்தங் கடையாமிவை கட்குச்
சேயன்சை தன்னிய சீவன். (சாக)

சிவனத்தாற் சீவனெனல் சீவமிறந்தா லிந்தச்
சிவனே யந்தச் சிவம். (சாஉ)

தன்னைக் கண்டாங்குத் தலைவனையு முன்னேது
முன்னைப் பிரமமெனு மோர். (சாங)

ஊனையொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமென நாடு. (சாச)

சொப்பனமுஞ் சாக்கிரமுந் தொலையொத் தகாலத்துச்
சுப்பிரம மென்றுநீ சொல். (சாரு)

நான்பிரம மென்னு நடைமலையைச் சிவைபாகன்
றுனடக்கி யாட்கொள்வான் றுன். (சாசா)

நீபிரமமென்று நெடுநாட் பிறந்திறந்தாய்
மாபிரம மென்னை மறந்து. (சாஎ)

ஆதிமுத்தன் சீவ னநாதிமுத்த னீசனென
வேதமுறை செய்யும் விரித்து. (சாஅ)

உள்ள மசையா துயர்துருவன் போனிற்கில்
வள்ளலுரு வானய் மதி. (சாகூ)

சித்திரத்தை யொத்துச் சிவோகமெனச் சிந்தித்தா
லத்தனுரு நீயாவை யால். (எO)

இந்நிலையி னிற்பரிதே யெல்லாஞ் சிவமென்னு
மந்நிலையி னிற்பா யற. (எக)

அஃதுமரி தேயாகி லஞ்செழுத்தி னுண்மைப்
பகுதியறிந் துள்ளே படி. (எஉ)

சொன்ன நிலைக்குட் டுதையா மனமாயின்
முன்னூலை யோதி முயல். (எங)

சாத்திரத்தை யோதச் சழக்கு மனமானா
லூர்த்தகுரு நாதனைநீ யுன். (எச)

குருவுருவ முன்னக் கோதகன்றிட் டாவி
பரிபூ ரணத்துட் படும். (எரு)

பாசமோசனவியல் - முற்றிற்று.

---

## சிவயோகவியல்.

அவயோகத் தன்மை யகற்றியலை வில்லாச்
சிவயோகத் தன்மை தெரிப் பாம். (க)

நதிபாங்கர்ப் பன்னகத்தி னண்ணிப்பத் மாசனத்தில்
வதியாக் குருவை வணங்கி. (உ)

நீர்க்குமிழி மின்னற்கு முண்டுநிலையில்லை
யாக்கைக்கென் றெண்ணி யறிந்து. (ங)

முன்றோ னுரைத்த மொழிநிறுவிப் பற்பலவாம்
பின்னமொழி யெல்லாம் பிரித்து. (ச)

சிவத்தோமசி யுண்ணி னைந்து சிவயோக நிட்டை
சவுக்கியதா னத்தேறித் தான். (ரு)

அவிரோத வாளா லகங்கரத்தை யட்டிப்
பவரோகத் துக்குப் பயந்து. (சு)

அல்லல் கிளைக்கு மவாமனத் தின்வேரை
யொல்லை யகழ்ந்திட் டொரீஇ. (எ)

அகாயனவி காரி யனந்தவா னந்தன்
மகாதேவன் றன்னை மதித்து. (அ)

பதைத்தெழு முள்ளப் பதைப்பைப் பறித்து
மதத்தை யொடுக்கி மறித்து. (கூ)

தத்துவத்தைப் பின்னிட்டுச் சகசமல கேவலத்தை
யத்தனருள் கொண்டாங் ககன்று. (க0)

அமுசோகம் பாவனையை யண்ணியறி வாகிச்
சமுசயத்தீப் பாவனையைத் தள்ளி. (கக)

சீவன்வே றுண்ட சிவன்வேறென் றெண்ணுமயற்
பாவனைக்கண் ணுள்ளில் படா. (கஉ)

நதியோடிப் புக்கழுந்து நாட்டம்போ னின்ற
பதியிற் கலந்து பழகி. (கங)

அதுவுதுவென் றெண்ணு தறிவோ டறிவாய்ப்
பதிதல் சிவயோகம் பார். (கச)

ஒன்றென் றிரண்டென்று மூன்று துறங்கியே
யொன்றாத லேசிவயோ கம். (கரு)

சாத்திரத்தை யுன்னிற் சமாதி குலையு மெனி
னேத்திரத்தும் பாரோ னிலத்து. (கசு)

நவவிதநா தங்க ணனிதோன்று மாயின்
சிவனருளைக் கொண்டு செகு. (கஎ)

சுட்டி லசத்தா மீ சுட்டைப் பிறகிட்டுச்
சுட்டாமற் சுட்டித் தொடர். (கஅ)

ஒளியி லொளியா யொடுங்கி யுருகில்
வெளியில் வெளியாய் விடும். (ககூ)

குறியாக் குறியைக் குறித்துணரப் போகும்
குறியே பிறவிக் குறி. (உ0)

மான்குறிக்கும் வேடனவண் மன்னன் வரவறியா
மான்றானாய் நின்றதை மாறும். (உக)

ஆகாயப் புள்ளறியா வண்டத்தைப் பொய்ச் சார்வை
யோகானு சாரி யுண ரார். (உஉ)

அம்புவிழு மந்நேர மாக்கறக்குஞ் சில்காலஞ்
சம்புவின்யோ கத்திற் றரி. (உங)

உழுவையரி மாவானை யுரகங் கராடி
தொழும்யோகி தன்னைத் தொடர்ந்து. (உச)

இடர்சுகங்க ளெல்லாஞ் சிவனேந்திக் கொள்ளு
மடர்வதிலை யொன்று மவளா. (உரு)

இந்திரனுஞ் சோதித் திடுக்கணுறு வானீத்த
பந்தச் சிவயோகர் பால். (உசு)

வண்ணப் பயோதரத்து மணியல்குற் பூந்தடத்துங்
கண்ணைக்கொ டார்யோகர் காண். (உஎ)

செத்தசத்தின் கண்ணுமொரு சித்திரத்தி னற்கண்ணு
மொத்திருக்கும் யோகியர் கண். (உஅ)

பழிமுனையைக் காட்டுகின்ற பல்லுலகை நோக்காச்
சுழிமுனையை நோக்கித் தொடும். (உகூ)

கண்ணியதீம் யாலைக் கமரிற் கவிழ்த்தற்றே
பண்ணுங் கருமம் படில். (௩0)

அசையாச் சிவயோகத் தானந்த மீதூர்ந்
தசையா வுளமாதி யாங்கு. (௩௧)

அலையற்ற சாகரமோ வவிழ்ந்த கயிற்றூசலோ
வலைவற்ற யோகி யகம். (௩௨)

பல்லூழி யோரிமைப்பாய்ப் பண்ணுங்கொ லோவெதிர்ந்த
தொல்லூழை வென்ற சுகம். (௩௩)

சரற்சந் ரதினோ தடையற்ற வானோ
வரச்சந்த யோகர் மனம். (௩௪)

பொன்னொக்கை கிட்டியுமென் யோகப் புணர்ப்பிலையே
லென்னும் பிறந்து மிவண். (௩௫)

ஊர்ச்சுணங்க னைப்போன்றிங் குண்டிக் கலையோகர்
பார்க்கக் கிடையாப் பரம். (௩௬)

வேணி யழகும் விபூதியுடைப் பூணழகும்
பாணர்க் கிருந்தென் பயன். (௩௭)

வேடப் பொலிவிருந்தென் வேசியர்போ னாடோறு
நீடுசிவ யோகமி னீசர். (௩௮)

துறந்துஞ் சிவயோகந் துன்னாத மூடர்
பிறந்தும் பிறவா தவர். (௩௯)

தண்டிகையுங் கொம்புந் தவசிக் கிவையடா
வம்பர்க்கு வைத்த வழி. (௪0)

உண்டி புசிக்கவோ யோக முனாற்றவோ
வண்டர்பிரான் றந்தனுக் கை. (௪௧)

ஊனெழுத் துறந்தா லுலகைத் துறப்பையன்றி
யூழிருக்க நீதுறவி யோ. (௪௨)

வல்லியத்தோல் போர்த்தா வயன்மேயு மாபோல
புல்லர்க்கும் யோகம் பொது. (௪௩)

அணுவுக் கணுவா யகண்டமாய் நின்ற
பணிசெய்ய நீயே பணி. (௪௪)

எங்குமாய் நின்றாயை யெக்காலும் பூசித்தே
யெங்குமாய் நிற்கவெனக் கீ. (௪௫)

ஆக இயல் ஐந்துக்குக் குறள் - ௩௭௮.

சித்தாந்ததரிசனம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## நான்காவது

## உபதேசமாலை.

### கடவுள்வணக்கம்.

ஓர்கொண்ட வென்னுடைய சிந்தைக் கயிலாயத்
தேர்கொண் டிருந்தாடு மெந்தையே - பேர்கொண்ட
பொன்னம்ப லத்தினிலும் பொற்கொடியோ டெஞ்ஞான்று
மின்னம் பலபதியி னும். (௧)

எண்கணனைக் குட்டியகுட் டெங்கேனும் பட்டதோ
மங்கையரி மேலடித்த மத்தடிபோ - யெங்கேனும்
பட்டதோ வெங்கள் பசுபதிமேற் பட்டவடி
பட்டதே யெவ்வுயிர்க்கும் பார். (௨)

### தக்ஷிணாமூர்த்திவணக்கம்.

ஜீவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தா - லோவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தி லேந்தியவெம் மான். (௩)

### குருத்துதி.

சனகர் சனற்குமரர் சனந்தரா சனுதர்
முனிவரர்க்கு ஞான மொழிந்த - முனைவனே
யென்போல வந்திங்கே யென்னை யெனக்குமறை
பொன்போலத் தந்தார் பொருள். (௪)

சாக்கிரத்துஞ் சொப்பனத்துந் தண்டாச் சுழுத்தியினு
நீக்கமற நின்றுறு மென் றன்னைத் - தூக்கி
மடியாத் துரியநிலை மாமணிமன் றத்திற்
குடியாக வைத்தா னெங் கோ. (௫)

### நூற்பெயர்.

கலியுலகத் துக்கேற்பக் கற்பனையான் மாந்தர்
பலபலகற் பித்ததெல்லாம் பாரா - துலகமெனு

மாலை யரிக்க மருந்தா முபதேச
மாலையினைப் பார்மாண வா. (௬)

## ஆசிரியனைத்தேடிக்காண்டல்.

நாடுநக ராலயங்கள் நாகமுழை யெங்கெங்குந்
தேடியுள ணைந்து திகைத்தலறி - மாடிலர்கள்
வைத்துப் புதைத்திருந்த மாநிதியைக் கண்டாற்போ
லுத்தமனே கண்டே னுனை. (எ)

## மாணனைக்கண்டுமகிழ்தல்.

என்று பருவமுனக் கெய்துமோ வென்றுநா
னன்றுமுத லின்றளவு மாசித்தேன் - றுன்றரிய
விப்பிறப்பி லுடிநா யென்னை நீ மாணவக
வெப்பிறப்பு நாடினேன் யான். (அ)

## வேண்டுகோடல்.

செம்புண்ணில் வேறுழைந்த தென்னச் செகமாய
வைம்புலனுக் கஞ்சி யடைந்தேனைச் - செம்பதுமத்
தாளிணைக்கீழ் வைத்திதனைச் சங்கரியா விட்டக்கா
லாளுடையாய் சங்கரிநீ யல். (௯)

## ஞானதீக்கை.

பார்த்தான் பரிசித்தான் பாவியேன் சென்னிமிசைச்
சேர்த்தான் றிருவடியைச் சிந்தித்தா - னேத்துரைத்தா
னஞ்சுகலையு மடைவின றுத்தொழித்தா
னென்செய்கே னென்னுரைக்கே னியான். (௧0)

## மூலவுபதேசம்.

அப்பாவுன் பக்குவத்துக் கீடாய னேகவித
வொப்பா லுனக்குரைத்தே னுண்மையினை - யெப்பாலுஞ்
சங்கையற்ற சத்தியத்தைச் சாற்றிலுனை யன்றியில்லை
சங்கையறப் பார்நீ தனித்து. (௧௧)

பாசத்தை விட்டாற் பசுவோ பதியோநா
ளேசற் றவர்வணங்கு மையனே - யோசித்துச்
சொல்வா யருட்குருவே சுத்தபரி பூரணனே
யெல்லாமாய் நின்றவனே யின்று. (௧௨)

பாசத்தி லுனக்குப் பாசி யெனும் பேர்வந்த
தாசற்ற மாணு வறையக்கே - ணேசித்

தருமறையி னாலு மனுபவத்தி னாலும்
பிரமமென்று மீசனென்றும் பேர். (கங)

கள்ள வடிவகற்றக் காசினிமே லென்போலக்
கள்ள வடிவெடுத்த காருணியா - வுள்ளபடி
சொன்னாலு மென்மயக்கந் தூரத்தே போகவில்லை
யென்னாலென் செய்கே னியான். (கச)

தீக்கையினா லுன்னைச் சிவமாக்கி னேமதன்றி
யாக்கைச் சிவவடிவ மாக்கினோ - நோக்கியே
நானேநீ யென்று நவின்று முபதேசித்தோ
மேனோ மயக்க மெழும். (கரு)

## தசகாரிய வுபதேசம்.

### தத்துவரூபம்.

பூதமுத னாதமீ றாகப் பொலிகின்ற
வீதெல்லா நாமல்ல வென்றறியும் - போதமே
தத்துவரூ பம்மிதனைச் சங்கையற்ற மாணவக
புத்தியிடை நன்றாய்ப் புதை. (கசா)

### தத்துவதரிசனம்.

தத்துவங்க ளெல்லாஞ் சடநம்மைத் தானறியாச்
சித்துருநா மென்று சிறிதத்தைக் - கைத்தழியக்
காண்பதுவே காட்சியிதைக் கைக்குண்மா நெல்லியெனக்
காண்பதுமா னாநீ கடன். (கள)

### தத்துவசுத்தி.

ஆறு நெடுங்கால மந்தோ நமைமறைத்துத்
தாறுகச் செய்ததிந்தத் தத்துவங்கண் - மேனாடி
யின்றுகடந் தேறநமக் கீசனருட் கைதந்தா
னென்றுணர்தல் சுத்தியிஃ தெண். (கஅ)

### ஆத்மரூபம்.

காரிருளோ மைக்குழம்போ காரோ வெனக்கலுழ்ந்து
பேரிருளா மாணவத்தைப் பின்னிட்டே - யோர்வரிய
மன்னுருவே நாமென்று வள்ளலருளாலறிதல்
நின்னுருவ மாணு நினை. (கசு)

## ஆத்மதரிசனம்.

என்றுபிறந்தேனு னென்று வளர்ந்தேனு
னென்றுதய ருற்றிறந்தேனு - னென்று
மழியாத சித்துருநா னென்றேமகிழ்தல்
நழுவாத நின்றரிச னம். (உ௦)

## ஆத்மசுத்தி.

பாசமாய் நின்றதுவும் பல்பிறப்பிற் சென்றதுவு
மாசி றவவிரத மாற்றியது - மீச
னருளாலே யென்றுதனக் காதிக்க மில்லையெனத்
தேருளனுயிர்ச் சுத்தியெனத் தேர். (உக)

## சிவரூபம்.

எங்குஞ் சிவமயமா யெங்குஞ் சுகவடிவா
யெங்குஞ் சிவலோகத் தெல்லையா - யெங்குஞ்
சிவனையே கண்டு தெரிசித்தன் மானு
சிவரூப மென்றே தெளி. (உஉ)

## சிவதரிசனம்.

ஆக்க லளித்த லழித்தன் மறைத்தலரு
ளோக்க லிவை யெவ்விடத்து நோக்கியே - நீக்கமறப்
புல்லியுய ரானந்தப் பொற்பின் மிசையேற
னல்லசிவ தரிச னம். (உ௩)

## சிவயோகம்.

அன்னியமே யில்லை யெனக் காருயிரா மீசனென
வுன்னியவன் றுனை யோகஞ்செய் - தென்னினைவு
மற்றவனே யானேமென் றுணர்ந்தத் தெய்தலரு
ளுற்றவனே யோகமென வோர். (உ௪)

## சிவபோகம்.

நானே சிவன்சிவனே நானென்று நாடிவெறுந்
தானுகி நின்றநிலை தானன்றே - வானுப்
பவசலதி நீந்திவரும் பண்புடைய மானு
சிவபோக மென்றே தெளி. (உ௫)

## இரகசிய வுபதேசம்.

கண்ணே விருங்கதிரோ காரிருளோ யானுவன்
மண்மிசையி லென்போல வந்தருளி - வண்ணமலர்க்

கைத்தலத்தா லென்னுடைய காய முயிர்பொருளுந்
தத்தமென வாங்கினாய் சாற்று. (உசு)

மாணவகா மெய்ஞ்ஞான வாழ்வையுனக் கிக்கணமே
பூண வுரைப்பனிது பொய்யல்ல - காணொழியாக்
கண்ணேநீ யாயிருளுங் காய்கதிரு நீயல்ல
வுண்ணினைந்து பாரிதனை யுற்று. (உஎ)

கண்ணே யிருளுண்டே கங்குல் பகலுண்டே
விண்ணவருங் காணாத வேதியனே - மண்ணாத
வுச்சிக் கதிரு மொளியொழியாக் கண்ணும்போ
னிச்சயித்துப் பாரிதனை நீ. (உஅ)

காயுங் கதிரவிடக் கண்ணுக் கொளியுண்டோ
மாயும் பிறப்பகற்ற வந்தவனே - தோயுமிரு
கண்ணல்ல நீயந்தக் காய்கதிரோ யாமென்ற
வண்ணவுரைக் குண்டோவகம் மாறு. (உகூ)

உன்னை யறிந்தனையோ வுன்னறிவி னீங்காத
வென்னை யறிந்தனையோ வெக்காலு - முன்னை
யருந்துமலந் தன்னை யருந்தினாய் கொல்லோ
விருந்தவனே சொல்லா யினி. (௩0)

விளக்கில்லை பல்பொருளு மில்லைவிழி யில்லை
துளக்கிருளு மில்லையெனச் சொல்ல - வுளக்கண்ணா
லுள்ள படியறிந்தா லூன்பிறவி யில்லையுனக்
குள்ளபடி யீதென் றுணர். (௩க)

உன்னை யொருவ னுயர்சாமி யென்றுரைத்தா
லென்ன மகிழ்ச்சியங்கே யெய்தினாய் - பின்னொருவன்
பாவிபசு வென்றாற் பதைபதைப்பா யாகையினாற்
சிவனல்ல நீயே சிவம். (௩உ)

## நேயவுபதேசம்.

ஆறுகடல் கண்டுவர வாதரித்த தும்மொருவன்
வீறுபுலி கண்டுவந்த வீறுங் - கூறியிடி
லுப்புக் கடலாடி யோடிவந்த தும்மொக்குஞ்
செப்புசிவங் கண்டிரும் பல். (௩௩)

தன்னைச் சிவத்திற் பறிகொடுத்த தற்கேடர்
பின்னைத் தமைத்தேடிப் பேறுற்ற - தென்ன

பிழைபளித மால்வரையிற் பேரழலை யிட்டே
யழிவரைபின் றேடியடுக் கல். (௩.௪)

பித்தர்க் கெதிரில்லை யானாலும் பேருற்றுப்
பித்தரொதி ரிட்டறையும் பெற்றிபோன் - முத்தி
தனிலெதிரோ யில்லையென்றாற் சங்கித்துப் பின்னுந்
தனிலெதிராய்க் காணுதல்பித் தாம். (௩௫)

## பஞ்சாக்கரவுபதேசம்.

அஞ்செழுத்தின் றன்மை யறையக்கேண் மாணவக
பிஞ்செழுத்தா மீரிரண்டும் பின்றள்ளித் - துஞ்சாத
வோரெழுத்தே நின்னுருவ மொண்பொருளே நீயாமென்
றோரிடத்தி னில்லையுனக் கூழ். (௩௬)

நகாரக் கருவியெலா நாமலவென் றெண்ணி
மகார மலங்கடந்து மாழ்கி - யகாரமே
தானென் றுணர்ந்தப்பாற் றண்ணருளைக் கண்டுசிவ
மோனமதி லேயொடுங்கன் முத்தி. (௩௭)

தெருளா விருளகன்று திரோதைமல நீங்கிக்
குருவாற் றனையறிந்து கொண்டே - யருளாய்ப்
பரைவழியாற் சென்று பரசிவத்தொன் றாதல்
கரையன்பா லஞ்செழுத்திற் காண். (௩அ)

சிவமயமாய் நின்று திருவருளாற் றன்னை
யவமகலக் கண்டுதிரை யட்டித் - துவிதமயல்
காட்டுமல நீங்கிவினைக் கட்டறுத்த னன்மாணு
நீட்டுமர னஞ்செழுத்தி னேர். (௩௯)

## சடாந்தவுபதேசம்.

சித்தாந்தம் வேதாந்தஞ் செப்புதத்து வாந்தமிசை
புத்தக லாந்தமொடு போதாந்தஞ் - சுத்தமா
நாதாந்த மென்றிவைக ளாறு நவையென்றே
மீதானந் தேடி விடு. (௪0)

## அதீதவுபதேசம்.

நித்திரையைக் காண நினைத்துட் கலைமானுந்
தத்துவசா லங்களெல்லாந் தாண்டியே - சுத்த
வருள்வழியாற் சென்றங் கனுபவத்தைக் கண்டு
தரையவர்க்குச் சாற்றநினை தல். (௪௧)

## பூரணவுபதேசம்.

அடுத்துவரும் பாசத் தணுத்தன்மை யாகிக்
குடத்தில்வருந் தீபமெனக் கொண்டாய் - விடுத்துநீ
பொன்றரிய மெய்ஞ்ஞான பூரணமா யேகின்னைக்
குன்றிலிட்ட தீபமெனக் கொள். (௬௨)

## சிவசங்கைநிராகரித்தவுபதேசம்.

நீசன்கொ டும்பாவி நெடுநாட் பிறந்திறந்த
பாசன் பெரும்படிறன் பாங்கிலிய - வீசன்
சுத்த சிவரூப மாவேனோ சொல்லெனக்கு
மைத்தமணி கண்டா வகுத்து. (௬௩)

விழலாம் விலாமிச்சி வேட்டுவனுங் கூட
மழலா மயமப்பா மாலி - தொழிலா
லவமா முலகி லவதரித்த மானோ
சிவமாதற் கையமேன் செப்பு. (௬௪)

## பழமொழியுபதேசம்.

அத்தைத்தின் றங்கே கிடப்பார்க்கு மாணவக
வெத்தைத்தின் றெங்கே கிடந்தாலென் - சுத்த
வெறுவெளியிற் சென்று விளையாடு கின்றார்க்
குறுதியிட லாகா தறி. (௬௫)

முப்பாலும் பாலென் றறைந்தார் திருமூல
ரப்பாலும் பாலென் றறைந்தார் - சடகோப
ரறிவி லறிவி லறிவி லறிவி
லறிவி லறிவென் றறி. (௬௬)

## சங்காரவுபதேசம்.

ஈசனுக் கென்றொன்று மிதசத் துருவென்னும்
வாசகத்தைச் சொல்லக்கேண் மாணவக - வீசன்றான்
தத்துவத்தி லாக்கித் தவத்தில் வளர்த்துன்னை
முத்தியினிற் சங்கரிப்பான் முன். (௬௭)

## மகாவாக்கியவுபதேசம்.

சிவனாய் நின்னைநீ சிந்திக்கின் மாணவக
வேவில் பிறப்பிறப்பு மோவாது - வீவிற்

றுருபதைக்கு மாளாத் துகில்போலுன் போத
மிரிவதிலை யெக்கால மெண். (௪௮)

சிவமல்ல நாமென்றுஞ் சிவனு மென்றும்
விவகாரம் வந்தவிட மெல்லாந் - துவமகலச்
சாம மறைபுகலுஞ் சத்தியமா வாக்கியத்தைத்
தோமறவுட் கொண்டு துணி. (௪௯)

## உண்மையுபதேசம்.

ஆதிமறை யாகமங்க ளெல்லா மளவிட்டே
யோதியுணர்ந் தெல்லா முணைத்தாலும் - வேதை
யெழுநான்கு கோடி யிழிநிரைய மெல்லாம்
விழுவர்சிவ னுகா விடின். (௫௦)

## கொல்லாவிரதம்.

கொல்லா விரத குலமே குலமென்று
நல்லார்க ளெல்லா நவின்றிருக்கக் - கொல்வாற்
றெரிசித்தா லும்பாவந் தீயன்முக நோக்கிப்
பரிசித்தா லும்பாவம் பார். (௫௧)

ஆடுபன்றி கோழி யருந்துவோர் கட்கெல்லாம்
வீடில்லை யென்றுரைக்கும் வேதங்க - ளுடுமவர்க்
கிம்மையிலுந் துன்ப மறுமையிலு மேழ்நிரைய
நன்மையிலை யோரிடத்து நாடு. (௫௨)

இரக்கமிலா தாரரக்க ரொன்றுமறை யாதி
யுரைக்க வுரவோரு மோம்ப - விரக்கமின்றி
கொல்வார்க்குக் குன்றனைய செய்தாலுங் குன்றியாங்
கொல்லார்க்குக் குன்றியுங் குன்று. (௫௩)

புசிக்கின்ற நாளை புலான்மறுத்த ஞேக்கி
நசிக்கவரு நஞ்சுண்ட நாதன் - வசிக்கவரு
மாவாக்கி யம்புகன்ற வண்மையினைக் கேட்டுமிங்ங
னுவாகொல் வார்க்கெங் கறன். (௫௪)

ஆறிருக்க வட்டைகுளந் தோய்வாரு மாயுமறை
நீறிருக்க மண்ணையிடு நிந்தகருஞ் - சோறிருக்கச்
செத்த பிணமருந்துந் தீயவரு மாணவக
மத்திமர்க ளென்றே மதி. (௫௫)

வாயெதிர்போய்ச் சேதா வலியப் புசியென்னத்
தீயபுலி யூனுண்ட நீதென்னத் - தூய
விரதத்தைக் கண்டு விடையோன்வந் தானவ்
விரதத்தைச் செய்ய விரும்பு. (ருசு)

## அநித்தியதரிசனம்.

இன்றைக்கோ நாளைக்கோ வின்னமரை நாழிகைக்கோ
வென்றைக்கோ வாவி யிழப்பென்று - சென்றிறைஞ்சி
யாசாரியனுக் கனுகூல சித்தனாய்ப்
பாசாதி யைக்கழற்றப் பார். (ருஎ)

கோடைதனி லாற்றிற் குடியேறி வாழுநர்கள்
வாடைமழைக் கேங்கியழும் வாறொக்கும் - நீடுபக
லுள்ளபோ தெல்லா முறுதிநெறி காணாது
கள்ளநமற் கண்டுகலங் கல். (ருஅ)

மாதாபி தாநாத்தி மற்றொருக் கலுநாத்தி
யாதார வைப்பு மரண்மனையும் - நீதான
நாத்தியிவை மெய்யென்று நம்பாதே யென்றறைந்த
மாத்திரத்தே விடுற்றான் மன். (ருகூ)

யோனிவழி யேயுதித்தவ் யோனிவழி யேனினைந்தவ்
யோனிவழி யேயொடுங்கு மூமர்காள் - யோனிவழி
வாராவொருவனையே வந்தித்தால் யோனிவழி
வாரா வகையருளு வான். (சூ0)

## அடங்கத்துறத்தல்.

தாயரையுந் தந்தையையுந் தற்சார்ந்த கேளிரையு
மாயமயல்காட்டு மனைவியையுஞ் - சீயென்று
சொற்பனம்போர் கண்டெட்டாத் தூரப்போ யேகநிலை
நிற்பவனை ஞானியென நேர். (சூக)

ஆனை முதலெறும்பீ றாயபிறப் பெல்லாமு
மீன முறக்கடந்திட் டேறியே யூனமிலா
மக்களா வந்துந் துறவா மனிதர்தமைத்
தெக்கணா மூர்த்திசிரிக் கும். (சூஉ)

மலைமகளை விட்டுடைய மைந்தர்தமை யம்விட்
டிலகுவெள்ளி மால்வரையும் விட்டே - யுலகறியக்

கல்லாலின் கீழிருத்தல் கண்டுங் துறவாரைக்
கொல்வா னியமன் குறித்து. (௯௩)

## அவாவறுத்தல்.

மண்ணாசை பொன்னாசை மாதரா ராசையுயர்
விண்ணாசை யாவும் வெறுத்தப்பா - லெண்ணும
துள்ளபடி யானந்த யோகத்தின் மூழ்கியுடல்
விள்ளளவு நின்று விடு. (௯௪)

## அடக்கமுடைமை.

அடக்கிப் புலனைந்து மாமையைப்போ லொரு
மொடுக்கி யுரவோரைக் கண்டா - னடுக்குற்றுக்
கண்ணப்பர் போலக் கரையிறந்த பேரன்பால்
விண்ணப்பஞ் செய்ய விரை. (௯௫)

## கல்வியடக்கம்.

கழுதைக்குங் கற்றவர்க்குங் கட்டுரையொப் பொன்றே
கழுதை பிறர்க்குதவுங் கற்பூர - முழுநூலாய்ந்
தோதுவார் தாம்பிறருக் கோதியுணர்ந் துள்ளபடி
சாதியா ராதலினாற் றான். (௯௬)

## இத்தன்மையுடையோ ரிவர்களெனல்.

சாந்த முடையோன் றவசி யவாவற்றோன்
வாய்ந்த துறவி மனமாண்டோ - னாய்ந்துணர்ந்த
யோகிபரி பூரணத்தை யுற்றுணர்ந்தோ னல்லசிவ
போகியெனச் சொல்லும் பொது. (௯௭)

## சரிதையைப்பழித்தல்.

மூலமுதிராப் பெண்ணை முயங்கவந்த வின்பு
மெலிகவர வெற்பகழ்ந்த வேல்புங் - கலையிலான்
கற்றவரோ டோடக் காதலித்த வாறுமே
யுற்ற சரிதையினுக் கொப்பு. (௯அ)

## கிரியையைப்பழித்தல்.

தன்னைச் சடவடிவிற் றங்கினைத் தாவாகித்
தன்னியமாய்க் கண்டங் கருச்சிக்கும் - பின்னருக்கு
மின்பமிலை வேலை யிடையொடியு மானமையா
லின்பமெலா ஞானிக்கே யெண். (௯௯)

## யோகைப்பழித்தல்.

தத்துவக்கற் றற்றுவெறுந் தானேதா னாய்நின்ற
முத்தருக்கு யோகமேன் மோனமேன் - வெற்றியேன்
சுத்தசுக நித்தியமாய்ச் சும்மா விருப்பதுவே
பற்றற்ற முத்தியெனப் பார். (எ0)

பால்விரதி பூசையாய்ப் பழவிரதி பைங்கிளியாய்க்
கால்விரதி பாம்பாதல் கட்டுரையே - நோல்விரத
மாண்டவிட முத்தியென்றான் மாறு விரதமெலாங்
கூண்டோடே வெட்டிக் குமை. (எக)

## சாந்தமுடைமை.

வைதிடினுங் கொய்திடினும் வாழ்த்திடினு மாயமெலாஞ்
செய்திடினு மன்னர் செறுத்திடினுந் - தெய்வநிலைப்
பூதமயக் கிடினும் புரந்தரன்போர் செய்திடினு
மேதுமயங் கான்ஞானி யெண். (எஉ)

## ஈச்சுரவாக்கியம்.

எந்தைசன காதியருக் கீந்தநூன் முற்கால
நந்திக் குரைத்தருளு ஞானநூல் - செந்துவர்வாய்த்
தேவிக் குரைத்தநூல் சிரமற் கோதியநூ
லாவிக் குரியநூ லாம். (எங)

அறுமுகனுக் கோதியநூ லம்புயனுக் கோதியநூன்
மறுவிலரிக் கோதியநூன் மற்று - மிறுகா
வுருத்திரனுக் சொற்றநூ லுண்மைநூ லெல்லாங்
கருத்துருகக் கண்டுரைக் காண். (எச)

## அனீச்சுரவாக்கியம்.

வெள்ளி யுரைத்தநூல் வியாழம் புகன்றநூல்
பெள்ளவரி சொன்ன பிடகநூ - லொள்ளிழை
முயக்கநூ லீதெல்லா மூடநூற் சிந்தை
மயக்கநூ லென்றே மதி. (எரு)

## சிவயோகமான்மியம்.

எண்ணுஞ் சிவயோக மான்மியத்தை யென்சொல்கேன்
மண்ணுலகும் விண்ணுலகும் வந்திறைஞ்சி - யண்ணுவென்
றோலமிடு நீசிவமா யோரிமைப்பு நிற்பையெனிற்
காலனுங்கை கூப்பிநிற்பன் காண். (எசு)

## மகாவாக்கியமான்மியம்.

ஓவா பவக்கடலுக் கோரம்பி யாகலான்
மாவாக்கி யம்புகல்வேன் மைந்தாகேள் - மூவாத
தற்பதநாந் தொம்பதநீ சாற்றசியா றென்று
முப்பொருளுங் கண்டு முடி. (எஎ)

## அதீதமான்மியம்.

நோக்காம னோக்கி நொடிகொட்டு மந்நேரஞ்
சாக்கிரா தீதநிலை சாதித்தோ - ராக்கைச்
சுமையெடுத்து நாளுந் துயருழுர் சொன்னே
னுமையங்க ளுணை யுவந்து. (எஅ)

## இதோபதேசம்.

சத்தியமு நோன்புந் தவமு மிளஞ்சொல்லு
முத்தமருக் குள்ளகுண மொன்றின்றி - மத்திமராய்
மைதுனமுஞ் சோறுமாய் மாயுமள வும்புசிக்குங்
கைதவர்க்கு முண்டோ கதி. (எகூ)

## தியானநிட்டை.

இதையத் தவிசி லிருடிக ளனேகர்
புதைய நெருங்கிப் பொருந்த - நதிமலியுஞ்
செஞ்சடையு முக்கண்ணுஞ் சின்முத் திரையுமுற
நெஞ்சடையக் கண்டு நினை. (அ0)

கல்லா லமர்ந்தாரைக் கண்மூன் றுடையாரைச்
சொல்லாமற் சொல்லவந்த தூயாரைப் - பல்காலுஞ்
சிந்தி சிவோகஞ் சிவோகஞ் சிவோகமென
வந்தி பிறப்பறு மாறு. (அக)

## பூரணநிட்டை.

அண்டங்கா லங்கி யறலவனி யைந்தினையும்
பண்டையவா காயம்போற் பாவித்துக் - கொண்டன்
மறையாக் கதிர்போலுன் வானொளியை நோக்கி
நிறைவாய்க் குறையாதே நில். (அஉ)

எல்லாஞ் சிவமென்னு மெண்ண முனக்குண்டே
லெல்லா நலனுமுனக் கெய்துமே - யெல்லாஞ்
சிவமன் றெனுமுணர்வு சிந்தையிடை யுண்டேற்
பவம்வந் துனைவிழுங்கும் பார். (அங)

## சகசநிட்டை.

பாசங் கழன்றநிலை பதியுங் கலந்தநிலை
காசறுநன் முத்தியையுங் கண்டேனே - பாசமெலா
மித்தைசிவ நீயென்று வேத முறையிடுமேற்
பெத்தமுத்தி யுற்றவரார் பேசு. (அச)

காமாதி யைக்கழற்றி னல்லாற் கதிகூடாக்
காமாதி யெக்காற கழலுமே - காமாதி
யெல்லா மிருக்க வெனையறிந்தே னின்புற்றே
னெல்லா மிறந்திருந்தா லென். (அரு)

## கிரியாநிட்டையைப்பழித்தல்.

அறிவுநா மென்றறிய மாட்டாதா ரன்றோ
வெறிகாற் புனலருந்தி யென்றுந் - தறிபோலு
நிட்டையுடன் மட்டாய் நெடுங்கால நின்றூர்க
ணட்டமலா லுண்டோ நயம். (அகூ)

## அதீதநிட்டை.

எல்லா மிறந்தவிட மேகாந்த நிட்டையென
வெல்லா மறையு மியம்புமா - லெல்லா
மிறந்த விடத்திருந்த வென்னையா னேகண்
டிறைஞ்சினே னேத்தினே னே. (அஎ)

ஆதார நிட்டையினை யங்கங்கே விட்டப்பா
மீதான நிட்டை விரும்பிப்போம் - போதத்தை
நட்டார்போற் பின்சென்று நாதாந்தத் தேவிழுங்கி
விட்டானே யந்தரியா மி. (அஅ)

## மலினவாதனை.

சாந்த முடைய சடபரதர் மெய்ஞ்ஞானம்
வாய்ந்திருந்து மான்வளர்த்த வாதனையாற் - சூழ்ந்தடவி
மானு யவதரித்து மற்றொருசு ரீரத்தி
லானதை முத்தியடைந் தார். (அகூ)

மேலாம் வருணத்தி லுற்பவித்த வேதியர்கோ
னூலா மறைகண்ட நாதனே - யேலாத
சேரியெனும் வாதனையாற் றீப்புலைய னாய்ப்பிறந்து
நேரியஞா னத்தைநிறைந் தான். (கூ0)

## சுத்தவாதனை.

சுகன்வாம தேவன் றுருவாசன் காதி
மகன்விதுரன் வெண்காடன் மாறன் - சகமாண்ட
பத்ரகிரி வான்மீகி பற்றற்றே முத்தியினை
யுற்றூ ருறூர்க்கிவரொப் பார். (கூக)

அறிவு திருமேனி யறிவு கரணங்க
ளறிவே யிடம்போக மாமென் - றறிவாளன்
றூட்டா மறைகண்ட தத்துவத்தோர்க் கென்றுமறை
நாட்டு முபநிடத நாடு. (௯௨)

## அணைந்தோர்தன்மை.

அண்ண றுவலைக் கரச னலகிறந்த
வண்ணமூலைப் போக மகிழ்ந்துண்டு - மெண்ணணின்
முனிக்குழுவின் முன்னே முழுப்பிரமங் காட்டி
மனக்கவலை தீரவகுத் தான். (௯௩)

உண்டு முபவாசி யொண்டொடியோ டின்பநலங்
கண்டும் பிரமசரி யங்காட்டுந் - திண்டிறற்கு
மாளுந் திறனில் வடமீ னருந்ததிக்குக்
காளுந்தி யாறே கரி. (௯௪)

தத்துவக்கூத் தாடி சஞ்சாரி சார்போதன்
சுற்றும் புருடன் சுகிறுக்கி - பெத்த
னகாயனறு யாசி யநாமியவி காரி
மகானுபவி யென்னு மறை. (௯௫)

நறவங் குடித்தாலு நாயிறைச்சி தின்றுங்
குறவருடன் கூடிக் குனித்து - மிறைவனே
தானென்னுந் தன்மை சலியா ருலகர்க்கு
நானென்று சொல்லிநடிப் பார். (௯௬)

பாசங்கடந்து பதியான பண்ணவர்க
ளாசங் கடத்தி லலைந்தாலு - மீசன்
றலையோட்டி லேயிரந்துந் தன்மைகுறைந் தாரோ
மலைகோட்டி முப்புரமட் டான். (௯௭)

ஓரா யிரம்வருட மோதத் திருந்தாலு
மீரங் கிடச்சைக் கிலாமைபோ - லாராக்
குடும்பத் திருந்தாலுங் கோதற்ற முத்த
னடங்கத் துறந்தவனே யாம். (௯௮)

திசைமுகன்போ லெல்லாந் தெரியுந் தெரிவு
மசகரஞா னம்போ லமைவும் - பசுசாதுந்
தந்தியுண்ட வெள்ளிலைப்போற் றூக்கற்ற தோர்சால்பு
நந்துமணைந் தோர்க்கிதெலா நாடு. (௯௯)

ஆசரிக்குந் தன்மையினு லாசரிய னென்னும்பே
ராசா ரியனுக் கமருதலா - லாசரிய
னெண்ணமுடை யாருக் கிருகுறியுண் டாகுமது
கண்ணீருங் கம்பலையுங் காண். (௧00)

உபதேசமாலை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## ஐந்தாவது
## சிவஞானப்பிரகாசவெண்பா.

### பொது.

### பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

உலகளந்த மாலு மோதிமமூர் தேவுங்
குலமறையுங் காணாத கோமா - னிலகியுமி
ழுள்ளக் கயிலாய வோங்கன்மிசை நின்றாடும்
வள்ளலுக்கு முண்டோகைம் மாறு. (௧)

### குருத்துதி.

உண்டுமிலை யென்றா னொருவ னொருத்தி சுகங்
கண்டுமிலை யென்றான் கருத்தென்னோ - மண்டனிலே
யென்போலவந்திங் கிருநிலத்தோர் கண்காண
வென்போத மாய்த்தா யிசை. (௨)

### வேதச்சிறப்பு.

வேதந் தனக்கருகர் வேதியரோ யாதலினால்
வேதநெறி மெய்ந்நெறியே வீட்டின்பம் - வேதாந்த
னுள்ளபடி சொற்றா லுலகதா லென்றுரைக்குங்
கள்ளர்தலை வெட்டக் கடன். (௩)

### ஆகமச்சிறப்பு.

சிந்திக்கக் கேட்கத் தெரிசிக்கக் கைகுவித்து
வந்திக்கத் தக்கநூன் மாணாகேள் - பந்தித்த
செஞ்சடையா னென்றுரைத்த தேவிகா லோத்தரமே
பஞ்சைநூன் மற்றதெலாம் பார். (௪)

### அடியார்வணக்கம்.

சிவஞான சம்பந்தர் சீகாழித் தோன்றல்
பவஞானம் பற்றறுக்க வேண்டி - யுவமையிலா

வைகை நதியின் மணிக்கரத்தி னலிட்டார்
சைவநெறி யோங்கத் தமிழ். (ரு)

எல்லாஞ் சிவனென் றெடுத்திசைத்த வாகீசர்
சொல்லாற் றெளியாத துன்மதியோர் - பல்காலு
நாத்தழும்ப வாகமமு நான்மறையு மற்றனைத்தும்
பார்த்ததனு லென்னை பயன். (சு)

உன்னைப்போ லேயென்னைப் பாவிக்க வேண்டுமெனச்
சொன்னதிருப் பாட்டாற் றுணியாதார் - மென்மே
லிடம்பட்ட வேழுலகி லுள்ளநூற் கற்றுங்
கடன்பட்டும் பட்டினிபோற் காண். (எ)

காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்
பூணு வுரைத்தமொழி போதாதோ - மாணவக
வாய்த்த மனைவியவ டோடோயா தல்குற்புண்
கூத்தியைத் தோயுங் குணம். (அ)

## நூற்பெயர்.

தன்னை யறிவிக்குந் தன்றலைவ னைக்காட்டு
முன்னை வினையின் முதல்களையுஞ் - சொன்ன
சிவஞானப் பிரகாசச் செந்நூலே நூன்மற்
றவஞான மென்றே யறி. (கூ)

## அவையடக்கம்.

நாய்த்தோலிற் கட்டிவைத்த நாகமணியைப் பெரியோர்
தூத்தூ வெனவுமிழ்ந் தூடியார் - போற்றுவர்க
ளாங்கதுபோ லென்சொற்கு லையனரு டங்குதலாற்
பாங்காகக் கொள்வர் பரிந்து. (கO)

பாயிரம் - முற்றிற்று.

---

## பரிபாகியிலக்கணம்.

ஈசனூர் யானூர்கொ லென்னை மறைத்திருக்கும்
பாசமியா தென்றென்று பல்காலுங் - கோசரங்க
ளுண்டான காலமே யுன்னையறி யுங்கால
மண்டாசை யற்ற மாணு. (கக)

பக்குவமி லார்க்கருளல் பாவிக் கறமோதல்
மட்கலத்தைப் பொன்னாக்க வாஞ்சைகொளல் - சொர்க்கமிலாக்
கன்னிக்குக் காமனூல் கட்டுரைத்தல் கண்ணிலர்க்குப்
பொன்னாரம் பூட்டுதல்போ லும். (௧௨)

ஒருகோடி சூரியர்க ளொக்கவுதித் தாலுங்
குருடர்க் கிருளகலாக் கோட்போல் - மருடீர
வாசானு ரைத்தாலு மஞ்ஞானச் சித்தர்க்குப்
பாசாதி நீங்காது பார். (௧௩)

குருடனை மீன் றுய்யவெனக் கண்ணனறை கூவி
வருடமாயு தஞ்சொலினு மாற்று - திருடீர்ந்த
வுள்ளத்தார் வேண்டுவன சொற்று முணராரோ
கள்ளத்தார்க் குள்ள கடன். (௧௪)

நாமடங்கக் கல்லாச் சுவலர் தனித்தொருவர்
நாமடங்கா னென்பதற்கோர் சாக்கிகே - ஊமடங்கா
தந்தோ தகர்தின்னி யாத்தினியை நோக்கியிகழ்ந்
தந்தோதீ பாவியென லாம். (௧௫)

மூடனைப்போ லேயிருப்பன் முத்த னெனச்சொற்று
வீடு பொருந்துமோ வெங்கோவே - ஓடாகே
துக்க விடயஞ் சுகவிடயந் துய்த்தாலும்
பொய்க்குதிரை யேறுவான் போல். (௧௬)

## துவிதசைவனைமறுத்தல்.

ஒன்று யுலகனைத்து மாறுமொன் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்கக் - குன்றுக
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு. (௧௭)

ஓசை யொலியெல்லா மானாய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா - வாசையெல்லா
மற்றவிட முத்தி நிலையோ வஃதெல்லா
முற்றவிட முத்திநிலை யோ. (௧௮)

## மங்கையர்மயக்கறல்.

மூத்திரத்தி னனையப் பட்டமுடை யோனிக்காய்க்
காத்திரத்தை விட்டார் கணக்கில்லை - சாத்திரத்தால்

வானைக்கா றீர்ீரை மண்ணைப் பிரித்துசிவ
ஞனக்கா லாசை யறும். (௧௯)

மங்கையர்தம் யோனிமிசை வைத்திருக்கு மாசையினைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக் - கங்கையணி
வேணியான் பாதார விந்தத்தில் வைத்தக்காற்
காணலாங் காணுக் கதி. (௨௦)

## ஞானபூசை.

ஆத்துமலிங் கம்பொருளாக் கொள்ளா வழிவிலிகள்
வேற்றுமையா யெண்ணி விருப்பத்தாற் - பாத்தியர்கள்
கள்ளனைப் பாசத்தாலே கட்டியிறுக்குதல் போல்
வள்ளறனைக் கட்டு மதி. (௨௧)

ஆலயமே காய மறிவே சிவலிங்க
மாலயனுங் காணுத வள்ளலுக்குச் - சீலமுறு
மன்பே யபிடேக மன்பேநல் லர்ச்சனையு
மன்பேநை வேத்தியமு மாம். (௨௨)

பெண்ணுடை யாபரணம் பெய்தயிலந் தாம்பூல
முண்ணலணை சந்தனத்தோ டோரெட்டும் - விண்ணவர்க்கா
யாகாத நஞ்சுண்ட வண்ணலடி யார்தமக்கிங்
காகாது சொன்னே மறி. (௨௩)

தீர்த்தம் பிரசாதந் திருநீறஞ் சக்கரமுஞ்
சாற்றுமிறை கட்டிறந்த தாழ்வடமும் - போற்றுங்
குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங்
கருவகலக் கட்டுரைத்தேங் காண். (௨௪)

பாடப் படிக்க வெழுதப் பயன்சொல்லக்
கோடாமல் வந்துங் குணமில்லை - சேடாகேள்
சித்திரதீ பம்போலச் சிந்தை தனைநிறுத்திச்
செத்தசவம் போலே திரி. (௨௫)

மங்கைநிதம் பத்தானங் கண்டான் மதிமயங்கித்
தங்கருமங் கைவிடுவர் தாரணியோர் - புங்கவர்க
ளீசனடி காண்டோறு மென்புருகி நைந்துகரைந்
தீசனே யாவரறி தென். (௨௬)

அண்டங்கா றீீரவனியய மானனுடன்
வெண்டிங்க ணீள்கிரண வெய்யோனும் - பண்டுற்ற

ஊனக்கட் குண்டாகு மொன்றாய் மூளைத்தெழுந்த
ஞானக்கட் குண்டோ நயந்து. (௨௭)

## சதாநிட்டை.

சோர மனையாட்டி சோரபிரான் மேன்மனமாய்ச்
சேரத் தொழிற்செய்யுந் திட்டம்போற் - பேர்பெரியர்
அத்தனடி மேன்மனத்தை யாறுநு வைத்துகந்தே
யெத்தொழிலுஞ் செய்வ ரிசைந்து. (௨௮)

அஞ்சு புலன்வழியிற் போகா தகமுகமாய்
நஞ்சுண்ட நாதனடி நட்புற்றோர் - நெஞ்சலையக்
கோடி மடந்தையலாக் கூடிப் புணர்ந்தாலும்
வாடுதலு முண்டோ மதி. (௨௯)

ஆனை துரத்திடினு மஞ்சோ மரியுழுவை
யீனை முறவரினு மியாமஞ்சோ - ஞானப்பெண்
கொங்கைக் குவட்டின்மிசை நின்றோங் குவலயமுங்
கங்குல் பகலறியோங் காண். (௩௦)

பாலோடு சேர்ந்தநீர் பாலாகு மாங்கதுபோல்
வாலறிவ னைச்சேர்ந்த மன்னுயிர்கள் - வாலறிவன்
றானாகி நிற்பதல்லாற் றண்டாத வைம்பாச
வூனாகி நில்லா துவந்து. (௩௧)

ஆயிழையைக் காமுற்றே யாலிங்க னஞ்செய்தே
தாயிழையே தானான வாதரம்போன் - மாயையைவிட்
டையனொடு சேர்ந்தபினு மாங்கிரண்டென் டேயென்று
மய்யுநெறி யில்லை யுவந்து. (௩௨)

அரசன் மகனரச னாகிநின்றாற் போலப்
பரமசிவ னிற்றோன்றும் பல்லுயிரும் - பரம
சிவனாகி நிற்பதலாற் சீவனாய் நில்லா
சிவனானை யுள்ளே தெளி. (௩௩)

## அருளாசிரியனருமையுரைத்தல்.

ஆசானே நீறனென் றங்கைத் தலைவைத்தான்
பாசா திகளொந்தும் பாறித்தே - யாசானை
யுள்ளபடி நோக்கி யுறுபூசை செய்வதல்லாற்
கள்ளனிடத் துண்டோ கைம்மாறு. (௩௪)

அம்புலியு நீரு மறுகுமர வுங்கரந்தே
யம்புவியி லென்போ லருளுருக்கொண் - டெம்பெருமாங்
காணாத தெய்வமிங்கே கண்காண வேவந்தா
னாணாத தென்னோ நயந்து. (௧௫)

நீயேநா னென்று நிலையளித்த தேசிகனைத்
தூய மலரெடுத்துத் தூவாதார் - பேய்வாழுங்
காட்டிற் கனிதுய்க்குங் கருங்குரங்காய்ச் சென்றேயாய்
வேட்டுவனாய்ச் சென்மிப்பார் மேல். (௧௬)

உள்ள மலமகற்றி யொண்பொருளைக் காட்டிவைத்த
வள்ளலடி யென்றுநான்றும் வாழ்த்தாதார் - கள்ள
நரையானாய் நொண்டாகி நாளியாய்ப் பொல்லா
மரநாயாய்ச் சென்மிப்பார் மாண்டு. (௧௭)

தாய்போ லெழுந்தருளித் தானுக்குந் தேசிகனை
மாயப் பிறப்பறுக்கு மன்னவனைக் - காயச்
சினகரத்திற் பூசைசெய்து சேமிப்ப தன்றிச்
சினகரத்தில் வையேன் றெளிந்து. (௧௮)

வேதமுடி வைக்காட்டும் வெற்றவெறுந் தேசிகனைப்
போதமலர் கொண்டடியைப் போற்றாதார் - பாதமின்றி
யங்கை விரலின்றி யாறாத நோயராய்ப்
பங்குகுரு டாவார் பரிந்து. (௧௯)

உள்ளங்கை நெல்லியென வுள்ள படிநமக்குத்
தெள்ளித் தெளிவித்த தேசிகற்குக் - கள்ளவிழ்ந்த
பூத்தேடி நீர்த்தேடிப் போனகமுந் தேடியே
யாத்தமாய்ப் பூசிக்க லாம். (௨௦)

ஆக்கையு நீயல்ல வைம்பொறியு நீயல்ல
தாக்கு கரணங்க டானல்ல - சூக்க
வுடலல்ல சீவனல்ல வுண்மைநீ யென்றார்க்
குடலுருகி நிற்பே னுவந்து. (௨௧)

வெள்ளங் கிடந்தானும் விரிதா மரையானும்
விள்ளும் படியறியா மெய்ப்பொருளை - விள்ளும்
படிவந்த தேசிகற்குப் பாதகா ணிக்கை
கடிவந்த மென்மலரோ காண். (௨௨)

ஐயந் திரிவறுத்திங் காளவந்த தேசிகற்கு
நையு மனத்தோடு நாடோறு - நெய்யவிழ்ந்த
பூமா மலர்தூவிப் போற்றிநிற்ப தல்லாம
லேமாப்ப துண்டோ வினி. (சுங)

ஐய மெடுத்தருந்தி யாடையின்றிச் சென்றாலு
மையந் தவிர்த்தநம தாசானை - ஐயாவென்
றாதரத்தாற் பூசைசெய்யு மன்பினவ ரோமண்மேல்
மாதருத ரம்மணுகார் வந்து. (சுச)

ஆகந் திருக்கோயி லாசான திற்றெய்வஞ்
சோகம் புகைக்களியே சூழ்சுடராம் - போகங்க
ளெல்லாநை வேத்தியங்க ளிவ்வண்ண நாடோறுங்
கல்லாருஞ் செய்யக் கடன். (சுரு)

ஆசானைக் காண்டோறு மன்புருகுங் கைகுவியு
மாசா ருடம்புமயிர்க் குச்செறியும் - பேசாத
வானந்த முள்ளூறு மக்கணமே பாசங்க
டானந்து முத்தி தரும். (சுசு)

ஆன்பா லறக்கைக்கு மக்காரம் வெம்பாகு
மூன்பா லொராறுத்திருக்க வொட்டாவாம் - வான்பா
லொளித்திருந்த வுத்தமனு ரோருருவாய்ப் பாத
நளிர்த்த மலர்தந்தொழிந்த ஞான்று. (சுஎ)

என்றைக்கோ வீசனரு ளென்றைக்கோ முத்திநெறி
யென்றைக்கோ யேமாந் திருக்குநிலை - யென்றைக்கோ
வென்னும்பா சண்டமதத் தெய்தா தளித்தானை
யென்னென்று வாழ்த்துகேனி யான். (சுஅ)

குருவே திருமாலாங் கோகனகத் தானுங்
குருவே யுமையிறந்த கோவாங் - குருவேயிங்
கெல்லாமா யல்லவுமா யெங்கு நிறைவானும்
வல்லாள னுகு மதி. (சுகூ)

கறுத்த விரும்பைக் கனகமய மாக்குதல்போற்
சிறுத்தநமைப் பேருருவாய்ச் செய்தானை - வறுத்த
விதைபோல் வரும்பிறப்பை வேரறுத்த வேதியனைப்
புதைமனத்து ளெப்போதும் போல். (எ0)

பொது - முற்றிற்று.

## உண்மை.

காமக் கடலழுந்திக் கள்ளைக் குடித்துளறும்
வாமச் சமய மயக்கறுத்த - கோமானே
யாணவமே தாருயிரோ தானிசிவ மேதிதனைக்
காணவருள் வள்ளலே காட்டு. (ருக)

சிவனொருவ னுண்டவனாற் செகமுண்டு மற்றச்
சிவனருளைக் கொண்டறியுஞ் சீவன் - சிவனின்று
லண்டபிண்ட மின்றாகு மைந்தொழிலு மின்றாகும்
பண்டைமறை யின்றுநீ பார். (ருஉ)

ஆணவமே யஞ்ஞான மறியாமை யென்றறிநீ
காணுமறி வுனக்குக் காட்டுமிறை - *கோணைமலம்
பொன்றுமுட னல்ல போதமே நானென்னி
லன்றொழியு மப்பா வது. (ருங)

கல்கா யிழையார் கலவிமுத்தி யென்னு
முலகா யுதமொழித்த நாதா - விலகாத
வாணவமெக் காலத் தெனையணைந்த வாறறைதி
வீணரறி யாதவனே விண்டு. (ருச)

அறிந்தவிடத் தில்லை யறியாமை யத்தைப்
பிறிந்தபினும் பேசல்பிழை யன்றோ - செறிந்த
சுடர்கொண் டிருட்டேடித் துயருறுவா ருண்டோ
மடமகன்ற மாணுக் கனே. (ருரு)

எல்லா மிறந்திடத்தே யேகமிரண் டென்றுரைக்கும்
பொல்லார் மதமறுத்த புண்ணியா - வொல்லா
வவிகாரி யானானல் யாரேரோ வென்னுந்
துவிதம்வரு மாறேது சொல். (ருசா)

அவிகாரி யீச னருளைநீ பெற்று
லவிகாரி யாவையன்றி யச்சோ - வவிகாரி
நானென்ற மாத்திரத்தே நண்ணுமோ வக்காரத்
தேனென்றாற் றித்தியா தே. (ருஎ)

காட்டமனல் சேர்ந்தாற் கனலாவ தன்றிமுனங்
காட்டபுத்தி சேர்வதுவே கன்மமா - நாட்ட
மதுவாவே நிற்பதல்லா லாங்கிரண்டென் றுன்னிற்
பொதுவாவை போகாப் புவி. (ருஅ)

*கோணை - கொடுமை.

பாவனா தீதப் பதியேறிப் பின்னுநாஞ்
சிவனென்றுஞ் சிந்திப்பா ருண்டோசொல் - சிவ
மகன்றபுழுப் பின்புழுநா னென்றறைத லுண்டோ
சுகமறிந்த துண்டோ சுகம். (௫௯)

ஊமைகண்ட சொப்பனம்போன் றுள்ளே யறிவதன்றி
நாமிதெனச் சொற்றிடவு நண்ணுமோ - தாமதம்போ
லாங்கதுவாய்ப் போவதலா லன்றிதா மென்றுரைக்க
வீங்கொருவ ருண்டோ விசை. (௬௦)

ஊனுறங்கி யானுத வுள்ள முறங்கியொரு
நானுறங்கி ஞால முறங்கியுமே - தானுறங்காச்
சிவனை யறிந்தவனைச் சிவனென லாமோ
சிவகுருநாதா விதனைச் செப்பு. (௬௧)

நெருப்பிரும்பை நீருப்பை நீர்நிழலைத் தேடி
யரிப்பன்போ லாயினுமங் காகா-தருப்பணத்திற்
றன்னைத்தான் கண்டதுபோற் றன்னிழப்பிற் றற்றேடித்
தன்னைத்தான் கண்ட தரம். (௬௨)

ஒன்றென் றிரண்டென்று மொன்றிரண்டே யாமென்று
மென்றோரீ முத்திதனி லெய்ந்திடுவா - யொன்றென்று
சொல்லு மறிவைத் துரியாதீ தம்விழுங்கிற்
சொல்லுமவ னெங்குற்றான் சொல். (௬௩)

கொன்றிடுத றின்றாற் கொலையல்ல வென்றுரைக்கும்
புன்றலைய புத்தன்மதம் போக்கினே - யென்று
மழியாப் பரமசிவ னாகத்தின் கண்ணே
யொழியாம லெங்கிருப்பா னேது. (௬௪)

உள்ளந் திருக்கோயி லூனுடலே சுற்றுமதிள்
வள்ளலுக்கு வாயே மணிச்சிகரந் - தெள்ளித்
தெளிந்தவர்க்குச் சிவன் றிருமேனி தீப
மளந்தறியு மைம்புலனே யாம். (௬௫)

எண்பத்து நான்குநூறாயிரமா மியோனிதொறுங்
கண்பொதிந்த சீவர் கருத்துள்ளே - பண்பொதிந்த
தேவியொடு மீசன் செறிந்திரா னேயாயி
னாவியொன்றை யுற்றறியா தாம். (௬௬)

எங்குஞ் சிவனிருப்ப னானலுமேசற்ற
சங்கமத்துஞ் சற் குருவின் றன்னிடத்தும் - லிங்கத்து

மாவினுடம் பெல்லாமு மாவரித்து நிற்கினும்பால்
பாவுமுலைக் கண்மிகுதிப் பார். (௬எ)

பூவின்மணம் போலுள்ள புண்டரிகத் துள்ளேமா
தேவியொடு நீங்காச் சிவனைத் - தாவிநீ
யைம்புலனை வென்றங் கறிந்தா லவனவை
யைம்புலனுக் கெட்டா னவன். (௬அ)

ஆகாய மெங்கு மகண்டமாய் நின்றாற்போ
னீகாய மின்றியெங்கு நிற்பாயேல் - மாகாயத்
துள்ளொளியா மீச னுனைப்பிரியா தேநின்ற
கள்ளந் தெரியுமங்கே காண். (௬௯)

பதிமார்க்க நிட்டையன்றிப் பசுமார்க்க நிட்டை
விதிகால நீசெயினும் வீணாம் - பதிமார்க்கந்
தானுமெதி ருங்கழன்ற சமாதியிலே தாக்கற்று
நீநின்றாற் போது நிமிடம். (எ0)

தம்மை யறிந்தருளிற் சம்பந்த மானவனே
செம்மைநிலை யொன்றுளது செப்பக்கேண் - மும்மை
யறிவுகடந் தப்பா லதீதத்தே நிட்டை
செறிபவனர் சொல்லாய் தெளிந்து. (எ௧)

பதிநூல் பயிலாத பாசண்டர் மார்க்கங்
கதியல்ல வென்றுரைத்த கர்ஞ - பதிநூலே
துள்ளபடி சொல்லா யுயர்ஞானக் கண்ணுடைய
வள்ளலே யெற்கருளை வைத்து. (எ௨)

சிவஞான போதத்தாற் சென்மவிடாய் தீர்ந்து
சிவஞான சித்தியாற் றேறிச் - சிவஞான
போதத்தை மெய்கண்டான் போதித்தான் சித்தியினைச்
சாதித்தான் றனருணந் தி. (எ௩)

மற்றிரண்டு மாய்ந்து மறுவி லுமாபதியார்
சொற்ற சிவப்பிரகா சத்தொன்னூ - லற்றநிலை
யாங்கதுவே சீவன்முத்த ருக்குவிக்கு மந்நூலே
யோங்குகதீ ழேயும்பின் னும். (எ௪)

அம்மைதிரு வந்தாதி நக்கீர ரந்தாதி
பொய்ம்மையிலாப் பொன்வண்ணத் தந்தாதி - செம்மைத்
திருமூலர் மாலையிவை சித்தாந்தமாகும்
வருமூவர் வாக்கியமு மாம். (எ௫)

சித்தாந்த மென்னுந் திருவிளக்கைக் கொண்டறிந்தேன்
முத்தாந்த வாவி முதற்பொருளைச் - சித்தாந்தத்
தேனைப் பருகிச் செநந மரணமெனுங்
கானைக் கடந்தொழிந்தேன் காண். (எசு)

ஆறாத கண்ணீ ரு மடங்காத பேரன்பு
மாறாத வஞ்சலியும் வாய்த்தவருக் - கூறாத
கல்லிற் புறப்பட்ட கையுடையா னக்கணமே
மல்லற் பிறப்பகற்று வான். (எஎ)

குடும்பத்தை யென்றோட் குலைப்பேனோ பொல்லா
விடும்பையினை யென்றுநான் றீர்வேனோ - குடம்பையினிற்
புட்பறந்தாற் போலேயான் பொய்யுடல்விட் டேகுவனோ
நுட்பசிவ னாவே னோ. (எஅ)

புண்ணுடலை நீப்பேனோ பொன்றாத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ - வெண்ணுடைய
வஞ்செழுத்தி னுண்மை யறிவேனோ வாங்கதுவாப்
பிஞ்செழுத்தைப் பின்னிடுவே னோ. (எகூ)

இவ்வண்ணம் பக்குவருக் கீசனரு ளக்கணமே
யுய்வண்ணங் காட்டி யிருளோட்டு - மெய்வண்ண
மார்க்கண்டற் காகமுனம் வந்தசிவ னங்கொளித்தான்
மூர்க்கற்கு முன்னின்றான் முன். (அ0)

இல்லாத வன்பினர்க்கே யீசன் மிகவரியன்
றொல்லாழி வையகத்திற் றோன்றானே - நல்லார்தங்
கல்லுஞ் சிலையுமொரு கைப்பிரம்பும் பட்டமையா
லெல்லார்க்கு மீசனெளி யன். (அக)

எல்லாங் கழன்றிடமே யேகாந்த மானவிடஞ்
சொல்லா திறந்திடமே சுகவுதய - மில்லா
விசுவ மிறந்திடமே மென்சுவர்க்க மென்றான்
சிசுக்குமுடி சாய்த்த சிவன். (அஉ)

ஊமை மணிபோ லொடுங்கிச் சிவமான
தூமனத்தார்க் கிந்நூற் சுகங்கொடுக்கும் - வாய்மையிலாச்
சமுக்கர்க்கிந் நூல்போதா தாருஞ் சமய
வழக்கே யவர்க்கமையு மால். (அங)

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தருமென்றல் - பேராசை

நீக்கத்தி லீச நிறையா நிறைவாதல்
சூக்கத்தின் மோக்கத் துறை. (அசு)

தந்தைபோ நாடோறுஞ் சாத்திரங்கற் றேறுகின்ற
பெத்தருக்கு ஞானப் பிரகாச - நத்தலிலா
வேம்பூமத் தங்காயும் வெங்காஞ்சி ரங்காயு
மாம்பாகு போன்முத்தர்க் காம். (அரு)

கல்லைப்பொன் னாக்கிக் கடுமுதலை வாய்ப்பிள்ளை
மெல்ல வழைத்து வெறுக்கையினைச் - செல்லுகின்ற
வாற்றிலிட்டு மீட்டு மருங்குளத்திற் கண்டதுவுஞ்
சாற்றிற் சிவகரணந் தான். (அசா)

என்னைப் பெண்ணாக்கி யிரும்பாலை நெய்தலா
யும்பர் மகிழ்ந்திடவன் றேறியதுந் - தம்பிரான்
கதவ மடைக்கக் கழறியது மெல்லாம்
பதிகரண மென்றுணரப் பா. (அஎ)

அரவங் கடித்திறந்தா னாருயிரை மீட்டுந்
திருமறைக்காட் டிற்பின் றிறந்துங் - கரமலையை
நீற்றறையை வேகமற நீராகப் பாடியதுங்
கூற்றுதைத்தான் போதமெனக் கொள். (அஅ)

ஊமையினை மாற்றி யுணர்மொழியைச் செய்ததுவுங்
காமனைவென் றேனெழுதக் கற்றதுவு - மாமையைப்போ
லைந்தடக்கி யீச னருளிற் கலந்ததுவு
மூந்தும் பசுகரண மோ. (அகூ)

பசுகரண நீங்கிப் பதிகரண மானாற்
பசுபாச மக்கணமே பாறு - மசிபதத்தை
யெதிரிட்டுக் கொள்ளற்க வென்றாலும் பின்னு
மெதிரிட்டுக் கொள்வா யிதென். (கூo)

சரியைகிரி யாயோக சங்கடத்தை மாற்றி
யொருஞானப் பேறளித்த வுன்னைத் - தெரியாத
பெத்தத்தி லுங்காணேன் பேராத வானந்த
முத்தியினுங் காணேன் மொழி. (கூக)

அண்ணலைக் காணி லவனிவனே யாமென்னும்
வண்ணத் திருமூல மந்திரமு - நண்ணுகின்ற
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மீசனெனும்
பொன்வண்ணத் தந்தாதி யும். (கூஉ)

அத்துவித முத்தி யளித்தகுரு நாதாவென்
பொய்த்துவிதம் போமாறு போதித்த - கத்தனே
முத்தியிலு மும்முதலு முண்டென் றுரைப்பதுவுஞ்
சத்தியமோ மித்தையோ சாற்று. (௯௩)

கையிலுறு புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுவமோ
மெய்யுணர்வி லுண்டோ விபரீத - மையறிவு
மோரறிவாய்ப் போனவிடத் தோகோகோ மும்முதலுஞ்
சோராம னிற்குமோ சொல். (௯௪)

சைவஞ் சிவத்தோடு சம்பந்த மாணமையாற்
சைவமே யத்துவிதஞ் சாதிக்குஞ் - சைவத்தை
வேறென்று கொள்ளற்க வேறற்ற வேதாந்தக்
கூறென்று கொள்ளுதலே கொள். (௯௫)

இருவினையொப் புற்று லெய்துமல பாகந்
திரிகரண சுத்தியுனைச் சேரு - மருள்பதியு
மாசா னெழுந் தருளு மமல னருளுதவு
நாசமடை யும்பிறவி நாடு. (௯௬)

சிவத்தோ மசியென்னுந் திருவாக்கா லென்றன்
பவத்தை நசித்த பரனே - யவத்தையிலே
சிவனென்றுங் கேவலத்திற் சேதனனன் றென்றுமுறும்
பாவனைகள் போமா பகர். (௯௭)

பொன்மலையைச் சேர்ந்தசிறு புன்காக்கைப் புள்ளினங்க
டன்னிறமும் பொன்னிறமாய்ச் சாருமால் - முன்னவனைச்
சேர்ந்தாரு மன்ன சிவோகம்பா வித்தலா
லாய்ந்தவனே யாமா றறி. (௯௮)

சீரார் சிவோயமத்தி யென்னுந் திருவாக்காற்
பேராசை யெல்லாம் பிரிந்தோனே - யாராத
வன்பாலுன் பாதத்துக் கர்ச்சனையு மற்றிரண்டி
லெண்புகுரும் பத்தியுமெற் கீ. (௯௯)

சிவஞானப் பிரகாசச் செந்நூலை முன்செய்
தவமுடையார்க் கென்ஞான்றுஞ் சாற்றப் - பவமுடைய
பாமரருக் கிந்நூலைப் பன்னற்க பன்னுகவெங்
காமாதி யெல்லாங் கழற்றி. (௧௦௦)

சிவஞானப்பிரகாசவெண்பா - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## ஆறாவது
## ஞானவிளக்கம்.

### பாயிரம்.

கல்லாலின் கீழிருந்த கண்ணுதலை மாமேரு
வில்லாற் புரமெரித்த வேதியனைச் - சொல்லாமற்
சொல்லிப் பிறப்பறுத்த தூயவனை நன்னெஞ்சே
சொல்லிப் பல்காலுந் தொழு. (௧)

அன்னை வயிற்றி லழுக்கிச் சிலகாலம்
பின்னை யுலகிற் பிறப்பித்து - மன்னுகலை
யெல்லா மறியவெனக் கென்போல வந்தாண்ட
கல்லாலா முற்றுமெனைக் கா. (௨)

ஒருவாக்கி னாலடியே னுள்ளந் தெளியத்
திருவாக் களித்திட்டாற் றீதோ - குருநாதா
வட்டிலுக்கு வாய்வைத்த வாறேபோன் மாமறைநூல்
கட்டிவைத்த தென்னே கழறு. (௩)

பக்குவத்துக் கீடாயப் பன்னெறி களுஞ்சொல்லு
மிக்கவதி பக்குவற்கு வேதந் - துக்கமிலா
ஞானத்தைச் சொல்லுமதை நன்றாய் விசாரித்துன்
னூனத்தைப் போக்கிடநீ யுன். (௪)

கங்கை நிகர்க்குமருட் கண்ணுதலோன் சொற்றநூல்
கங்கை யொழிந்த கழியொக்குங் - கங்கைநதி
சூழ்கிடந்த சென்னியற்கே தொண்டுபட்ட நன்மாணை
ஆழ்கிடந்த நெஞ்சா றுணை. (௫)

பாயிரம் - முற்றிற்று.

---

சத்து மசத்துஞ் சதசத்து நீயல்ல
சுத்தசிவ நீயென்று சொல்லினான் - மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழிருந்து கதிகாண நால்வர்க்குஞ்
சொல்லாமற் சொன்ன துரை. (௬)

ஒருபொருளை நீத்தங் கொருபொருளைப் பற்றி
யிருபொருளும் போக்கி யிடையே - யொருபொருளு
மற்றநிலை யேதோ வஃதுன் னிலையென்றான்
குற்றமற்ற ஞான குரு. (எ)

காயந் துவளாமற் கரண மசையாமல்
வாயும் பதையாமன் மாற்றியே - நேயத்
தறிவாநந் தத்தி லமைக்கண நின்றாலும்
பிறவார் சிவனுணை பின். (அ)

ஆக்கறக்கு மந்நேர மம்புவிழு மந்நேர
நோக்கிமைக்கு மந்நேர நுண்ணறிவா - னீக்கமற
நானென்னும் போத நழுவிச் சிவமானார்க்
கினைபிறப் புண்டோ வினி. (கூ)

மேலவத்தை கீழவத்தை வீட்டி நிராலம்ப
சாலவறி வாகத் தரியென்று - வாலறிவன்
கால்வைத்தான் சென்னியிலே கைவைத்தா னென்னுளத்தின்
பால்வைத்தான் றன்னுருவைப் பார். (கo)

தலையெல்லாந் தெய்வமெனுந் தன்னை மற்றேனை
யிடையெல்லாம் வேறிருக்கு மென்னுங் - கடையெல்லா
மரத்தைப்பா டாணத்தை மண்ணையிருஞ் செம்பைக்
கருத்துருகத் தெய்வமெனுங் காண். (கக)

உத்தமங்களெல்லா முணர்வையே தாம்பேணு
மத்திமங்க ளேபதுமை யைவாழ்த்துஞ் - சுத்த
வதமங்க ளெல்லாந்தன் னுகத்தைப் போற்று
நதியோடை கூபமென நாடு. (கஉ)

சீடனறி வெவ்வளவோ வவ்வளவுஞ் சிந்தித்துக்
கூடுமுப தேசங்கள் கூறுவா - னீடுபுக
ழூக்கமுடைச் சிராம னெண்ணுதற்கா யன்றெய்தான்
காக்கைக்குத் தக்க கணை. (கரு)

ஆகாயந் தேடி யலைவோருக் காகாய
மாகாயத் துட்காட்டன் மானுமே - யேகபரி
பூரணத்தைத் தேடிப் புலம்புவோ னுக்காசான்
பூரணனீ யென்றுபுக றல். (கச)

கச

மீனமதியம் விழுங்க விரிவெண் மதியைப்
பானு விழுங்கும் பரிசேபோ - லூனுயிராப்
பனைவிழுங்கப் பட்டுப் பனையைப் பனைக்குந்
தனைவிழுங்கப் பட்டதுசொர்க் கம். (கரு)

அறிவா லறிந்தவது வெல்லா மறிவன்
றறியா மையுமறிவே யன்று - லறியா
வறிவா யிருந்து மறிவிலே னென்னு
மறிவிலர்க்கு ஞானமரி தாம். (கசு)

உள்ளத் தொளியா யொருகா லவியாத
வெள்ளவெளிப் பெம்மானை வேறாக்கிக் - கள்ளமுறுங்
கற்பனையால் வேறோர் கடவுடமைக் காமிக்கு
மற்பருக்கு ஞானமரி தாம். (கஎ)

ஆறாறு தத்துவத்துக் கப்பா லதீதத்தே
வேறாகத் தம்மை விசாரித்துங் - கூறாக
வாநந்தந் தாமென் றறியா வறிவிலிக
ளாநந்தந் தேடியலை யும். (கஅ)

தத்துவத்துக் கப்பாலே தன்னைத் தரிசித்து
நித்தபரி பூரணத்தி னில்லாமல் - சுத்த
பனிமாயை யாற்செய் பதுமையினைத் தேடு
மனிமா னிடமிருக நாடு. (கக)

ஆக்கைநீ யல்ல வறிவுநீ யென்றுமறை
வாக்கியங்க ளன்றும் வருத்துரைத்து - நோக்காமல்
மீட்சிதரு மீசன் விழியெதிராய் முன்னின்று
காட்சிதா வென்னுங் கடை. (உo)

ஊழா லுடம்புண் டுடம்பால் வினையுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு - காழ்கொண்ட
வித்துமுளை யும்போல வீயா தொருக்காலு
முத்தியிலே வீயு முளை. (உக)

கன்னிக்கு மின்பமிலை கற்றோர்க்கு மின்பமிலை
கன்னியொழிந் தாலின்பங் கன்னிக்குப் - பன்னுதமிழ்
கற்றவருக் கின்புதயங் கற்றுங்கற் றஃதொழிந்தா
லற்றநிலை யீதென் றறி. (உஉ)

ஞானமிலான் செய்யுங் குருத்துவத்தை நாடுங்கால்
யோனியிலாப் பெண்டா னுருவத்தான் - மேனி
யலங்கரிக்கும் பின்ன ரனுபவகா லத்திற்
கலங்கி மனமுடையுங் காண். (உ௩)

நிதம்பமிலாப் பெண்ணு நிகழலியுங் கூடி
யிதம்பெற்ற வின்பசுக மேய்க்குஞ் - சிதம்பற்ற
நற்குண மிலாசானு ஞானமிலாச் சீடனுமாய்த்
தொக்கிவரு மின்ப சுகம். (உ௪)

அங்கோட் டகலல்கு லாயிழையு மாடவருந்
தங்கிவரு மின்பந் தழைத்தாற்போற் - சங்கையற்ற
வாசானுஞ் சீடனுமா யாங்காங் களாவியே
பேசவரு மின்பப் பெருக்கு. (உ௫)

## பிரார்த்துவத்துக்கிரங்கல்.

ஞானத்தை யீதென்று காட்டி நவைசேரு
மூனத்தை நீமிதிக்க வொண்ணுதோ - வீனச்
செவிநாசி யாலறிவாற் சென்றறிய லாகா
வவிநாசி யப்பா வறை. (உ௬)

காமப் பெருநெருப்பைக் கங்கை யவியாதோ
தீமையினைச் சாந்தந் தெகியாதோ - வாமப்பாற்
பெண்மயலைப் போக்காதோ பிரமனரி காணுத
வொண்மயிலை யப்பா வுரை. (உ௭)

ஆங்காரந் தன்னை யழியாத வாணவத்தை
வாங்கு மழுவெரிக்க மாட்டாதோ - நீங்காத
மாயப் பிறப்பதனை வன்சூலந் தாக்காதோ
வாயுமறைக் காடா வறை. (உ௮)

வானவர்க்கா யன்றுதிரு வாய்மலர்ந்த மெய்ஞ்ஞான
மேனையடி யோங்களுக்கு மெட்டாதோ - ஞான
குருநாத னென்று குமரருக்குச் சொன்ன
பெருஞான மெங்களுக்குப் பேசு. (உ௯)

## பிறவிவருத்தம்.

எண்டிசையும் போற்ற வெழிலார் முடிசூடி
யண்டமொரு குடைக்கீ ழாண்டாலு - மண்டு

பிறவியிலே யின்பமிலை பேரிடும்பை யல்லாற்
றுறவிலே யின்பச் சுகம். (௩௰)

தருநிழலை நல்லமிர்தைத் தண்டாத மங்கையரை
யொருவி யுயர்வனத்தி லேகிக் - கருதரிய
பிறவி வருத்தமெனப் போகி நெடுங்காலந்
துறவியாய் நின்றிலரோ சொல். (௩௧)

காமாதி யாலுங் கடுவெம் பசியாலுஞ்
சாமாறுந் துன்பமதைச் சாற்றகிலேன் - கோமானே
யெண்சா ணுடம்பாலே பட்டதுய ரென்சொல்கேன்
புண்பாலில் வேலுழைந்தாற் போல். (௩௨)

பாசமுத லைவகையு நீக்கிப் பதியாக்கிப்
பூசை தவம்விரதம் பொய்யென்ற - வாசிரியன்
கால்நா துதைத்தாலுங் கைதவங்கள் செய்தாலுங்
கோல்கொ லடித்தாலுங் கொள். (௩௩)

குருவாக் கமுதமெனக் கொண்டுவந்த சீடன்
குருவாக்கை யன்றிமற்றைக் கொள்ளான் - குருவாக்கா
லுய்ந்தோமென் றிந்த வுலகறியப் பன்முறையுந்
தொழுந்தோமென் றோடித் தொழும். (௩௪)

மானுமழு வுங்கரந்து மானிடன்போல் வந்தாரைப்
பூநீருங் கொண்டடிக்கீழ்ப் போற்றுதார் - கானகத்துள்
வேடராய் நாடோறும் வெம்பசியி னல்லைந்து
பீடினர கம்புகுவார் பின். (௩௫)

## ஈசுரபத்தி.

பல்லா யிரங்கோடி பானு வுதித்தாற்போற்
கல்லாலின் கீழிருந்த கண்ணுதலை - வில்லார்
மணிப்புருவ நாப்பணிலே வைத்திருந்தார்க் கில்லை
பிணிப்பிறவி யென்னும் பிழை. (௩௬)

ஈசன் றிருமேனி யெட்டுமெனக் கண்டறிந்தாற்
பாசநமை விட்டகலப் பார்க்குமே - யீசன்
றிருமேனி யென்றுனது சிந்தையிடைக் காணிற்
கருமேனி யில்லையெனக் காண். (௩௭)

ஈசன்வே றியான்வேறென் றெண்ணுங் கடையினங்க
ளீசனடி யென்னு மிடையினங்க - ளீசனே

யானேமென் றேமாக்கு மாயிற் றலையினங்க
ளானுத மானு வறி. (௩அ)

## பிரமக்கியானம்.

எல்லா மறிவாகக் காண்ட லெழிற்பூசை
யொல்கா வவனுத லுட்பூசை - நில்லா
வுலகத்தை மாயா வுடலைத்தா டித்த
விலகுமரன் ஶ்ரோத்திரமா யெண். (௩௯)

உயிர்க்குயிரா யீச னொழியாம னிற்க
வுயிர்க்குயிராக் கண்டிங் குணரா - துயிர்க்குயிரை
வேருக்கிப் பூசிக்கும் விரகிலிக்கு முண்டாங்கொல்
வேருகா மெய்ஞ்ஞான வீடு. (௪0)

## பாசவைராக்கியம்.

நினைப்பு மறப்புமிந்த நீடுலகு மித்தை
யனைத்தும்போ லீச னவேன் - உனற்கரிய
கன்னனுக்கு வேடு கழித்தகதை போலுனக்கு
மன்னியமே வேடென் றறி. (௪க)

## சீவகாருண்ணியம்.

மென்புழுக்க ளாதியுயிர் வீடுமென நாடித்தம்
மென்பதத்தை மெல்லென்ன வேவைப்பார் - இன்பக்
குடைநிழற்கீழ் நிற்பதெலாங் குற்றமெனக் கண்ட
சடபரதனே யிதற்குச் சான்று. (௪௨)

வேங்கை புலான்மறுத்து வீடுற்ற தன்றியுமோர்
தீங்ககன்ற நாயுமின் றின்னமற் - பூங்கயிலை
யுற்றிருந்த தந்தோ வொருபுறவுக் காயரசன்
முற்றுமரிந் தீந்திலனே முன். (௪௩)

## ஞானநிலை.

நல்ல குலத்திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மானு - நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தை கலங்காதே
சிவமென்ற நீயே சிவம். (௪௪)

தேகநா மென்றெண்ணிச் செத்துப் பிறந்துழலும்
பாகமுற்ற மானு பகரக்கேள் - சோகமுற்று

மாகாயம் பொன்றுமதின் மன்னுயிர்பொன் றுதங்
காகாயம் போலே யறி. (சரு)

காயுங் கிழங்குங் கனியருந்தி நோற்றாலு
மாயும் பிறப்பகல மாட்டுமோ - காயத்திற்
றங்குஞ் சதாசிவனைத் தானாகக் கண்டுதனை
யெங்குமாய்க் கண்டா லிறும். (சசு)

## சற்குருதரிசனம்.

நெருப்பு வழிநடப்பி னீர்தேடு வார்போற்
கருப்பிலனந் தேடுங் கதைபோல் - விருப்புற்றுப்
பக்குவத்து நாயகனைத் தேடுகின்ற பைந்தொடிபோற்
சற்குருவைத் தேடுந் தரம். (சஎ)

கிடைத்தகுரு வைப்பணியாக் கீழ்மையொடு நிற்றற்
குடைத்து பலகதைக ளோகோ - தொடுத்த
சசிகொழுநன் வாணனெனுந் தானவர்கோன் பொல்லாச்
சிசுபால னாதியெனத் தேர். (சஅ)

அறியா தனவெல்லா மாங்காங் கறிவித்துப்
பிறியா தனவெல்லாம் பேசி - நெறியாரும்
பக்குவத்தின் மெய்ஞ்ஞானப் பாலருத்தி விக்குமொரு
சற்குருவைப் போலுமுண்டோ தாய். (சகூ)

வானெங்கே மண்ணெங்கே மாயாமலமெங்கே
யூனெங்கே யூனினுயிரெங்கே - கோனெங்கே
யொன்றா யுருவிலனா யொக்கவெடுத் தேவிழுங்கி
நின்றான் பரிபூ ரணன். (ரு0)

விடையக் குழாங்கடமை வீட்டி யிருந்தாலு
மடையவுடம் பாடேயா னாலும் - நொடியளவும்
விட்டுப் பிரியகிலேன் மெய்ஞ்ஞானப் பெண்ணையன்பாற்
கட்டியணைந் தொன்றானக் கண். (ருக)

தத்துவத்துக் கப்பாலாந் தத்துவமன் றந்தனிலே
முத்தியெனும் பெண்ணை முயங்குவோர்க் - கெத்தனையோ
கோடிவிடையக் குழாங்க ளெதிர்ந்தாலும்
பாடழிய மாட்டா ரப்பா. (ருஉ)

அஞ்சின்வழி செல்லா ராறின் படிநில்லார்
வஞ்சரொடுங் கூடி மருவார்க - டுஞ்சுநிலை

தபனனெதிர் நின்றுபல்காற் சாற்றினுங் கொள்ளார்க
ளுபநிடத மன்றியுண ரார். (ருங)

வெந்தமடிதோறுண் விளாப்போல் விழியெதிர்ந்து
பந்தமுற வொன்றேனும் பாவியா - ருந்துஞ்
சிவன்பா னினைவெல்லாஞ் சென்றடையச் செய்வார்
நமன்பா லணுகாதார் நாடு. (ருச)

ஐவரொடுங் கூடாம லந்தரங்கச் சேவையினைத்
தெய்வகுரு காட்டத் தெரிசித்தே - னையமறக்
கண்டே னெனுஞ் சொல்லுங் காணுமை காட்டுதலால்
விண்டேன்வா யில்லையினி மேல். (ருரு)

மதப்பட்டவா னையனூர் மாதர்பாற் சிக்கி
யுதைப்பட் டுணர்வழிந்தா ரோகோ - நதிப்பட்ட
செஞ்சடையான் செம்பதுமச் சேவடிக்கீழ்த் தொண்டராய்த்
துஞ்சிச் சுகமடையா தோர். (ருசு)

உற்றசரிதையனுக் கோராயிரம் பிறப்பு
மற்றையர்க்கு நூறுகும் வன்பிறப்பு - முற்றுகின்ற
யோகிக் கொருபிறப்பு வண்மைச் சிவஞான
மோகிக்கு விப்பிறப்பின் முத்தி. (ருஎ)

எறும்பு கடிக்காவி யிறக்குமெனை வஞ்சுங்
குறுந்திவலைக் கண்ணனுக்குங் கோல - நறுந்தொடையன்
மார்பகத்து வேல்பிடுங்கி மாற்றலர்மே லெய்வாற்குந்
தூரமோ வண்ணிதோ சொல். (ருஅ)

இருளகன்ற ஞானிகள்பா லின்பமயமாகி
மருளகன்ற ஞான மணியே - யிருளகலா
முழுமக்க டம்பக்கன் முடமாய் நின்றுயென்
றழுவக் குழைந்தவனே சாற்று. (ருகு)

காமாதி குற்றங் கழன்றிருந்த லானுமுய
ரோமாதி யுள்ளுணர்த லானு - மாமையென
வைம்புலன்க ளுள்ளடக்க லானு மடியவர்பா
லின்பமுறக் காண விருப்போம். (சுo)

பாவனு தீதம் பரமசிவ மென்றுரைத்தாற்
பாவித்து நீயதனைப் பாராதே - பாவித்த

போதேநீயுண்டாவை புத்திமுதற் றத்துவங்க
டீதொன்ற வுண்டாந் தெளி. (சூக)

அறிவே சிவமென் றறைந்த திருமூலர்
பிறிவின் மொழியொன்றைப் பிடித்தார் - பிறியாச்
சநந மரணமிலை சங்கேத மில்லை
மனனமிலை யென்றே மதி. (சூ௨)

அறிவு திருவிதத்துக் கப்பா லறியு
மறிவு சிவமதுவே நீயா - மறிவொன்றிக்
கண்டாருங் காணுக் கதியை மழபாடிப்
பண்டாரங் காணும் படி. (சூ௩)

வாக்கிலியாய்க் கண்ணிலியாய் மத்தராய் போகாமற்
றேக்கு மறிவோடு சென்மித்தும் - பாக்கொண்டு
பாடார் குருபதத்தைப் பாரார் பலநினைப்பும்
வீடார் சும்மாவருமோ வீடு. (சூ௪)

கூனுஞ் செவிடுங் குருடு முடமும்போய்
மானிடரா யங்கங்கள் வாய்த்திருந்து - ஞானநிலை
சேர்ந்தறியா ரந்தோ செகசாலத் துட்பட்டுச்
சாந்துணையுஞ் சஞ்சலித்தார் தாம். (சூ௫)

தருநிழலு நல்லமிர்துந் தண்டாத மங்கையரும்
வருமென்று வேள்விசெயு மந்திமர்கா - டருமரமே
யமிர்தம் பசுவின்பா லாயிழையார் வேசியெனு
வுமைபங்க னுகம மோதும். (சூ௬)

சரிதையிலே யீசன் சடவடிவாய் நின்முன்
கிரியையிலே மந்திரத்திற் கிட்டி - யருகிருந்தா
னானமிலா யோகத்தி லுள்ளொளியா யேநின்முன்
ஞானமதி னுயி ருன். (சூ௭)

பாழுழைக் கண்டு பராவி யழுவாரை
வாழூரர் கண்டு மதிப்பரோ - பாழுழை
வாழூர்மேல்வைத்து மனமிறந்த மாண்பினரை
யூழூருங் கண்டறியு மோ. (சூ௮)

சுத்தப் படிகமுச்சிச் சூரியனைச் சந்தித்தா
லெத்தன்மைத் தத்தன்மை யீசனிலை - யுற்றுற்றுப்

பாராத வர்க்குப் பவமும் பலபிணியும்
போராடு மெஞ்ஞான்று போம். (௬௯)

தன்னை வினையைத் தலைவனையு முன்னுது
பொன்னைப் புவியையெழிற் பொற்கொடியை - யுன்னியுனிக்
காலங் கடத்துகின்ற காமுகர்க்கு முண்டாங்கொல்
ஞாலங் கடத்துகின்ற நாடு. (௭0)

என்னை யொழிய விரையு மிருண்மலமுந்
துன்னு முயிரின் றொகையாவும் - பன்னுகின்ற
வந்திமக னும்விண் மலருஞ் சரோருகமும்
முந்துமுயற் கோடுமென வோர். (௭௧)

பொன்னை யரித்தெடுக்கும் பொன்னரிப்பன் போலாசான்
என்னை யரித்தெடுத்தா னிவ்வுடலிற் - றுன்னரிய
பாலை யரித்தெடுக்கும் பாலன்னஞ் சற்கரையை
யாலை யரித்தெடுக்கு மால். (௭௨)

அடிக்கரும்பு காட்டுகின்ற வாராத வின்பை
முடிக்கரும்பு காட்டுமோ மூட - மிடிக்கின்ற
மெய்ஞ்ஞானி காட்டுகின்ற மெய்ஞ்ஞானந் தன்னையொரு
பொய்ஞ்ஞானி காட்டுவித்தல் பொய். (௭௩)

கிணறுதொடா முன்விளங்காக் கேடிலா காயங்
கிணறுதொட முன்விளங்குங் கேண்மை - யுணருங்காற்
கருவிகளிற் றன்னைத்தான் காணுமை நின்றதுவும்
கருவியினிற் கண்டதுவுங் காண். (௭௪)

ஆனையுரி போர்த்தாடு மம்பலவா வென்னுடைய
வூனவுரி போர்த்தாட வொண்ணுதோ - ஞானநிலை
வெள்ளிமலை வீற்றிருந்து வேதியரோர் நால்வர்க்கு
முள்ளபடி சொன்ன யுரை. (௭௫)

பொங்கு மலநீங்கப் பூரணவா காயத்தி
லெங்குநிறைந் தாடுகின்ற வெந்தையே - யிங்கெனைப்போல்
வந்தானஞ் ஞானமே மாயையே கன்மமே
நந்தாம வின்றே நட. (௭௬)

ஆணவமே நீர்போமி னஞ்சலிசெய் தேனுமக்கு
கோனைசிவ னென்பாற் குடிகொண்டா - னீணிலையத்

துன்பம் பயக்கின்ற துக்கசுகமே போமி
னின்பமுறு காயத்தோ டின்று. (எஎ)

எல்லாமிறந்து மிறவாத ஞானிகட்குச்
சொல்வார்க டிட்டாந்தஞ் சோம்பரையே - யெல்லாமுந்
தீரத்துறந்த துறவிக்குத் திட்டாந்தம்
போர்முகத்து வீரர்மனம் போல். (எஅ)

எல்லாத்தையுந் துறந்துந் தற்றுறவா யோகிக்கிங்
கெல்லாப் பிறப்பு மிரியாவா - மெல்லா
மிறந்தோ மெனுமுணர்வு மிம்மையிலே போனு
லிறந்தோடிப் போம் பிறவியே. (எகூ)

முப்புரத்தை யன்றெரித்த முக்கணப்பா வென்னுடைய
பொய்ப்புரத்தை யின்றெரிக்கப் போகாதோ - முப்புரத்தின்
மூவரைக்காத் தாண்டதுபோன் முப்புரத்திற் சான்றாய
சீவரைக்காத் தாலுண்டோ தீது. (அ0)

வெள்ளைக் குடைநிழற்கீழ் வேந்தாகி யாண்டாலு
மெள்ளவிரந் துண்டிங் கிருந்தாலு - முள்ளத்தை
மாலயனுங்காணு மலரடிக்கீழ் வைத்திருப்பர்
சாலவறி வாருந் தவர். (அக)

ஆசிரிய னுலடங்கி யடியர்புறம் போந்தருளா
ரீசனையேகூடி யிருளகன்று - மாசறவே
நாட்டானை காட்டெறும்பு நதிவிள்க்குப் போலாயர்
தாட்டுணைக்கீழ் நிற்குந் தவர். (அஉ)

உள்ளமெனு மாநந்த வோங்கன் மிசையேறி
வெள்ள வெளிக்குள்ளே விளையாடும் - பிள்ளை
யுலகமெனுஞ்சேரிக் கொருக்காலும் வாரார்
கலகம் விளையுமெனக் கண்டு. (அங)

கூறைக் கலையார்கள் குப்பைதரு மென்றெண்ணிச்
சோறுக் கலையார் துயருற்றுத் - தூறுக்குட்
கல்லை யுவந்துண்ணுங் கபோதம்போ லேதேனு
நல்லோ ரருந்திடுவர் நாடு. (அச)

நானே பரமசிவ னுனே பரப்பிரமம்
நானே யுலகுயிர்த்த நாதன் - நானேயோ

கண்டதுவுங் காணாது மென்றிவணங் கண்ணுரக்
கண்டவனே சீவன்முத்தன் காண். (அடு)

ஆக்கையே தானென் றபிமானஞ் செய்விக்கு
மோக்கமிலை யென்றே முடிப்பிக்கும் - பூக்கமழும்
பூங்குழலார் பொய்யின்பப் புணரியைமெய் யாக்குவிக்கும்
வாங்குதலைச் செய்யா மலம். (அசா)

ஆசாரியனை யனவரதந் தூடிக்கும்
பாச மிறந்தோரைப் பகையாக்கு - மாசற்ற
வுத்தமர் கட்கெல்லா முறுநீங்கே யீட்டுவிக்கு
மத்திமஞ்செய் மூல மலம். (அஎ)

மெய்ஞ்ஞானக் கண்ணை விழிக்கவொட்டா தெஞ்ஞான்று
மஞ்ஞானந் தன்னி லழுத்துவிக்குஞ் - சுஞ்ஞான
வீசனிலையென்றே யிறுமாப்பைச் செய்விக்கும்
மாசுற்ற மாயா மலம். (அஅ)

விருப்பு வெறுப்பாலே மேல்வினை யுண்டாக்கும்
கருப்பையிலே மீட்டுமுறக் கட்டும் - நெருப்புருவ
னெங்குமிருந்தானு மில்லையென்றே சாதிக்கு
மங்குதலைக் கன்ம மலம். (அகூ)

ஈசன்றிருவடியை யெஞ்ஞான்று காண்பேனோ
பாசமெனை விட்டெந்நாட் பாறுமோ - நீசக்
குடும்பத்தை நீத்தாசான் குற்றேவல் செய்வேனோ
வுடம்பைத் துறப்பேனோ வுற்று. (கூ0)

அன்னியமே பாசமென்று மன்னியமே யீசனென்று
முன்னுதலே பாச வொழிவன்றோ - வெந்நிலையு
மற்றநிலை யீதொழிய வாறுசமை யத்தார்
சொற்றநிலை யெல்லாந் தொலை. (கூக)

ஆணவத்தாற் பட்டதுய ராற்றகிலே னந்தோகோ
வீணவத்தை யெஞ்ஞான்று வீயுமோ - மாணவத்தை
வேறென் றறிந்த விவேகமே ஞானத்தின்
கூறென்று சொன்னான் குரு. (கூஉ)

மலமில்லை மாசில்லை மானுபி மானங்
குலமில்லை யென்னறிவின் கூற்றிற் - கலக

மல்முண்டு மாசுண்டு மாறுபி மானங்
குலமுண்டு திரிசியக் கூற்றில். (௯௩)

சம்பந்தர் பேரறிவும் வாகீசர் தன்றுறவு
நம்பியா ரூரன்ற னட்பினையு - மன்புருவாந்
திண்ணனார் பேரன்புஞ் சிறுத்தொண்டர் பத்தியையு
மண்ணலே யெற்கீந் தருள். (௯௪)

திருவாத வூரர்க்கு வைத்த திருநோக்கங்
கருவாதை போயொழியக் காட்டி - யொருவாத
பஞ்சமலக் கொத்தைப் பறித்ததிருக் கரத்தை
யஞ்சலிசெய் தாற்போ மையம். (௯௫)

சத்துமசத்துஞ் சதசத்து முன்காட்டிச்
சத்துமசத்துஞ் சமமாக்கிச் - சத்தசத்து
மில்லா விடத்தி லெனைதொழிவைக் காட்டிற்று
கல்லாலின் கீழிருந்த கை. (௯௬)

என்னை யெடுத்து விழுங்கியிரும் பூரணமாய்
யுன்னுமன மாதிகளை யோட்டிவித்துத் - தன்னிகரி
லெல்லா மிறந்த விடத்தி லெழுந்ததாற்
கல்லாலின் கீழிருந்த கால். (௯௭)

சஞ்சிதத்தை நீறாக்கிப் பிராரத்தத்தைப் புசித்து
விஞ்சுமா காமியத்தை வீறடக்கித் - துஞ்சிருளா
யொல்லா மலமகற்றி யொன்றாக்கி வைத்ததாற்
கல்லாலின் கீழிருந்த கண். (௯௮)

ஆணவத்தி லேகிடந்த வாருயிர்க்குக் காயமெனும்
கோணை விளக்களித்த கோமானே - ஆணவமு
மாக்கையும் வந்தென்னைகினை மல்லற் படுத்தாமற்
சாக்கிரா தீதத்தைத் தா. (௯௯)

ஆகாயம் போலுன் னறிவுபரி பூரணமா
யேகானுபூதி யெழுந்தாலு - மாகாயம்
போமளவு மாளவந்த புண்ணியனைப் போற்றிநினைந்
தாமளவுஞ் செய்யற் சனை. (க00)

வாழி திருச்சனகர் வாழி சனற்குமரர்
வாழி சனந்தர் மறைச்சநந்தர் - வாழிமறைக்
கல்லாலின் கீழிருந்த கண்ணுதலார் மாமேரு
வில்லார் மணிச்சிலம்பு மே. (க0க)

ஞானவிளக்கம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## ஏழாவது
## அத்துவிதக் கலிவெண்பா.

பராபரமாய்நித்தமாய்ப்பரிபூரணமாய்
நிராமயமாய்நிட்களமாய்நீங்காப் - புராதனமாய்ச் (க)
சத்தியமாய்ச்சித்தாய்ச்சதானந்ததேசாய்ச்
சுத்தவெறுவெளியாய்ச்சூனியமாய்ப் - புத்தமாய் (உ)
தற்பரமாய்ச்சிற்கனமாய்த்தத்துவாதீதமாய்ச்
சிற்பரமாய்ஞானச்செழுஞ்சுடரா - யற்புதமா (ங)
யறிவுக்கறிவாயகண்டிதமாயெங்குஞ்
செறியும்பரமசிவமாய்ப் - பிறியாத (ச)
வேதச்சினகரத்துள்வீற்றிருந்ததெய்வமே
போதகுருவாய்ப்புவிமீது - நாதனென (ரு)
வந்தான்றிருவடியைமத்தகத்திற்சேர்த்திறைவன்
றந்தானென்சென்னித்தடக்கையைச் - சிந்தா (சா)
குலமொழியத்தன்னுளத்திற்சிந்தித்தான்கோணை
மலமொழியப்பார்வையிணைவைத்தான் - சலமொழியா (எ)
வாங்காரம்பொன்றவமுததிருவாக்களித்தான்
சாங்காரயோகந்தலைப்பட்டா - னீங்காத (அ)
மெய்ஞ்ஞானநூலைவிரித்துரைத்தான்மாணவக
வஞ்ஞானவாக்கைநீயன்றென்று - னெஞ்ஞான்று (சு)
நாற்றவுடனுனன்றேனுறவுதியாரிதனைச்
சாற்றிடுங்கென்போல்வந்ததற்பரனே - யூற்றைமிகு (க0)
மாக்கைக்குச்சாக்கியாமான்மாவேதீயதனைப்
போக்குவரவுபுரிகின்ற - யூக்கமொடு (கக)
தேகஞ்சடமென்றுந்தேகியறிசித்தென்று
மாகமங்களெல்லாமறையுங்கா - ஞேகையொடுந் (கஉ)
திரிசியமேகாயமதிற்சித்தேதிருக்கென்
றருமறைகளெல்லாமறையுங்கா - ணிரிகின்ற (கங)
வன்னமயகோசத்தையான்மாவலவென்று
பன்னுமறையந்தமெலாம்பாரொன்றிங் - குன்னியுனிக் (கச)

## தக்ஷிணாமூர்த்தி துதி.

(வேறு.)

பாலனாயனைத்திருமூலைப்பருகினும்பருவ
வேலவார்குழலிதழ்வெள்ளத்தழுந்தினுமிளையாக்
கோலனாயுயிரிழப்பினுங்குறிகொளாதொழியே
ஞாலனீழலில்மர்ந்தமுக்கண்ணனுக்கன்பே. (ரு)

## பரமரகசியப்பொருள் துதி.

(வேறு.)

சாத்திரத்தாலளவுபடாத்தனிமுதலைப்பராபரத்தைத்தானேதானா
மாத்திரமாய்நிற்பதனைவாய்விட்டுப்பேசாதமௌனவைப்பைக்
காத்திரவாதனைகடந்தவறிஞருக்குப்பலமீயுங்கற்பகத்தைப் [ம்.
பார்த்தவிடந்தொறுநிகழும்பரமரகசியப்பொருளைப் பணிதல்செய்வா

## நடேசர் துதி.

(வேறு.)

உலகமூன்றையுமீன்றவளுளங்களிசிறப்ப
உலகமூன்றையும்படைத்தவன்முளமொத்திசைப்ப
உலகமூன்றையுமுண்டவன்குடமுழாமுழக்க
உலகமூன்றிலும்நடம்புரியொருவனைப்பணிவாம். (எ)

## ஞானகுரு துதி.

(வேறு.)

வானேமுதலாம்பூதங்களல்லைகரணவகுப்பல்லை
யானப்பொறியுமைம்புலனுமல்லையறியுமறிவல்லை
யூனுருடம்பின்வயத்தாலேயுள்ளந்தளரேலொன்றாய
நானேநீயென்றருள்செய்தஞானகுருவைவணங்குவாம். (அ)

## வேதச்சிறப்பு.

ஆலயந்தொழுவறந்தலைநிரப்புநல்லருச்சனைபுரியென்றே
யோலமிட்டுநான்மறையெலாமுரைப்பதுவுலகரைக்குறித்தன்றே
மூலகாரணபரம்பரஞ்சுக்கமாய்முழுதையுங்காணென்றுச்
சீலமுற்றியவறிஞரைக்குறித்துரைசெய்ததம்மறையன்றே. (கூ)

## ஆகமச்சிறப்பு.

பாகமங்கியசிந்தையர்தமக்கெலாம்பரிந்து
மோகமங்குறச்சரிதையாதிகளையேமொழியுந்

தாகமங்கியதத்துவஞானிகடமக்கு
வாகமங்களுஞ்சிவத்துவமசியெனவறையும். (கo)

## அவையடக்கம்.

அதிரகசியத்தையானுமளவிடத்துணிதல்வானின்
மதியினைமழதன்கையால்வவ்வுதலொக்குமேனு
மெதிகடம்மருளானிந்நூலிசைப்பனிங்கிழிந்தநாய்த்தோல்
வதியினுமணியையெள்ளார்மணிநலந்தெரிந்தோரெல்லாம். (கக)

## நூற்கருத்து.

அரிதுயில்கடலுமிந்தவாசையங்கடற்கொவ்வாமை
பருவமிக்குயர்ந்தோனேக்கிப்பாசமாதிகளைநீத்துக்
குரவனைத்தேடிக்கண்டுகூடரும்வீடுகூடு
மொருமையையிந்நூலின்கணுணர்த்துவனுணர்வினுலே. (கஉ)

பாயிரம் - முற்றிற்று.

---

மாநிலவரைப்பினுள்ளோர்மாணனுக்குலகமெல்லாங்
கானனீர்போலத்தோன்றிக்கரப்பதுகருத்துட்டோன்றித்
தேனுலாமொழியாராசைசீயெனவெறுத்துமிழ்ந்தான்
பானல்வாமகவினுசைபாசத்தாராசைநீத்தான். (கங)

தந்தைதாயிவரோவென்றுன்றுரகம்பிரமமென்றுன்
பைந்தொடியாசையாலேபரகதியிழந்தேனென்றுன்
புந்தியார்போந்தபோக்குபொறுக்கிலேனென்றுனந்தோ
வெந்துயர்க்கடலில்வீழ்ந்தேனெனவுளம்வெருவினுனல். (கச)

ஈதுமெய்யீதுபொய்ம்மையெனும்வத்துவிவேகமெய்திப்
பூதலத்தாசைமேலைப்புவனத்திலாசைபோக்கிச்
சாதுநற்சமமேயாதிசட்குணதரனுய்மீளா
மோதுவெங்கலியைமாய்ப்பான்முத்தியில்விருப்பமுற்றுன். (கரு)

சித்திரபானுவாலுஞ்சிதைவிலாவிருளைவீட்டி
யுத்தமமுத்திஞானமுதவுவானுளனேவென்றிங்
கத்திசூழ்ஞாலமெல்லாமளிமதுக்கலையுமாபோற்
பொத்தகப்பொருளைக்காட்டும்போதகாசானைத்தேர்வான். (கசு)

(வேறு.)

மண்ணுக்கிரையாமிவ்வுடம்பைமாற்றவேண்டிவனமலைகள்
மொண்ணைப்பொதும்பர்நந்தவனமூதூர்தனித்தவிடந்தோறு

முண்ணெக்குருகித்தேசிகனைத்தேடிவாடியுயிர்ப்பெறிந்து
கண்ணிலருவியொழியாளுய்க்கலங்கிமலங்கிக்கதறினனே. (கஎ)

எங்ஙனமறைந்தாயென்னுமெங்களுநிறைந்தாயென்னுந்
திங்களைநோக்குமற்றைச்செங்கதிரோனைநோக்கு
மங்குலைநோக்கும்பின்னும்வரும்வழிகாணேனென்று
மங்கணுவென்னுமென்பாலாதரவிலையோவென்னும். (கஅ)

இவ்வணமியம்புமெல்லையீசனுமுளத்திரங்கி
யுய்வணமறியாநின்றவுவனையோர்வசனத்தாலே
பொய்வணநீக்கிநம்போற்புனிதனுக்குமென்றன்னரி
மெய்வணமுடையார்போலுமேதினிவந்தானன்றே. (கக)

(வேறு.)

கண்டான்குருவைக்கண்ணாரக்கதறிவீழ்ந்தான்கமலமிசை
யண்டாவரனேநெடுமாலேயயனேயென்றனகமகிழ்ந்தான் [யே
மெண்டாலியலும்பணிசெய்யத்துணிந்தான்பணிந்தான்மும்முறை
பண்டானிறைந்தபாவாலுங்காவாயென்னப்பாடினான். (உ0)

(வேறு.)

அருவமாய்நின்றாய்போற்றியடியனென்பொருட்டாயிங்ங
னுருவமாய்வந்தாய்போற்றியுயிர்பொருளுடலுங்கொண்ட
பருவமில்பாவியேனைப்பரிந்தருள்செய்தாய்போற்றி
குருபராபோற்றியுன்றன்கோகனகத்தாள்போற்றி. (உக)

என்றுபன்முறையாலேத்துமிருந்தவச்சிடன்றன்னை
நன்றுநின்பருவநேர்மைநன்றெனநயந்துநோக்கி
மன்றலங்கமழ்பூம்பாதமலிபுனலாட்டிநாத
னென்றியவன்பாற்றுய்த்தவோதனமுதவிப்பின்னர். (உஉ)

(வேறு.)

காவிமாலையம்புயத்தினன்கருணையாற்பொருளு
மாவியாக்கையுந்தாவெனவங்கையாலேற்றுப்
பாவநாசனம்பவித்திரனுயினையென்றுத்
தேவநாயகன்றிருக்கரஞ்சென்னிமேற்செறித்தான். (உங)

மாதவத்தனைவாவெனக்கூவிமந்திரத்தா
லோதினுன்செவிப்புலன்வழியோமெனும்பொருளைப்
பாததாமரைசூட்டினன்பவமெலாமிரித்தா
னுதிமத்தியுமந்தமுமிலாதவெம்மண்ணல். (உச)

சங்கையற்றிடச்சலிப்பறத்தத்துவங்கழலப்
பொங்குபேரொளிபொதிந்திடப்புதையிருள்கழியப்
பங்கயாசனன்முதலியோரறிவரும்பரத்தை
யங்கைநெல்லிபோற்றிகழ்தரவருளுவனருளால். (உரு)

(வேறு.)

பஞ்சபூதநீயல்லைபஞ்சகோசநீயல்லை
விஞ்சுகரணநீயல்லைவிகுதிபகுதிநீயல்லை
துஞ்சுசீவனீயல்லைதோன்றுபரமுநீயல்லை
நெஞ்சிற்சிறிதுமையுறேனீயேயந்தப்பரமசிவம். (உசா)

(வேறு.)

ஆகமேவடிவாகியசீடனை
யேகனீயென்றியம்பலுமெம்பிரான்
மோகவாரியின்மூழ்கியபாவியே
னேகனாகுவதெவ்வணமெந்தையே. (உஎ)

என்றியம்பியவேழையைநோக்கியே
நன்றெனநகைத்தானெங்கணாயகன்
றொன்றுதொட்டுறும்வாதனைச்சோம்பினா
லன்றுநீயப்பரம்பொருளாகுவாய். (உஅ)

நாலுவேதமுமோதுநலத்தினை
யேலவோதியுமேழைகட்கென்செயப்
பாலுநெய்யும்பறையனுக்கென்செயத்
தோலுமென்புந்துரிசுமொழியவே. (உகூ)

சங்கற்பமெனுஞ்சாகைபடர்ந்தது
பொங்குபேரொளிப்போதமறைந்தது
துங்கஞானச்சுடர்வடிவாள்கொடு
மங்கவெட்டுதிமாணவநீயென. (௩௦)

வேட்டையீதெனக்காட்டவெருண்டெழும்
வேட்டநாயெனமேலறிவொன்றிலேன்
மாட்டிலுள்ளமலினங்கள்யாவையுங்
காட்டுவாயெனக்காட்டத்தொடங்கினான். (௩க)

## பிரபஞ்சவைராக்கியமுணர்த்துதல்.

வையத்தாசையும்வானகத்தாசையுந்
துய்யத்தாசையுங்கூறையினாசையு

மெய்யினுசையும்வேரறவீட்டினே
ையனுசைக்ககப்படுகின்றையார். (௩உ)

## குலகோத்திரவபிமானமாகாதென்றுணர்த்துதல்.

பறையரொன்பதும்பண்டிதரொன்பது
மறையுமிந்தமலினவுடலையே
பறையர்தம்முளும்பண்டிதர்தம்முளு
மறிவனேகமென்றுரறிந்தோர்களே. (௩௩)

## சமயபரமீதென்றுணர்த்துதல்.

சமயமேபரமென்னுஞ்சமத்தராய்ச்
சமயசாத்திரங்காட்டுஞ்சழக்கர்காள்
சமயமென்னுஞ்சத்தார்த்தமுணர்கிலீர்
சமயமென்பதுதன்னையறிதலே. (௩௪)

## தீர்த்தமீதென்றுணர்த்துதல்.

தீர்த்தந்தேடித்திசைத்துத்திரிவீர்கா
டீர்த்தமாவதுதேசிகன்வாசகந்
தீர்த்தமீதெனத்தேர்ந்துகொளாதவர்
தீர்த்தமாடியுந்தேரையொப்பார்களே. (௩௫)

## க்ஷேத்திரமீதென்றுணர்த்துதல்.

அள்ளிச்கோவிலையென்னுவாசானையே
நள்ளிக்கோவிலைநத்திப்பெற்றுங்கொளி
யுள்ளக்கோவிலையூன்றிப்பாராதவர்
கள்ளக்கோவிலைக்காமுறுவார்களே. (௩௬)

## அருச்சனையீதென்றுணர்த்துதல்.

பூசையென்பதுபூவொடுபாணியோ
வாசைகோபமகந்தையகற்றியே
நீசவைம்பொறிநெஞ்சுணிறுத்தியே
யீசனைத்தம்மிதயத்துட்காண்டலே. (௩௭)

## வாதசங்கற்பமாகாதென்றுணர்த்துதல்.

ஏதங்கூறியிடுக்கண்களைந்தவர்
பாதங்கூறிப்பவித்திரராய்ப்பர
போதங்கூறிப்பொழுதைச்சுருக்கிலார்
வாதங்கூறித்தம்வாணுள்கழிப்பரோ. (௩௮)

## தியானசங்கற்பமாகாதென்றுணர்த்துதல்.

ஆவிக்காவியென்றராவமுதினைப்
பாவிக்கநினைவார்சிலபாவிகள்
பாவிக்குங்கருத்தாங்கவன்பாங்கர்போ
யாவிக்கானிவந்தானந்தமானதே. (ருக)

## துறவு இலக்கணமுணர்த்துதல்.

(வேறு.)

புண்ணியநதியினும்பொருப்பிடத்தினுந்
தண்ணறுங்காவினுந்தருப்பைச்சூழலு
மண்ணறன்கோயிலுமடவிதன்னிலும்
நண்ணியயோகிகள்வதியுநல்லிடம். (சுo)

தந்தைதாய்முதலியதமரைக்காண்குறில்
வெந்துயர்விளைதலால்விருப்புமேவலா
லந்தநன்னிலமகன்றைம்பதியோசனை
மைந்தனேநீபரதேயம்வைகுவாய். (சுக)

ஊன்பிறந்தவுடலைச்சுமப்பதற்
கேன்பிறந்தமென்றெண்ணியறிஞர்க
டான்பிறந்தவிடத்தைத்தணந்துபோய்
வான்பிறந்தவனத்திற்சரிப்பரே. (சுஉ)

(வேறு.)

வரிக்கயலனையகண்ணார்மாநலந்துய்த்தபின்னர்
விருத்தனாங்காலமேனும்விரத்தனாயாவுநீத்தே
யிருக்குமந்நிலமகன்றோர்யோசனையெய்தப்பெற்றாற்
றிருக்கண்மூன்றுடையபெம்மான்சேவடிசேர்தறிண்ணம். (சுங)

சூத்திராதியாகத்தொழுகுலத்தவரீறாக
மூத்திரக்குழியிலாழ்ந்துமூழ்கியபின்னரேனுங்
காத்திரத்தானேரின்பங்கடையெனவிகந்துமூன்று
நேத்திரத்தானைநோக்கிநெடுவனம்புகுதல்வேண்டும். (சுச)

(வேறு.)

காயசம்பந்தமனைவிதாய்தந்தைகான்முளையென்னுமிங்கிவரை
மாயசம்பந்தமெனத்துறந்தொழிந்தோன்மாநிலம்பரவுமெய்ஞ்ஞானி
தேயசம்பந்தத்தவரொடுமெருவிச்செனித்தவந்நகரிடைமருவான்
றாயசம்பந்தத்தவரொடுமெருவித்துறவியாயவாவெலாந்துறப்பான். ()

கரும்பினுமின்பங்காண்பான்கட்டறத்துறந்தமேலோ
ரரும்பொனுல்வெள்ளியாற்செய்யணிகலன்பூணல்செய்யார்
விரும்பியகொழுனர்த்திர்ந்தமெல்லியல்போலநாளு
மிருந்தவஞ்செய்தியாக்கையினைப்பதேகருமமன்றே. (௬௬)

கற்புடைமகளிரெல்லாங்கணவனேதெய்வமென்பர்
சிற்பொலிசமயவேடர்சிலையையேதெய்வமென்பர்
தற்கொலிமாந்தரெல்லாந்தாருவேதெய்வமென்ப
ரற்புறுபெரியோரெல்லாமறிவையேதெய்வமென்பார். (௬௭)

மண்ணுலரனைவருத்தளித்துமறித்துமண்ணுய்மதிப்பரா
லெண்ணார்கழுத்தினிலிங்கத்தையிறுக்கிப்பொருள்காணிதுவென்பார்
புண்ணார்சென்னிபறித்தலேபொருளாமென்றுபுலம்புவார்
கண்ணாரிரவிபாதவங்கள்கருடன்றனையும்பொருளென்பார். (௬௮)

## ஐவகைப்பிராந்தியையுணர்த்துதல்.

நித்தனன்றுரைத்தவாக்கியப்படியேநிகழ்த்துவன்பிராந்தியைந்தினை
சத்தியமிந்தவுலகெனல்கருவிதணந்திடாதுடலைநானென்னல் [யுஞ்
கத்தபோத்தாவுநானென்றுனுங்கடவுளும்வேறெனக்கருதல்
சித்துருவாகியிருந்துநானுகேன்சிவனெனல்சிதடர்பாலறியே. (௬௯)

(வேறு.)

ஆன்றநற்சனகனுதிநால்வருமரன்முகத்தை
மூன்றனைக்கோடிகற்பம்பார்த்தபின்முத்தரானார்
தோன்றிநின்றழியுமிந்தத்தொடகெடற்புவியினுள்ளோ
ரூன்றியோர்கணமதேனும்பார்த்திடினுறுவர்முத்தி. (௭௦)

வேலைசூழ்ஞாலத்துள்ளோர்மெய்ம்மையையுணரமாட்டார்
மாலைவாய்மடந்தையார்தம்வசத்தராய்மதியிலாரா
யாலமாநீழலின்கண்ணமர்ந்தவெம்மாதிபாதஞ்
சாலயான்கண்டுகொண்டேனென்றுளந்தநும்புவாரே. (௭௧)

பழுதையிற்பாம்பேயில்லைபாம்பினிற்பழுதையில்லை
பழுதையைப்பாம்பென்றெண்ணிப்பாம்பினைப்பழுதையாக்கு
முழுதறிவில்லாமூர்க்கமூடரோடுறவுவேண்டேன்
முழுதறிவாகிநின்றமுத்தநிற்ருேழலேவேண்டும். (௭௨)

மெய்யினிற்பொய்யேயில்லைபொய்யினின்மெய்யேயில்லை [னும்
மெய்யினைப்பொய்யென்றெண்ணிப்பொய்யினைமெய்யென்றுன்

மையரோடுறவுவேண்டேனறிவுருவாகிவந்த
வையனேயுனைப்பூசித்தேயறிவுருவாதல்வேண்டும். (ருங)

வெள்ளநீர்க்கிடந்தோன்காணான்வேதியப்பிரமன்காணா
னொள்ளியசிறியேன்கண்டேனெனும்படியெளிதின்வந்தாய்
கொள்ளைவண்டிமைக்குந்தொங்கல்குளிர்புயத்தணிந்தகோவே
தெள்ளியதேனேசிந்தைத்தவிசுறைஞானதேசி. (ருச)

(வேறு.)

காசிவாஞ்சியங்காளத்திகழுக்குன்றங்காஞ்சி
மாசிலாருறைப்பருப்பதங்கோகன்னமறைக்கா
டேசிலாதுறைமூர்த்திதந்தெரிசனமெல்லாந்
தேசிகன்றிருச்சேவையைநிகர்க்குமோசெப்பில். (ருரு)

மன்னுமாமறையின்சென்னிவாக்கியமுடிவுங்கண்டே
னன்னியபாசமானவாணவாதியையுங்கண்டே
னென்னையுங்கண்டேனென்றனிதயதாமரையின்மேய
நின்னையுங்கண்டேனெந்தாய்நீதந்தஞானக்கண்ணால். (ருசு)

ஆகையாலுனேயெல்லாப்பொருள்கட்குமறிவாய்நின்றே
தேகமாதிகளுக்கப்பாற்சிதம்பரவடிவமாகி
யேகனுயனாதிமுத்தனுயெனில்வேறென்றின்றிப்
போகமோகங்களின்றிப்பூரணவறிவானேனே. (ருஎ)

(வேறு.)

அறிவென்னுமுதல்வேதமகமென்னுமிரண்டாமோத்
தறிவதுநீயானுயென்றறையுமூன்றும்வேதந்
செறியிந்தவான்மாவேசிவமென்னுமதர்வணஞ்
செறியுநால்வாக்கியத்தின்சித்தாந்தமறிந்தேனே. (ருஅ)

நானேநீநீநானேயானமையான்ஞானகுரு
வானவனேகைம்மாறும்வழிபாடுந்தோத்திரமு
மீனமிலாப்பூசனையுமியற்றுவான்றனைக்காணே
னானுமிலையுயிருமிலையுனையன்றியொன்றுமிலை. (ருகூ)

எல்லாநானென்றுணராக்காலத்திலிடர்ப்பட்டே
னெல்லாநானென்றுணர்ந்தகாலத்திலின்புற்றே
னெல்லாநானேயென்றிங்கெனையெடுத்துவிழுங்கினை
யெல்லாநீயென்றுணருமெண்ணமும்போய்மாண்டதே. (சு0)

ஒன்றென்றுசொல்வதற்குமுறையில்லைநாவில்லை
யன்றிதாமென்பதற்குமறிவில்லைசெயலில்லை
சென்றுறுமிங்குமாறில்லைசேராநிற்பதுமில்லை
நன்றுமில்லைதீதுமில்லைநானுமில்லைநீயுமில்லை. (௬௧)

இரண்டொழுகும்பேராற்றிற்சிறுஊற்றுக்குழிதேடிப்
புரண்டுபுரண்டழுவார்க்குப்புத்தியெவர்போதிப்பா
ரிரண்டிறந்தவானந்தமெழுந்தபினாறுசமய
முரண்டகுசிற்றூற்றுண்டோமுழுஞானமூர்த்தியே. (௬௨)

ஆகாயந்தனைத்தேடியவனிதொறுமலைவோருக்
காகாயநீயென்றாலலைவொழியமாட்டுவரோ
மாகாயமாட்டுதற்குமதிதேடுமெனிதர்க்கு
மாகாயத்துள்ளுறையுமதியெனினுமயங்குவரோ. (௬௩)

(வேறு.)

ஐயந்திரிவுமழல்விடமுமானதே
ஐயந்திரிவுமறுத்தான்குருநாதன்
மெய்யன்றிருமேனிவிமலன்றிருமேனி
மெய்யன்றிருமொழியேவேதத்திருமொழியே. (௬௪)

(வேறு.)

அதிரகசியத்தான்மேலாமறிவினைவிளக்கிவித்தோய்
கதிபிறிதில்லையென்னக்காட்டியகருணைமேரு
பதிகுடிகொண்டஞானதேசிகப்பரமாவுன்னை
விதிமுறைபணிவனோக்கிவிம்முவனென்செய்கேனே. (௬௫)

பிண்டமாமுடலுனல்லேன்பிராணவாயுவுநானல்லேன்
கண்டவிந்தியநானல்லேன்கரணமோர்நான்குமல்லேன்
பண்டையவறிவேநானென்றுணர்தருபருவம்வாய்ப்பின்
வண்டறைகொன்றைத்தாரான்மலரடிகாணலாமே. (௬௬)

அதிரகசியம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## ஒன்பதாவது

## சிவாகமக்கச்சிமாலை.

திருமாலயனொடுதேவருநாகருஞ்சித்தர்களு
மருமாமுனிவருமண்டத்துயிர்களுமன்புசெய்ய
வொருமாதுமையொடுமொண்குகனேடுங்கம்பாநதிக்கண்
விரிமாமறைநிழலில்வீற்றிருந்தாய்கச்சியேகம்பனே. (௧)

அல்லார்கருங்குழலம்மைதிருக்கண்புதைத்தவன்று
நில்லாவுலகமிருண்மூடிப்போனபின்னெற்றிக்கண்ணு
லொல்லாவிருளையொதுக்கியுறுதுயர்நீத்தமையா
லெல்லாவொளிக்குமுதலொளிநீகச்சியேகம்பனே. (௨)

மூவுலகத்தினுமூடியபாவமுழுதகல
மாவடிநீழலின்வந்தம்மைபூசிக்கமண்டுமென்பாற்
றூவியவேகத்தொடும்வானளவித்தழைத்தகம்பை
யேவிவிட்டேதழுவக்குழைந்தாய்கச்சியேகம்பனே. (௩)

நல்லாரைப்போன்றிட்டிருப்பினும்வஞ்சகர்நல்லரல்லர்
பொல்லாரைப்போன்றிட்டிருப்பினுநல்லவர்புண்ணியரோ
யுல்லாசமாய்மலர்கொண்டெறிந்தானன்றுருவழிந்தான்
கல்லாலெறிந்தவன்முத்திபெற்றான்கச்சியேகம்பனே. (௪)

தம்மாலறிந்தனயாவையுந்தாமலவென்றறிந்து
மும்மாயைமும்மலமுக்குணநீங்கிமுழுதறிவாய்ச்
சும்மாவிருக்கத்துரியங்கடந்தசுகமுதிக்குஞ்
சன்மார்க்கமுத்தியிதென்றான்றடங்கச்சியேகம்பனே. (௫)

சாந்தமுநோன்புந்தவமுமடக்கமுந்தண்ணளியும்
வாய்ந்தகுருச்சொலும்வாக்கியங்கேட்டுமௌனமவன்பால்
காந்தமுமூசியுங்கண்ணுங்கதிருங்கலப்பதுபோ
லேய்ந்ததுவேமுத்தியென்றானெழிற்கச்சியேகம்பனே. (௬)

கூவிளமாலையுங்கொன்றையுந்தும்பையுங்கூரறுகு
மாவலொடுமெடுத்தர்ச்சனைசெய்தங்ககங்குழைந்து

நாவினிற்றோத்திரஞ்சொல்லிநலந்தெரிஞானிகளுக்
கேவல்செய்தாலன்றிமுத்திகொடான்கச்சியேகம்பனே. (௭)

எல்லார்க்குநல்லவனிங்கில்லையங்கில்லையெங்குமில்லை
யெல்லார்க்குநல்லவன்சந்திரனாயினுமேந்திழையா
ரெல்லார்க்குநல்லவனாயேயிருந்திலனென்றிகழ்வா
ரெல்லார்க்குநல்லவனீயேபுகழ்க்கச்சியேகம்பனே. (௮)

அன்னியமேசெயுமாணவநீக்கத்திலாருயிர்க
ளன்னியமேயிலையென்றுநின்வேதமறைதலினா
லென்னுடலுன்னுடலென்பொறியுன்பொறியென்னதுன்ன
தென்னினைவுன்னினைவென்றுரைப்பேன்கச்சியேகம்பனே. (௯)

எல்லாஞ்சிவமெனுநான்மறையாகமமெக்கலையு
மெல்லாஞ்சிவமென்றெழிற்குருவாய்வந்தெடுத்திசைத்து
மெல்லாஞ்சிவமெனலெவ்வெவர்கோட்குமிசைந்திருந்து
மெல்லாஞ்சிவமென்றுணரகில்லேன்கச்சியேகம்பனே. (௧௦)

காசமறுவிழிகாய்கதிரோடுகலந்துவிடிற்
காசம்பினும்வந்துகண்ணினையுற்றுக்கலங்கல்செய்யா
பாசமறுமுயிர்நின்னொடொன்றாகிப்பதிந்தபின்பும்
யாசம்படர்வதென்சொல்லாய்பழங்கச்சியேகம்பனே. (௧௧)

பாசஞ்சடமென்றுயிர்தற்சுதந்தரயங்கனென்று
நாசமிலீசன்சுதந்தரனேயென்றுநான்மறையும்
பேசுமுயிர்க்குப்பிரேரகநீயெனப்பெற்றமையா
லேசுறுமென்செயனின்செயலேகச்சியேகம்பனே. (௧௨)

அன்னவெறியெடுத்தண்டங்கள்சாமுன்னினைகத்தம்மை
யன்னப்பெயர்கொடுவந்தறச்சாலையமைத்திருப்ப
வன்னத்தயன்றலைகைத்தலத்தேந்தியகங்கடொறு
மன்னப்பலிக்குழன்றாலழகோகச்சியேகம்பனே. (௧௩)

அன்றுவிடமுண்டமரரைக்காத்தெதிரந்தகனைக்
கொன்றொருபாலற்குறிக்கொண்டுகாத்துக்கொடும்புரத்தைக்
கன்றெரிதாவிடுங்காலொருமூவரைக்காத்தமையா
லின்றெனைக்காப்பதரிதல்லவேகச்சியேகம்பனே. (௧௪)

அல்லற்பிறவிப்பிணியாளனாருயிராதிசிவன்
மல்லற்றருமவயித்தியனாகுநன்மாமருந்து

சொல்லிற்பஞ்சாக்கரமென்றுசுருதிமுறையிடினும்
புல்லருனைப்பொருளென்றறியார்கச்சியேகம்பனே. (கரு)

பொல்லாதமாதர்மயக்கத்திலாழ்ந்துபொருந்துகினும்
வில்லார்மணிச்சிலம்பேறித்தவங்கள்விரும்புகினு
நல்லார்தொழுமுன்றன்பாதாரவிந்தத்திருட்டம்வைத்திட்
டெல்லாமுநின்செயலென்றிருப்பேன்கச்சியேகம்பனே. (கசு)

ஆட்டைச்சுமந்தநின்பாதாரவிந்தத்திலன்புசெய்யாக்
கூட்டைச்சுமந்துகுடும்பத்தையோம்பிக்குருக்கிடையாப்
பாட்டைச்சுமந்துபயன்றெரியாமலப்பாட்டெழுது
மேட்டைச்சுமந்தவர்க்கின்பமுண்டோகச்சியேகம்பனே. (கஎ)

உள்ளந்தொறுமொளித்தாங்காங்கிருப்பினுமுன்னியல்பை
வெள்ளந்துயின்றவன்காண்கிலன்வேதனும்வெட்கினனால்
பள்ளம்புகும்புனல்போன்றென்றனன்பையுன்பாற்பதித்துக்
கள்ளமறிந்துனைக்கண்டுகொண்டேன்கச்சியேகம்பனே. (கஅ)

பால்ன்பசிக்கன்றுபாற்கடலீந்தனைபங்கயனு
மாலும்வணங்கிடமால்விடமுண்டனைமாதினொடு
மாலின்புடையிருந்தந்தணர்க்கோதினையன்றியென்பாற்
காலன்வரும்பொழுதஞ்சலென்பாய்கச்சியேகம்பனே. (ககூ)

பொன்வண்ணம்பூணினுங்கண்டமையாற்புலன்பூதமுதற்
கொன்வண்ணவந்தக்கரணக்கருவிகள்கூட்டமெல்லாந்
தன்வண்ணமன்றென்றனித்தனிநீக்கித்தனித்திடத்தி
லென்வண்ணநின்வண்ணமென்றுரைப்பேன்கச்சியேகம்பனே. (உ0)

பல்லாயிரமறையொன்றென்றுசொல்லியும்பாமரர்கள்
சொல்லாயுதத்தின்மலமாயைகன்மத்தொடர்களறுத்
தல்லாசமுத்திபெறமுயல்வாரிதென்யுத்திகொல்லோ
புல்லாலெரிசுடும்புத்தியைப்போற்கச்சியேகம்பனே. (உக)

அறிவேசிவமெனுமாகமம்வேதங்களவ்வறிவாய்ச்
செறியுமுனைப்பொருளென்றுகொள்ளாதுநற்றெய்வமெல்லாம்
வறிதேதிரிந்தலைந்தெய்த்தொழிந்தேன்றம்மனையகத்தி
லெறிசுடர்விட்டனற்றேடுவர்போற்கச்சியேகம்பனே. (உஉ)

தொல்லாழியண்டத்தைத்தோற்றிவிப்பானயன்றோற்றியத்தை
நல்லாரிவர்சிறுதீயாரிவரொனுநாட்டமின்றி

வில்லாருதரத்தில்வைத்தளிப்பான்விண்டுமெற்றிவைக
ளெல்லாந்துடைப்பவனீயேபுகழ்க்கச்சியேகம்பனே. (௨௩)

மைவண்ணக்கண்டம்புயமொருநான்குமதிச்சடையுங்
கைவண்ணமானுமழுவுங்கருணைபொழிமுகமு
மெய்வண்ணத்தம்மையும்பாதத்துணையொடுமேதினியோ
ருய்வண்ணமாநிழலுற்றிருந்தாய்கச்சியேகம்பனே. (௨௪)

ஆக்கின்றசத்தியயற்களித்தாயயனுக்கியத்தைக்
காக்கின்றசத்தியரிக்களித்தாயரிகாப்பையெல்லாம்
போக்கின்றசத்தியரற்களித்தாய்சிறுபுல்லர்தம்பா
லேற்கின்றசத்தியையெற்களித்தாய்கச்சியேகம்பனே. (௨௫)

விண்ணுக்குநாயகஞ்செங்கதிரோனென்பர்வேதமுன்னூற்
பண்ணுக்குநாயகமூன்றுமறையென்பர்பற்பலவா
மண்ணுக்குநாயகநாவலந்தீவென்பர்மன்பதைதங்
கண்ணுக்குநாயகநீயேகலிக்கச்சியேகம்பனே. (௨௬)

சொல்லாரிறந்திடமுத்தியென்பார்சிலர்தோதகஞ்செய்
பொல்லாமனோலயமுத்தியென்பார்சிலர்பொய்யொழிவே
யெல்லாதமாமுத்தியென்றுரைப்பார்சிலரோதியவை
யெல்லாமிறந்திடமுத்தியென்றான்கச்சியேகம்பனே. (௨௭)

அங்கையினெல்லிப்பழம்போலகந்தொறுநீயிருப்பச்
சங்கையறவுனைநோக்கஞ்செய்யார்சமயச்சழக்கர்
செங்கணனிந்திரனன்முகன்றன்னையுந்தெய்வமென்பர்
கங்கைமகத்துவமீனறியாகச்சியேகம்பனே. (௨௮)

மண்ணுதிநாதவரையுருநாமன்றெனமதியா
நண்ணுவறிவுருநாமெனக்கண்டுமெய்ஞ்ஞானத்திற
னுண்ணுடியொன்றிரண்டென்னுதுறங்குவதன்றியுன்னைக்
கண்ணுலறியப்படுமோகலிக்கச்சியேகம்பனே. (௨௯)

பற்றறத்தீரத்துறந்தாகமத்தின்பரப்பறிந்து
குற்றமறுசிவஞானக்குரவன்குறிப்பினின்று
வெற்றவெறுவெளிகண்டவர்க்கேயின்பமேவுமன்றிக்
கற்றடங்காதவர்க்கின்பமுண்டோகச்சியேகம்பனே. (௩0)

ஆக்கைசடத்திரளான்மாவறிவிலியானமையாற்
போக்குவரவுபுரிபவனீயென்றுபுந்திசெய்தே

யாக்கையுமாவியுமானப்பொருளுமுனக்களித்தேன்
காக்குஞ்சுதந்தரனீயேகலிக்கச்சியேகம்பனே. (௩௧)

உண்டிபசியிலுறக்கில்விழிப்பிலுணர்கனவில்
வண்டமர்பூங்குழன்மாதர்முயக்கின்மலிதுறவிற்
றண்டுறுசிந்தைப்பரப்பிற்குவிவிலுன்றண்மலரைக்
கண்டுகொண்டேனயல்காணேன்கலிக்கச்சியேகம்பனே. (௩௨)

கோட்டகங்காரமென்கொல்கனிற்றினையின்கோளடக்கி
வாட்டமிலாக்குடும்பப்புலிவாயினின்மண்ணையட்டி
யீட்டுமிருவினைப்பேயுடல்கீறியிணையில்பவக்
காட்டைக்கடந்துனைக்கண்டுகொண்டேன்கச்சியேகம்பனே. (௩௩)

ஐம்புலனலலமந்தேனடைக்கலமாலறியாச்
செம்பதுமக்கழல்சேர்ப்பாயடைக்கலஞ்சேயிழையா
ரின்பவலையகப்பட்டேனடைக்கலமேன்றுகொள்வாய்
கம்பயினாத்தலைமோதுங்கலிக்கச்சியேகம்பனே. (௩௪)

மாயாப்படலத்தினன்மறைப்புண்டுவெழுதிறம்பிக்
காயாபுரியடைந்தந்தோகவலைப்பெண்கையகப்பட்
டோயாப்பிணிமகப்பெற்றேதுயர்த்தடியூன்றுமெனக்
கேயாப்படலமிரிப்பதென்றோகச்சியேகம்பனே. (௩௫)

புல்லாதிதாபரநீங்கிநற்சங்கமம்புக்கினவர்
கொல்லாவிரதங்குறிக்கொண்டுன்பாதக்குற்றேவல்செய்து
பொல்லாப்பிறப்பையொழிக்கறியாரவர்புந்தியந்தோ
கல்லோமரமோவிரும்போகலிக்கச்சியேகம்பனே. (௩௬)

சித்தந்தெளிந்தவருள்ளச்சினகரத்தேதிகழுஞ்
சுத்தநிராமயச்சோதியனேயென்றுதோத்திரத்தாற்
பத்திசெய்யாவெறும்பாவிகள்சிந்தையிற்பாறினின்று
யெத்திறத்தாலுனைக்காணவல்லார்கச்சியேகம்பனே. (௩௭)

வெள்ளிமலையும்பொன்மேருவுஞ்சந்ததம்வீற்றிருக்கப்
பிள்ளைமதியொடுவேதியன்புன்றலைகைப்பிடித்துப்
பள்ளநெடுங்கடல்சூழுலகிற்சில்பலிக்குழன்று
வெள்ளுவர்நிற்பொருளென்றறியார்கச்சியேகம்பனே. (௩௮)

ஆசையொழிவெந்தக்காலுமுற்றுந்தவாசையெல்லாம்
வீசிநிராசைசெய்வித்தகரோயுனைக்கண்டுகொள்வா

ராசைவழிச்செலுந் தன்மார்க்கருன்னையறிவர்கொல்லோ
காசியினுஞ்சிறந் தோங்குங்கவிக்கச்சியேகம்பனே. (௩௯)

ஓமாதிவாக்கியமொன்றைப்பிடித்தவருத்தமர்கள்
சாமாறுமந்நிலைநிற்பவர்சத்தியர்சற்குருவா
லாமாறறிந்தவரந்தணரியோகிகளஞ்சடக்கிக்
காமாதிகுற்றங்களைந்தவர்காண்கச்சியேகம்பனே. (௪0)

உம்பர்பணிகயிலாயச்சிலம்பையொருவியம்மை
கம்பைமணலைக்குவித்துச்சிவாகமங்கைப்பிடித்துச்
செம்பதுமக்கரத்தாலலர்சாத்தித்தெரிசிக்குமுன்
கம்பைநதியையென்னேவிடுத்தாய்கச்சியேகம்பனே. (௪௧)

வீணைய்ச்சுழலுமெனக்கொருஞானவிழியளித்துக்
கோணகத்துள்ளொருகூத்தப்பிரானுண்டக்கூத்தப்பிரா
னணுவதுமன்றுபெண்ணவதுமன்றலியுமன்று
காணைக்கண்கொண்டினிக்காணியென்றான்கச்சியேகம்பனே. (௪௨)

அறிவாயிருந்தறியாமையைநோக்கினஃதொழியுஞ்
செறியும்பரிபூரணவுருத்தானெனினற்றேகமறு
மறிகருமங்கட்குச்சாக்கியியொனின்மாளுமது
பிறியாநிலையிதுவென்றான்பெருங்கச்சியேகம்பனே. (௪௩)

படிகக்கடச்சுடருள்ளும்புறம்பும்பரப்பதுபோ
லுடனுறுநீயுணர்வாகியகம்புறமுற்றிருந்து
மடைமலவல்லிருளாருயிர்ஞானத்தையாவரித்துத்
தொடர்வதென்சொல்லுதிபைம்பொழிற்சூழ்கச்சியேகம்பனே. (௪௪)

துட்டற்குஞானச்சுருதிகளோதியுந்துர்க்குணம்போய்ச்
சிட்டற்குளகுணமெள்ளளவேனுந்திகழ்தல்செய்யா
விட்டுச்சொரியினுமான்பாலுந்தேனும்விரவியென்று
மெட்டிப்பழத்துக்கினிப்புமுண்டோகச்சியேகம்பனே. (௪௫)

அந்தோகுருபதமெய்ஞ்ஞான்றுகாண்பனென்றுகமுற்றும்
வெந்தோலமிட்டுப்பதைபதைத்தோடிவிழுந்தலறிச்
சந்தோடமேற்கொடுன்பாதாரவிந்தத்தைத்தாவுமன்பர்க்
கெந்தாய்மிகவுமிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. (௪௬)

அஞ்சிப்பவத்தினுக்காரித்தைமோசிப்பவொன்றலைந்து
நெஞ்சங்கனிந்திருகண்ணீர்சொரிந்திடநெட்டுயிர்த்துத்

தஞ்சமுன்பாதந் தலைவைத்தவுத்தமர்சங்கடங்க
டுஞ்சும்படிக்கருள்செய்யாய்சுடர்க்கச்சியேகம்பனே. (சஎ)

பொய்யாமுடல்பொருளாவியும்வாங்கியுன்பொன்னருளான்
மெய்யாமுடல்பொருளாவியுமீந்தவிரகையுன்னிப்
பொய்யாமொழிகொடென்பாதாம்புயத்தினைப்போற்றியன்பாங்
கையாலுனைத்தொழக்கண்டுகொண்டேன்கச்சியேகம்பனே. (சஅ)

ஒன்றேபரமென்றுரைப்பவனேயுயிரவ்வுயிரை
யன்றேமறைப்பதுமாணவமாதிகளானமையால்
வென்றேபுலனைவெறுமறிவாகிவியன்பரமாய்
நின்றேவிடுநிலையென்றுனெழிற்கச்சியேகம்பனே. (சகூ)

இல்லையுயிரொன்றுரைக்குமுரைக்குளிருக்குமுயிர்
தொல்லையுயிரிலையென்பவனேயுயிர்தோன்றிடலு
நல்லமலர்மணம்போலுயிர்நாதனுநண்ணுமென்றுன்
கல்லிற்புறப்பட்டகையுடையான்கச்சியேகம்பனே. (௫௦)

மேலாலவத்தையுங்கீழாலவத்தையும்வீட்டியரு
ணூலார்சொல்சுத்தநுணுக்கநிலையினையென்றருள்வாய்
நாலாமறையொருமாவாகவன்னிழனண்ணியுமை
கோலாகலந்தழுவக்குழைந்தாய்கச்சியேகம்பனே. (௫க)

தாயன்றிமைந்தர்க்குத்தாரகமுண்டுகொலுரணியில்
வேயொன்றுதோளிதன்பங்காமலைவில்விடைத்துவச
நீயன்றிவேறொருதெய்வமுநிட்டையுநேர்வதுண்டோ
காயன்றிச்செங்கனியுண்டோகலிக்கச்சியேகம்பனே. (௫உ)

பேசுவதுன்பெயர்பூண்பதுன்சாதனம்பேணலுன்னை
நேசமும்பாசமுநின்கழற்கேசென்றுநீக்கமில்லா
வாசையைநீத்துன்றனன்பாற்கடல்புகுமாறெனவே
யேசறுமுன்னெடொன்றாகிநிற்பேன்கச்சியேகம்பனே. (௫௩)

அஞ்சக்கரமன்றிவேறொருமந்திரமாயினில்லை
யஞ்சிலிறையருளாவிதிரோதைசில்லாணவமற்
றஞ்சிலிரண்டையருளாலகற்றிடலாவியந்த
வஞ்சிலிரண்டையணையுமென்றான்கச்சியேகம்பனே. (௫ச)

மந்திரமாவதுமஞ்செழுத்தேயந்தமந்திரத்தி
னைந்துபொருளையுங்காட்டியிரண்டின்வழியடைத்து

முந்துமிரண்டின்வழியைத்திறந்துயர்முத்திதந்தான்
கந்தன்கணபதிக்கப்பன்கலிக்கச்சியேகம்பனே. (ருரு)

ஒருதலைமாணிக்கமுன்னமொனக்குபதேசஞ்செய்தா
னிருதலைமாணிக்கம்பின்னரும்பேசியிருளறுத்தா
னரிதலைமற்றையயன்றலைசூடியகங்கையின்மூ
வெரிதலைச்சூலத்தொடெடுப்பான்கச்சியேகம்பனே. (ருசா)

ஊமைமணிக்கொலியற்றமைபோற்றன்னிலொன்றுபடத்
தோமுறுமென்னகத்துள்ளநரிசையுந்தொக்கிவருந்
தாமதத்தோடெனுவாதியையுந்தகித்துவிட்டான்
காமனுடலட்டகண்ணுற்கலிக்கச்சியேகம்பனே. (ருஎ)

பந்தமறுக்கும்பரஞ்சுடரோயென்றும்பாவமகல்
சிந்தையிருக்குஞ்செழுஞ்சுடரோயென்றுஞ்சிந்தித்தெங்க
ளந்திவண்ணவென்றலரிட்டிறைஞ்சுநல்லன்பர்தம்மை
யிந்தவுலகிலிருக்கவொட்டான்கச்சியேகம்பனே. (ருஅ)

நொச்சியறுகுகரந்தைவிளாவில்வநொய்யதும்பைப்
பச்சிலையாயினும்பாதத்திலிட்டுப்பரவுமன்பர்க்
கிச்சித்தபேறுமெழிற்சிவஞானமுமிம்மையிலே
யச்சப்படாதளிக்குமருளாற்கச்சியேகம்பனே. (ருகூ)

பாலையுந்தேனையும்வேம்பாக்குமானந்தப்பாதையிலே
சாலநடத்தியென்மும்மதவாய்தற்றடையகற்றி
நாலுமறைசொலுநாதாந்தமுத்தியைநண்ணுவித்தா
னேலக்குழலிக்கினியபிரான்கச்சியேகம்பனே. (சா0)

உள்ளும்புறம்புமொழிவறநிற்பினுமுன்னுருவைத்
தெள்ளுமனத்தினரன்றிச்சிறியவர்காண்பரிதா
னள்ளுங்கிரணத்தொடுசூரியனெழினுமட்டமில்லோ
ரெள்ளத்தனையொளிகாண்குவரோகச்சியேகம்பனே. (சாக)

செப்புமொழிமனமாதியகொண்டுனைச்சேர்வமெனி
லப்பிரமேயமெனுமறையாதியவாகமங்க
ளொப்புவமைக்கணுங்காணவொண்ணுனெனுமென்னிலந்தோ
வெப்படியுன்னையறியப்படுங்கச்சியேகம்பனே. (சாஉ)

பாம்புக்குபாலளித்தாங்கிப்படிவத்தைப்பாங்குசெய்திட்
டோம்பிமகளிருக்குத்தமனுகியுணர்வழிந்து

தூம்பிடைவீழ்ந்துதுயருறுவான்பொருட்டொல்லுலகி
லேன்படைத்தாயறிவில்லாவெனைக்கச்சியேகம்பனே. (௬௩)

அன்னவுருவெடுத்தந்தணன்காண்கிலனந்தணனைப்
பொன்னந்திருவுந்திபூத்தவன்காண்கிலன்போதமுறை
பன்னியும்பூசித்துமெட்டுணையேனும்பரிசறியா
வின்னவுருவெடுத்தெங்கொளித்தாய்கச்சியேகம்பனே. (௬௪)

இருவினையொப்பின்மலபரிபாகமுமெய்துமெய்த
மருவிடுஞ்சத்திநிபாதமும்வந்திடமன்னுமருட்
குருவுருவாகிக்கொடும்பவமேழையுங்கொய்யுமென்றுன்
கரிமுயல்கொண்டுதடுத்தபிரான்கச்சியேகம்பனே. (௬௫)

விதிவழியேமதிசென்றுவிருப்பும்வெறுப்புமுண்டாய்
நதிவழியோடிக்கடல்புகுநீரெனநாணிரையப்
பதிவழியேசெலுநெஞ்சைத்திருத்தியுன்பாதமலர்க்
கதிவழியேசெலக்கண்பார்கலிக்கச்சியேகம்பனே. (௬௬)

யானெனதென்னுஞ்செருக்கொழியாமையினெவ்வுயிர்க்கு
மீனவகக்கரணங்குவியாதுபின்னிச்சைவழி
வானகம்மண்ணகம்பாதலமூன்றினும்வாறிவரும்
யானெனதென்செருக்கற்றோர்தொழுங்கச்சியேகம்பனே. (௬௭)

விருப்புவெறுப்பற்றுன்வேதமொழிப்படிமெய்யுணர்ந்து
மரிப்பைச்சனிப்பையுமற்றொளியாகியமாதவர்பாற்
கருப்புச்சிலையனுங்காலனும்வந்தென்செயக்கடவர்
நெருப்பைப்புழுப்பற்றுங்கொல்லோநெடுங்கச்சியேகம்பனே. (௬௮)

சதுமறையாகமமங்கம்புராணநற்சாத்திரமும்
பதிபசுபாசமிம்மூன்றையுமேசொலும்பான்மையினுன்
முதுபதிநீபசுநானெனைமூடிமிருண்மலமிங்
கிதைமறையாவருள்செய்யாயெழிற்கச்சியேகம்பனே. (௬௯)

காலன்றனையட்டகாலாவடைக்கலங்கடவுளர்க்கா
யாலநுகர்ந்திட்டவையாவடைக்கலமாணவத்தாற்
சாலப்பிறந்திறந்தெய்த்தேனடைக்கலஞ்சங்கரியாய்ச்
சூலம்பிடித்தசெங்கையாய்சுடர்க்கச்சியேகம்பனே. (௭௦)

ஆதாரமாறையுங்கண்டாங்ககன்றிட்டருளுருவாய்
மீதானயோகச்சிவானந்தமேலிடவீழ்ந்தநுவாய்ப்

பாதாதிகேசங்கடோன்றுதவண்ணம்பதிந்திருக்க
நீதான்றிருக்கடைக்கண்பார்நெடுங்கச்சியேகம்பனே. (எக)

ஆங்காரகோட்டைக்ககந்தைச்சிகரங்களாங்கமைத்துச்
சாங்காலமின்றியறியாமைச்சத்தியைத்தான்றழுவி
நீங்காதவாணவக்கோனுமொளிருமுன்னெற்றிக்கண்ணுற்
போங்காலஞ்செய்வதுமுண்டோபொழிற்கச்சியேகம்பனே. (எஉ)

புண்ணியமேலிடப்பாவங்கள்கீழிட்டுப்பொன்றும்பொன்ற
நண்ணும்விவேகங்கணண்ணிடஞானிகணட்புண்டத்தா
லண்ணலுயிர்வினையாதென்றுணருமறிவுதிக்குங்
கண்ணகன்ஞாலத்தின்மேற்பிறவார்கச்சியேகம்பனே. (எங)

ஓசைபரிசமுருவஞ்சுவைமணமோரைந்தையும்
வீசியகமுகமாகிவெறுப்புவிருப்புமற்று
மாசறுதிங்களைப்போன்றுசதானந்தவாழ்வையுன்னி
யேசறுமுத்தியிலென்றிருப்பேன்கச்சியேகம்பனே. (எச)

ஆணவமேலிடவாருயிர்கீழிட்டடங்கிநிற்கு
மாணவங்கீழிடவாருயிர்மேலிட்டருளுருவா
மாணவநீங்கியவாருயிர்வேறலவென்றறைந்தா
ஞணவநீங்கியவன்பர்க்கருள்கச்சியேகம்பனே. (எரு)

அண்டமொருகுடைக்கீழாளவேண்டிலனம்புயத்தோன்
விண்டுபுரந்தரன்றன்வாழ்வும்வேண்டிலன்மெய்யன்பிறற்
றொண்டுசெய்தாங்குன்றிருவடிநீழலிற்றூங்கியுன்னைக்
கண்டுகொளும்வரம்வேண்டுவன்யான்கச்சியேகம்பனே. (எசா)

வாட்டங்குகண்ணியர்வண்ணப்பயோதரவாழ்வையுன்னிக்
கூட்டங்குயோனியிற்போய்ப்பிறவாமற்கிளர்ந்தொளிருந்
தாட்டங்குஞானச்சமாதியியல்பையுஞ்சங்கையறக்
காட்டக்கமாவெனக்கிம்மையிலேகச்சியேகம்பனே. (எஎ)

பிறந்தாரிறப்பாரிறந்தார்பிறப்பர்தம்பேதமையான்
மறந்தாயினும்பவம்வேண்டேன்மறைமுதலாகமங்க
ளறிந்தாரிணக்கமுமன்பும்வணக்கமுமானந்தமுஞ்
செறிந்தாங்கெனக்கருள்செய்யாய்செழுங்கச்சியேகம்பனே. (எஅ)

பொய்யாமொழியும்பொறுமையுஞானமும்புண்ணியமும்
மெய்யாகமும்விவேகமுங்கல்வியுமேன்மையுமென்

கையாற்றிருத்தொண்டுங்காணாதகாக்ஷியுங்காரணமு
மெய்யாதெனக்கருளிம்மையிலேகச்சியேகம்பனே. (௭௯)

கல்லாரிணக்கமுங்காமுகர்வார்த்தையுங்காரிகையார்
பொல்லாதவேட்கையும்புத்திரதாகமும்பூமயக்கு
நில்லாதவாழ்வும்விதிநிடத்தையுநெஞ்சினையு
மெல்லாமறுத்தருள்செய்திகண்டாய்கச்சியேகம்பனே. (௮0)

பேசாதபேச்சும்பிறவாப்பிறப்புநற்பேதையர்பா
னேசாதநேசமுநினையாநினைவையுநின்மலமுந்
தூசாச்சமாதித்துரியங்கடந்தசுகமயமு
மேசாதெனக்கருள்செய்யெழிலார்கச்சியேகம்பனே. (௮௧)

வன்புறுகல்லைநீபொன்னாகச்செய்யற்கமற்றெனக்குச்
செம்பொன்னைக்கல்லுருவாகத்திருவுளஞ்செய்திவெறு
மென்னைப்பெண்ணாக்குதல்வேண்டாமெனக்கெழிற்பெண்ணையிழி
யென்புருவாகச்செய்கண்டாயெழிற்கச்சியேகம்பனே. (௮௨)

மூர்த்தியுந்தீர்த்தமுமூவாத்தலங்களுமூன்றுருவாய்ச்
சேர்த்ததுமெய்மொழிசித்தந்தெளிதரச்செப்புமறை
மூர்த்திமனச்சுத்திதீர்த்தமொழிசுத்திமூடவுட
லார்த்ததலசுத்தியென்றானணிக்கச்சியேகம்பனே. (௮௩)

உறங்காச்சமாதியுமுண்ணாத்திருத்தியும்யோனிவழிக்
கறங்காய்ச்சுழன்றுஞ்சுழலாவறிவின்கடைப்பிடியு
மறம்பாவமென்றிரண்டச்சந்தவிர்த்தவனுபவமுந்
திறம்பாதெனக்கருள்செய்யாய்திருக்கச்சியேகம்பனே. (௮௪)

நெஞ்சங்குழைந்திருகண்ணீர்சொரிந்திடநெட்டுயிர்த்திங்
கஞ்சலிசெய்துன்றன்பாதத்துணையையகத்திருத்தி
வஞ்சகமற்றுனைவாழ்த்தும்படிக்கருள்வைப்பைகொலோ
கஞ்சமலர்ப்பொய்கைசூழுங்கலிக்கச்சியேகம்பனே. (௮௫)

மனமொன்றும்வாயொன்றுமின்றியொருப்பட்டமாதவர்பா
னனவினிற்றோன்றுவனான்முகனுட்கிநடுக்கமுற
மனமொன்றுவைத்துப்பின்வாயொன்றுபேசியவஞ்சகர்பாற்
கனவிலுந்தோற்றப்படுவதுண்டோகச்சியேகம்பனே. (௮௬)

நாற்றக்குரம்பையைநாயாதிக்குண்டியைஞானமிலார்
போற்றுஞ்சடத்தைப்புனன்மேற்குமிழியைப்பொய்யுருவைத்

தூற்றுநவையைத்தொலையாவிடக்கினைத்தோகையர்க
ளேற்றுமுடம்பினையென்றொழிப்பேன்கச்சியேகம்பனே. (அஎ)

காயத்தைக்கல்லினுந்திண்ணிதென்றெண்ணிப்பொற்காரிகையார்
மாயத்திற்பட்டுத்தருமஞ்சிறிதின்றிமட்டிமையாய்ப்
பேயொத்தருநிரயந்தொறும்புக்குப்பிறந்துழலு
நேயத்தையென்றைக்குநீக்குவையோகச்சியேகம்பனே. (அஅ)

மாலறியாமலர்ப்பாதாவென்விண்ணப்பமங்கையர்தங்
கால்வழியேறியுதரப்பதிபுக்குக்கண்கலக்கஞ்
சாலவுறுவண்ணங்காத்துச்சௌக்கியமுத்தியினை
யேலவெனக்கறிவிப்பாயெழிற்கச்சியேகம்பனே. (அகூ)

பங்கயப்பாசடைநீரிடைநிற்பினும்பற்றையுறு
சங்கையெரியிற்சுடினுந்தவளநிறங்குறையா
துங்கமணிப்பாம்பிருட்குகைதுன்னினுமல்லையுறு
விங்கிவைபோனின்னடியாரெழிற்கச்சியேகம்பனே. (கூo)

அஞ்ஞானநீக்கத்திலாருயிரேசிவமானமையான்
மெய்ஞ்ஞானியென்பதெவர்க்குஞ்சரியொக்கும்வேறென்றுன்னிப்
பொய்ஞ்ஞானம்பேசும்புருடர்க்குன்பாதப்புணைகிடையா
வெஞ்ஞான்றவர்க்கருள்செய்குவையோகச்சியேகம்பனே. (கூக)

வேறென்றுபேசுவதெல்லாம்விவேகமிலாமையன்றோ
கூறொன்றிலாமறைகூறுஞ்சிவனுருச்சீவனென்றுந்
தேறுமுமையுருத்தேகமென்றும்மிதைத்தேறுவரோ
வீறின்மலவயப்பட்டோரெழிற்கச்சியேகம்பனே. (கூஉ)

சிருட்டிக்குமுன்னுயிரெல்லாஞ்சிவமெனச்செப்புமறை
சிருட்டிக்குப்பின்னுயிர்வேறுபட்டான்சிறுசீவனென்றே
சிருட்டியைநீக்கிச்சிவோகமென்பாவனைசேர்தரலுஞ்
சிருட்டிக்குமுன்சிவமானன்றிகழ்கச்சியேகம்பனே. (கூங)

கரணப்பதைப்பறச்சித்திரதீபமுங்கல்லுமொத்துக்
கிரணமும்பானுவும்வேறற்றொளிருமக்கேண்மையைப்போற்
சரணத்திருநிழற்கீழ்நிற்குஞானத்தபோதனர்தம்
மரணப்பிறப்பையுமாற்றிவிப்பான்கச்சியேகம்பனே. (கூச)

முன்னைவினைத்தொடரெல்லாஞ்சின்முத்திரைகொண்டெரித்தேன்
பின்னைவருவினையெல்லாமருளிற்பிரித்துவிட்டேன்

றின்னும்வினையினையெல்லாஞ்சிவார்ப்பணஞ்செய்தொழித்தே
னின்னமெனக்குப்பிறப்புமுண்டோகச்சியேகம்பனே. (௯௫)

வைதாரைவாழ்த்துவர்பின்னுமிரங்குவன்வாழ்த்திநலஞ்
செய்தாரைப்போற்றுவர்பின்னுஞ்சிரிப்பர்பற்றீவினையை
யெய்தாரைநோக்குவரோவினைநோக்கியிகழ்தல்செய்யார்
மைதாவிடுமலமற்றார்மதிகச்சியேகம்பனே. (௯௬)

துயருற்றபோதுமதிற்றுளையார்நற்சுகமடுப்பி
னயமுற்றநிலமுந்தாரிந்தனுாலத்துறைட்டமுறார்
பயமுற்றநீயெனநின்றொடொன்றாகிப்பதிந்திருப்பார்
செயலற்றுநின்னைத்தெரிசித்தபேர்கச்சியேகம்பனே. (௯௭)

நாமார்நமக்குப்பதியாரெனவருஞானங்களே
மாமாயைகன்மமலத்திரள்மாற்றிமொற்றிடலுந்
தாமாய்முழுவதுஞ்சத்தியஞானத்தைச்சார்வனென்றான்
காமாட்சியம்மைக்கினியபிரான்கச்சியேகம்பனே. (௯௮)

சும்மாவிருக்குஞ்சுகோதயங்காட்டித்துரிசகலா
மும்மாயைக்கப்புறத்தொன்றாய்க்கிடந்தமுழுதறிவாஞ்
சிம்மாதனமெனக்கீந்தாயுனக்கென்செயக்கடவேன்
கைம்மாறுமாறிக்குமுண்டோகலிக்கச்சியேகம்பனே. (௯௯)

வெய்யிற்படுபுழுப்போலும்பவத்தின்மெலிந்துவிம்மி
யுய்யுநெறியறிவிப்பவருண்டுகொல்லோவென்றுன்னி
நையுமுளத்தினரன்றேவிம்மாலைநயமறிவார்
கையிலுழைமழுவேந்துங்கலிக்கச்சியேகம்பனே. (௧00)

சிவாகமக்கச்சிமாலை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பத்தாவது

## கர்நாமிர்தம்.

ஒன்றாகியுணர்வொருங்கியோமொழிப்பொருடானாகி
மன்றாடுநின்னையன்பின்வழிபடமெறிவொன்றின்றிப்
பொன்றாலிபூட்டுமொதர்புணர்ச்சியேபொருளென்றெண்ணிச்
சென்றாடியுணங்கிப்போனேன்றிருப்புலிவனத்துளானே. (க)

நிராமயநிமலமாகிநித்தியாநந்தமாகிப்
பராபரப்பிரமமாகிப்பங்கயன்முதலதேவர்
சராசரமனந்தயோனிதத்துவக்குவால்பிறங்கத்
திராசெனநின்றதென்னேதிரிப்புலிவனத்துளானே. (உ)

மலரயனாய்ப்படைத்தான்மாலவனாகிக்காத்தா
னிலகரனாகியெல்லாந்துடைத்தவனிறைவனான்
மலைமகட்கொருபாலீந்துமலிபுனற்கங்கையாளைச்
சிலைமதிமுடியில்வைத்தான்றிருப்புலிவனத்துளானே. (ங)

ஒருவனேடொருத்தியாகியுடனுறுங்குடியிருந்தா
னிருவினையொப்பாலன்றியாவர்க்குமறியவொண்ணான்
குருவடிவாகித்தாளார்கொடும்பவமிரியச்சூட்டித்
திரிபதார்த்தமுந்தெரித்தான்றிருப்புலிவனத்துளானே. (ச)

பேசுவதுயிரோயந்தப்பிராணனுக்குயிரைப்பேசின்
மாசிலாமணியொருத்தன்வரவிலன்போக்குமில்லான்
பாசமோசகனாய்நிற்பனவனுருப்பாராவண்ணா
மாசையேபாசமென்றான்வயப்புலிவனத்துளானே. (ரு)

நெல்லிடையுமிபோலாவிநினைப்பெலாமாவரித்துத்
தொல்லையிலுளவஞ்ஞானந்துஞ்சலும்பிறப்புமின்றி
மல்லர்போன்றறிவைவ்வயவனத்திடைவலியவீர்ப்பச்
செல்கதிவேறுகாணேன்றிருப்புலிவனத்துளானே. (சா)

மூலையிலிருந்தவென்னைமுற்றத்திலீர்த்துவிட்டுச்
சாலமோகஞ்செய்மாயைதனுகரணங்களாகி

வேலைவாயமுதிருப்பவிடத்தையேவிழுங்கப்பண்ணுஞ்
சிலநின்னிலையவொட்டாத்திருப்புலிவனத்துளானே. (எ)

கன்மமாயொன்ருயூழாய்க்கருதிருவினையாய்மூன்று
வன்மைகொள்சஞ்சிதாதிவருவினைக்காரர்வந்துன்
னன்மையையுணரவொட்டார்நல்லர்பாற்செல்லவொட்டார்
சின்மயமாகவொட்டார்திருப்புலிவனத்துளானே. (அ)

வெறும்படம்போல்வைநீதான்வேறுவேருவியம்போ
னறுந்துழாய்முடியோனீசனுன்முகனுதிதேவர்
பெறும்பயனுணர்ந்தோர்நின்னைப்பேணுவரவரைப்பேணார்
தெறுங்கடையுகத்திலாடுந்திருப்புலிவனத்துளானே. (கூ)

பஞ்சவிந்திரியங்களென்னும்பாயிருள்சீக்குஞானக்
கஞ்சுகம்போர்த்துன்பாதக்கழலடிபரவுந்தொண்டர்
நஞ்சையுமுண்பருன்போனுதனுய்ஞானமீவர்
செஞ்சுடர்மணிபிறங்குந்திருப்புலிவனத்துளானே. (கய)

காதிலைலறியாநின்னைக்கண்ணினுற்காணுவென்னை
மேதைசேர்விவேகத்தாலும்வேதத்தார்விஞ்சையாலும்
பூதத்துக்கேற்றதொண்டுபெறுபலகுயிற்றியன்பாற்
சேதனங்கண்டுகொண்டேன்றிருப்புலிவனத்துளானே. (கக)

பாவமுமறமுமொத்துப்பக்குவம்பருவமுற்றிங்
காவியைம்புலனைப்பற்ருதகமுகமாகியென்று
மோவியம்போன்றிட்டங்கணுணருணராமைபோக்கிற்
சீவனுஞ்சிவனும்வேருதிருப்புலிவனத்துளானே. (கஉ)

ஆகாமமல்லவிந்தவைம்பொறிநாமேயல்ல
வேகமோனமென்றுன்னுமிருடிகளிதயத்துள்ளாய்ப்
பாகமாமுமைமணாளபசுபதிபிறவிவேண்டேன்
சேகறுமனத்தோர்போற்றுந்திருப்புலிவனத்துளானே. (கங)

அறிவினிலகமுண்டாகியகத்தினின்மனமுண்டாகிப்
பிறிவருமனத்தின்மாயைமாயையிற்பிண்டாண்டங்கள்
மறிபுலகத்தினுக்கைவந்தவிம்மாயமெல்லாஞ்
செறிதராதருளிச்செய்வாய்திருப்புலிவனத்துளானே. (கச)

புத்தியாய்ப்பொறிகளாகிப்புலன்களாய்ப்பூதமாகிக்
கத்தனுய்க்காமமாதிகுணங்களாய்க்காமியாகிப்

பெத்தனாய்முத்தனாகிப்பேணுவார்பேணுநித்த
சித்தனாய்நின்றதென்னேதிருப்புலிவனத்துளானே. (௧௫)

ஒன்பதுவாய்தலார்ந்தவூரினிலோரைந்தாய
துன்புறுமமைச்சரோடுஞ்சுகதுக்கத்தேவியோடு
முன்பினோடுறவரோடுமுற்றரசாளமாட்டேன்
செம்பொனார்மாடநீடுதிருப்புலிவனத்துளானே. (௧௬)

ஆரணவுருவமாகியம்பரக்கோயிறேறு
நாரணன்பிரமன்காணாநட்டநீசெய்ததென்னே
காரணமுயிரோவென்னக்கண்டவர்காணாதேங்கச்
சீரணிமாடமோங்குந்திருப்புலிவனத்துளானே. (௧௭)

மாசையையாலிரண்டுபட்டுன்மலரடிப்புகலிழந்தேன்
றூயமெய்ஞ்ஞானத்தாலேதுறந்திடினேகமாகுந்
தாயினுமினியனாகித்தடுத்தெனையாண்டுகொண்ட
சேயமாநதிதென்பாங்கார்திருப்புலிவனத்துளானே. (௧௮)

கண்ணொளிகதிரின்மாட்டுங்கடவெளிவிசும்பின்மாட்டு
மண்ணுறுவிளக்கின்சோதிதாரகசத்திமாட்டு
நண்ணுதன்மானப்பொல்லாநாயினேன்வந்தடைந்தேன்
றெண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருப்புலிவனத்துளானே. (௧௯)

பவத்துயரான்மெலிந்தபக்குவவுயிர்கட்கெல்லாஞ்
சிவத்தைமுன்விளக்கிப்பின்னர்ச்சீவனைவிளக்கிமூன்று
மவத்தையைவிளக்கிநீக்கியறிவுருவானாயென்றுஞ்
சிவத்துவமசிநீயன்றோதிருப்புலிவனத்துளானே. (௨௦)

காந்தமூசியும்போற்கடலுறுநதியும்போல
வேய்ந்துபின்னீனாகியெண்ணமுமின்றிநின்று
வாய்ந்தபேராக்கநீசொல்வாக்கியத்தாலேகண்டேன்
றேய்ந்தசந்திரனைச்சூடுந்திருப்புலிவனத்துளானே. (௨௧)

அறிவொருகடலாயாவியலையதாய்த்தத்துவங்கள்
பிறினுரைகுமிழியுப்புப்பிணைமலம்வாயுகன்மங்
குறிபலமீனமாயையிவற்றினாற்குறைவொன்றில்லைச்
செறிதிருவருளான்மாற்றாய்த்திருப்புலிவனத்துளானே. (௨௨)

புழுவினந்நிறையுமாக்கையொன்பதுபொள்ளலாலு
மிழிபடுமலங்கள்வீசுமிதனினுநரகநன்றே

வழுவையினுரிபோர்த்தாடும்வள்ளலேபிறவிவேண்டேன்
செழுமணிமாடமோங்குந்திருப்புலிவனத்துளானே. (உங)

பிறந்தவரிறக்கையாலுமிறந்தவர்பிறக்கையாலு
மறிந்துயர்பெரியோரெல்லாமாக்கையைவெறுத்தலாலு
மறந்துநான்பிறவிவேண்டேன்மறுபிறப்பிலாதவண்ணஞ்
செறிந்தருள்செய்யவேண்டுந்திருப்புலிவனத்துளானே. (உச)

அரனரியயனுமொன்றென்றருமறையறையுமாற்று
லரனையேயேத்துமின்களயனெறிப்புகுதவேண்டா
மரனுக்குமடிமையாகியரிக்குமாட்செய்வாருண்டோ
வொருவனேதெய்வமென்பருறுதியின்வழிபட்டோரே. (உரு)

சிவனையேதெய்வமென்றுசிந்தையிற்சிந்தைசெய்மி
னவனலாற்றெய்வமில்லையவனுக்கேயடிமைசெய்மின்
றவமிலாமனிதரெல்லாமவனடிசாரமாட்டார்
புவனவாதனைகடத்திப்பொன்னடிக்கமலமீவன். (உசா)

நூலிடைக்கருத்தைவிட்டுநுண்ணியஞானமின்றி
மாலுறுசமயவாதவசனத்தைவசனியாதே
சீலவாசிரியன்சொன்னசெந்நெறிச்சித்தம்வைத்திட்
டாலமார்கண்டத்தானையகமுகமாகநோக்கே. (உஎ)

நாரணன்முதலோரெல்லாநாடொறுமடிமைசெய்ய
வாரிணர்முடித்தவேணியண்ணலுக்காட்செய்யாதே
காரணமின்றியோடுங்கடிகுரங்குமலிபோலப்
பாரிடையுழன்றலுத்தேன்பாவியேன்பாவியேனே. (உஅ)

பண்டையவினைவாய்ப்பட்டுப்பத்தியும்பரிவுமின்றி
வண்டறைகொன்றையானைமனத்திடையிருத்தமாட்டே
ரண்டருமுனிவர்தாமுமரகரவெனுஞ்சத்தத்தைத்
கண்டுகொண்டிருப்பீரல்லீரென்செய்வீர்காலனுக்கே. (உகூ)

மனமவன்பாலிற்செல்லவாக்கவனுமஞ்சொல்லப்
பனிதரக்கண்ணிரண்டும்பத்தியாய்ப்பராபரன்பா
லனுசரிப்பொன்றுமில்லேனடியர்பால்விருப்புமில்லேன்
கனியிலாமரத்தையொத்தேன்கறைவளர்கண்டனுக்கே. (ஙo)

ஐயமுமிட்டேனில்லையடியர்க்கொன்றீந்தேனில்லை
துய்யமெய்ஞ்ஞானநூலின்சொற்பொருளறிந்தேனில்லை

மையணிகண்டத்தானைமலர்கொடுபணிந்தேனில்லை
வையகத்துவர்நீரொத்தேனென்செய்கேன்மதிவல்லீரே. (௯௧)

சாவதும்பிறப்புமில்லாச்சங்கரற்கடிமைசெய்வான்
றேவருமுனிவர்தாமுந்தீயிடைநிற்பரென்றாற்
பாவியேனடிகளுக்குப்பணிவிடைபலவியற்றேன்
காவியந்தடங்கண்மாதர்கலவியிலழுந்தினேனே. (௯௨)

நீரிலாக்குளமுஞானநிலையிலாநெஞ்சுநீண்ட
தேரிலாவூரும்பண்ணூற்றெரிந்தவரில்லாநாடு
மேரிலாச்சீரும்போலவீசனுக்கடிமையென்னு
பேரிலாவாக்கைபெற்றேன்பேதையேன்பேதையேனே. (௯௩)

ஞானத்தான்ஞானியல்லேனன்மையாற்குரும்பியல்லேன்
மோனத்தாற்றுறவியல்லேன்மூடத்தான்மூடனல்லேன்
வானத்தார்வணங்குந்தூயவயப்புலிவனத்துளார்க்குத்
தானற்றவடிமைசெய்யேன்சழக்குடைச்சழக்கனேனே. (௯௪)

எல்லையில்காலமெல்லாமேழைமார்வலையுட்பட்டுக்
கல்வியுங்கருத்துமின்றிக்கலக்கநானலக்கணுற்றே
னல்லுநண்பகலுமுன்றனடியின்கீழிருக்கல்வேண்டுஞ்
செல்வமுஞ்சிறப்பும்வேண்டேன்றிருப்புலிவனத்துளானே. (௯௫)

ஐவகைப்பொறிகளாலுமறுவகைக்குற்றத்தாலு
மைநிகழ்கண்டாநின்னைமறந்துழல்மனிதனானே
னுய்வகைவேறுகாணேனுயிர்க்குயிராகிநின்ற
தெய்வமேயஞ்சலென்னாய்திருப்புலிவனத்துளானே. (௯௬)

ஆமைபோலைந்தொடுக்கியறிவினுளறிவாய்நின்ற
வோமொழிப்பொருளைநாடியொன்றுபட்டிருக்கும்வண்ணங்
காமனைக்காய்ந்தகண்ணுங்கடையரிற்கடையனேற்குச்
சேமநல்லறிவுகாட்டாய்திருப்புலிவனத்துளானே. (௯௭)

சத்தசத்தென்னவேதஞ்சாற்றியவண்ணநின்னைச்
சத்தெனக்கொண்டிவ்வாக்கையசத்தெனத்தள்ளகில்லேன்
சத்தொடுகூடிப்பின்னுமசத்தையுந்தாவித்தாவிச்
சத்தனேசதசத்தானேனென்செய்கேன்சமலனேனே. (௯௮)

பற்றறத்துறந்தஞானப்பட்டினத்தடிகள்போலப்
பற்றறத்துறந்தேனில்லைபராபரநிலையைக்கண்டாங்

கற்றறிவாக்கரல்லேனன்பிற்கண்ணப்பனல்லேன்
குற்றஞ்செய்மூர்க்கனல்லேன்பத்தியிற்கோழையேனே. (௩௯)

கல்லெறிசாக்கியர்க்குங்கடைக்கணித்தருளாலாண்டாய்
வில்லடிபட்டுமென்றுவிசயனைக்காத்தாட்கொண்டாய்
புல்லியசிறியவாணன்புறக்கடைகாத்தாயாறு
லல்மர்கண்டநீமெய்யன்பனுக்கெளியனாமே. (௪௦)

அறிவிக்கக்குரவரில்லையன்னையும்பிதாவுமில்லை
யறிவிக்கவயலொன்றில்லையம்பலத்தாடியென்று
மறிவிக்குமம்மானேயென்றயனரிமுனிவரொல்லாஞ்
செறிவுடையடிமைசெய்வார்திரிப்புலிவனத்துளானே. (௪௧)

பண்டொருகாலந்தன்னிற்பத்தருக்கருளிச்செய்தா
னண்டர்கோன்வழிப்பட்டேத்தவநுக்கிரகங்கள்செய்தான்
முண்டகன்றிருமால்போற்றமுத்திமோக்கங்கொடுத்தான்
றிண்டிறற்புலிபூசித்ததிருப்புலிவனத்துளானே. (௪௨)

ஆவிற்கும்புலிக்குமுன்னமநுக்கிரகங்கள்செய்தா
னாவிக்கும்வலியனுக்குநாரைக்குமருளிச்செய்தான்
மூவர்க்குமுனிவர்கட்குமுதுக்குறையறிஞருக்குந்
தேவர்க்குமுத்திதந்தான்றிருப்புலிவனத்துளானே. (௪௩)

பரைவடிவீசற்கானபடியினாற்பன்றிக்கன்றுக்
கருண்முலைகொடுத்தான்பின்னுமானைக்காயரியைவிட்டான்
குருவடிவாகிக்கல்லால்குறுகினாறுதலாலே
தெரியருண்மூர்த்திபோலுந்திருப்புலிவனத்துளானே. (௪௪)

அரக்கனைமிதித்ததாலுமரிவெட்கிப்போனத்தாலு
முருக்கனலாகியண்டம்யாவையுமொருக்கலாலுஞ்
சுருக்கமில்புவியைத்தாங்கித்தூலமாயிருத்தலாலுஞ்
செருக்களவாற்றலுள்ளான்றிருப்புலிவனத்துளானே. (௪௫)

இன்பத்துளின்பமாயநின்னடியெய்தும்வண்ணந்
துன்பத்துட்டுன்பநீங்கித்துறவிகடேங்கிநிற்பார்
பொன்பதுமத்தோன்மாயன்புண்ணியத்தவங்களோர்பார்
செம்பதுமத்தாள்காட்டாய்திருப்புலிவனத்துளானே. (௪௬)

அறிவுருவாயவென்னையாணவமறைதிகூடிப்
பிறிவறியாதநின்னைப்பிறித்துத்தான்முழுதுமாகி

நெறியினைமறைத்துப்பொல்லாநீசருக்கடிமையாக்கிச்
செறியிருணின்றதென்னைத்திருப்புலிவனத்துளானே. (சஎ)

உடம்பினைச்சிவமேயென்பருடம்பிற்குமூலமோரார்
கடம்படுபிராணன்றானேகத்தனென்றுரைப்பருஞ்சு
மடம்பெறுமிந்தியத்தைமதியென்பரிவைக்குமூலந்
திடம்படுமின்னைக்காணார்திருப்புலிவனத்துளானே. (சஅ)

அனுபவத்தறிதலன்றியளவையாலறியக்கூடாச்
சனகனைச்சாக்கிசொன்னாற்சருவருமொப்புக்கொள்வர்
மனமொருபாலேவிட்டுமலரடிநோக்கும்வஞ்சர்
தினமலரிடினும்வேண்டாத்திருப்புலிவனத்துளானே. (சகூ)

சிவத்தினுக்கிரண்டுசத்திதிமிரத்துக்கனந்தசத்தி
சிவத்தினுக்குயர்ந்ததென்பர்தெளிவிலாமாந்தரெல்லாஞ்
சிவத்தினைமறையாதென்னைமறைத்தலாற்றிமிரபாசஞ்
சிவத்தினுக்குயர்ந்ததாமோதிருப்புலிவனத்துளானே. (ருo)

திரைநுரைகுமிழியெல்லாந்திரைகடற்றோன்றுமாபோ
லுரையுயிர்மாயையாக்கையுனதிடையுதிக்கக்கண்டேன்
பரைதிரைவுருவமாகிப்பசுதொறுங்குடியிருந்த
திருமறுமார்பன்போற்றுந்திருப்புலிவனத்துளானே. (ருக)

தேகமாறுமைதன்கூறுசீவனின்கூறதாகு
லாகமாய்ப்பிறந்திறப்பதாமெனலறையல்வேண்டும்
வாகனஞ்சத்தியம்புமாயவனாகக்கொண்டென்
றேகவாலயத்தைநீங்காத்திருப்புலிவனத்துளானே. (ருஉ)

அனாதியின்மலம்வந்தென்னையடுத்ததுமதற்குமுன்னே
மனாதிகளிலாதவாறுமலடிபாண்மைந்தன்போலத்
தனாதிமின்சத்தியாலேதனுகரணங்கள்வந்து
பினாதிமிற்பெற்றுப்பின்னைப்பிரிந்ததும்பேசல்வேண்டுஞ்
செனாதிபன்வழிபட்டேற்றுந்திருப்புலிவனத்துளானே. (ருங)

கடலிலேகலந்தவாறுகதியிடைப்பின்வந்தாலும்
கடலினுட்டன்மைகுன்றாக்கதையெனநினைக்கண்டோரு
முடலிடையிருந்துமுண்டுமுறங்கியுமுலாவிநின்றுந்
திடனுடைஞானியன்றோதிருப்புலிவனத்துளானே. (ருச)

ஒன்றிரண்டல்லவென்றாங்கொன்றினையொன்றாற்பற்றி
நன்றுதீதென்றநிற்குஞானிகளுள்ளக்கோயி
லென்றுநிற்கினியதென்றோவிடைவிடாதிருந்தவெம்மான்
சென்றிடையாதசெல்வத்திருப்புலிவனத்துளானே (ருரு)

பாசத்தார்பாசத்தோடும்பதிந்திடப்பசுவார்மின்பாற்
காசற்றவிழியார்போலக்கலந்தபின்பிரிவதில்லை

யாசற்றநீயுநானுமன்னியமின்மையாலே
தேசத்தார்பரவலானதிருப்புலிவனத்துளானே. (௫௬)

நீட்படுநீடநல்லகேழ்கிளர்குளவியாலே
யாட்படவதுதானுணவதிசயம்போலுமம்ம
நாட்படப்பிரிந்தநாயேனுதனிற்காட்செய்தத்தாற்
சேட்படச்சிவமதானேன்றிருப்புலிவனத்துளானே. (௫௭)

வடிவிலாவடிவினின்றுமணமிலாத்தொழில்குயிற்றி
யடிமுடியில்லாஞானவாரமுதுண்டுநிற்போற்
படுகுழியனையபெண்டீர்பாழ்நரியனையமைந்தர்
செடியுடையாக்கைவேண்டார்திருப்புலிவனத்துளானே. (௫௮)

நகாரத்தின்மயலைஞானவாளினாறுக்கிப்பின்னர்
மகாரத்தின்மறைப்பைநாமேமணியெனுமதியால்வாட்டி
வகாரத்தின்வழியேசென்றுமாலயனறியாதேங்குஞ்
சிகாரத்தைக்கண்டேனின்னாற்றிருப்புலிவனத்துளானே. (௫௯)

நோயிலாவாக்கைபெற்றுநுண்ணறிவுடையராகித்
தாயினுமினியநின்னைச்சமாதியிற்காணமாட்டார்
மாயையால்வகுக்கப்பட்டவடிவிடைநின்னைக்காணச்
சேயராயரற்றுகின்றார்திருப்புலிவனத்துளானே. (௬௦)

தனுவொடுகலவாராயின்சார்தராவினையிரண்டுந்
தனுவொடுகலத்தலாலேசார்தரும்வினையிரண்டு
மனமொழிகாயமூன்றுமவுனமுத்திரையினிற்பச்
சினமயலகன்றோர்போற்றுந்திருப்புலிவனத்துளானே. (௬௧)

குறியறிவாகுங்கோயில்குறிப்பருமாவியாகு
மறிவுசங்கமமேயெல்லாமறிவெனக்கண்டுகொண்டேன்
றறியெனவுடலுங்கண்ணுஞ்சமாதியிலிருக்குங்காலைச்
செறிபவமினியேற்குண்டோதிருப்புலிவனத்துளானே. (௬௨)

சைவசித்தாந்தமெல்லாந்தானவனாகிநிற்றல்
மையறுவேதசித்தமற்றதுநானேயென்ன
லுய்வகைக்கிரண்டுமொன்றென்றோதியென்னுயிர்க்கிலாபஞ்
செய்தசற்குரவனீயேதிருப்புலிவனத்துளானே. (௬௩)

கண்ணினாற்காணாக்காட்சிகாதினாற்கேளாக்கேள்வி
யெண்ணினாலெண்ணாவெண்ணமெழுத்தினாலெழுதாக்கல்வி
மண்ணைபாலகனுன்மத்தன்மதியொத்தஞானமெல்லாந்
திண்ணமாய்க்காட்டுமிந்தச்செவிக்கினியமிர்தமன்றே. (௬௪)

கர்நாமிர்தம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

பதினோராவது

## சுருதிசாரவிளக்கம்.

### பாயிரம்.

### விருத்தம்.

காப்பு.

பெரியபண்டியன்பெய்கரியானனனை
னரியஞானத்தபோதனரஞ்சலிக்
குரியவாமனரூபனையுள்ளுவாஞ்
சுருதிசாரவிளக்கந்துதிக்கவே. (௧)

### பரசிவவணக்கம்.

காதெவனாலேகேட்குங்கண்ணெவனாலேகாணு
மோதுநாவெவனாலுண்ணுமுடலெவனாலேயோரு
மோதுமூக்கெவனான்மோக்குமூச்செவனாலேயோடும்
போதெவனாற்போய்மீளுமவனடிபோற்றுகிற்பாம். (௧)

### பராசத்திவணக்கம்.

(வேறு.)

ஆதிப்பிரமத்தொருசத்தியபினாசத்தியாயதன்பாற்
பேதசத்தியாயதன்பாற்பின்னாபின்னசத்திகளா
யோதுநாமரூபமாய்விரிந்துமுடிவினொன்றாகிப்
போதமயமாய்நின்றாடன்பொற்றாமரைத்தாள்போற்றுவாம். (௨)

### முருகக்கடவுள்வணக்கம்.

(வேறு.)

செத்துச்செத்துப்பிறக்குஞ்செருக்கற
மெய்த்தஞானவிவேகங்கண்மேவிடச்
சுத்தவான்மசொரூபமேனியெனுஞ்
சத்திவேற்கைச்சரவணற்போற்றுவாம். (௩)

## அடியார்வணக்கம்.

(வேறு.)

முப்பாழும்பாழென்றமூலனாரடிபோற்றி
யப்பாலும்பாழென்றசடகோபரடிபோற்றி
யொப்பாருமிலையென்றசிவாக்கருணைபோற்றி
பொய்ப்பாரையறத்துறந்தவெண்காடர்புகழ்போற்றி. (ச)

கண்ணாலுங்கருத்தாலுங்கையாலுமெய்யாலு
நண்ணாதபரஞ்சுடரைநாதாந்தநாயகரை
யுண்ணாடுமவர்க்கெளியவுத்தமரையுபநிடதக்
கண்ணாரக்கண்டவரைக்கருத்தாரப்போற்றுவாம். (ரு)

பெற்றதபோதனர்பாதப்பெய்தூளிபுனைந்திடவுங்
குற்றமுறுமெனதுள்ளங்குவிந்தறிவைக்குறுகிடவும்
பற்றறத்தீரத்துறந்தசுகமுனிபங்கயத்தாளை
யற்றமறத்துறந்தவன்போலறிவாகிவணங்குவாம். (சா)

## குருவணக்கம்.

ஆக்கையல்விந்தியநீயல்லவகக்கரணமல
தேக்குபிராணனுமல்லஷிவனலசாக்கியல
போக்குவரவில்லாதபூரணநீயென்றருளு
மாக்குரவன்றிருத்தாளைமறவாமல்வணங்குவாம். (எ)

## நூற்சிறப்பு.

(வேறு.)

மறைகிடந்தமதுரநால்வாக்கிய
நறைமென்னஞானிகளுண்டிடப்
பிறவிதீர்தரப்பேணிப்பெருகிரு
ளறவிளம்புவனங்கையினெல்லிபோல். (அ)

(வேறு.)

ஐயமுடையோரின்னுமாசையுடையோரயுதம்
பையரவன்முடியுலகப்பசுநூலின்விருப்புடையோர்
மையுறுகொக்குவம்பரதமலிகணிதஞ்சத்தமிதி
னையுமவாவுடையோருமிந்நூலினயமறியார். (கூ)

## அவையடக்கம்.

ஆலவிடஞ்சிவன்மிடற்றிலடங்கியத்தாலகிலமெலா
மாலவிடமென்றிகழாரஞ்சலிசெய்வார்போல

மூலமகாவாக்கியமாமணிச்சீரைமுடிந்திடுமிம்
மூலமறிந்தோரிகழாரதுவேயென்மொழியம்மா. (க0)

நாரதாதியர்சுகர்க்குநவின்றநால்வாக்கியமுந்
தீரராய்முத்திபெறச்சித்தமொருப்பட்டவர்க்குந்
தூரமாயணித்தாயசுயம்பிரகாசப்பெயரோ
னாரியன்சேவடிபோற்றியறைவனருந்தமிழாலே. (கக)

பாயிரம் - முற்றிற்று.

---

## முதல்வாக்கியம்.

தீரத்துறந்தசுகமுனிவன்றிவவுமகரயாழ்முனிவ
னாரப்பொலிந்ததாமரைப்பூவடியில்வீழ்ந்துமுகநோக்கிப்
பாரைத்துறந்துபோமாறுபகர்தியென்னப்பக்குவனே
சேரப்பிரமம்பிரபஞ்சமேவாப்பிரமோகந்தெளியே. (க)

(வேறு.)

உலகமேபரப்பிரமமுரைக்குமந்தப்பிரமநா
மலகில்கலையுணர்ந்தாலுமருந்தமிதேயறிகண்டாய்ப்
பலமயலைத்துறந்தரியபரமபதந்தனைத்தாவி
யுலவுசுகமுனிவரனேயென்றுரைத்தானுயர்முனிவன். (உ)

ஆகிலிந்தப்பரப்பிரமமகிலமயமாயிற்றென்றூற்
சோகமொடுபிறந்திறக்குந்தொழிலுளவோவென்பாயே
லீகைபலபணியாயுமிறந்தனவோவதுபோல
வேகபரமகிலமுமாயிருக்கும்வியாபகத்தாலே. (ங)

தந்தைவயினுண்டாயசந்ததியுமவனென்றே
முந்துமறையுரைதருமான்முழுவதுந்தானன்றியொரு
சிந்துமிலையெனவீசன்சேயிழைக்கோதியபரிசாற்
பந்தமறுஞ்சுகமுனிவபார்பிரமஞ்செகமென்றே. (ச)

எல்லாவண்டமுமியானேயாவருமென்சொரூபமே
நல்லார்பொல்லார்நானேநன்மையொடுதீமையுநா
னுல்லாசபரமுத்தியொன்றொழியவிரண்டில்லை
கல்லார்க்கிப்பொருடெரியாகண்ணிலர்க்குக்கதிருண்டோ. (ரு)

ஒலியாகிப்பரிசமாயுருவாகியிரதமாய்ச்
சலியாதகந்தமாய்த்தரணியாய்ப்புனலனலாய்

மலிவாயுவானமாய்மதியிரவியியமாகு
யலியாகியாணுகிப்பெண்ணுகியமர்கின்றேன். (கூ)

சாவதுவும்பிறப்பதுவுந்தனுவன்றேவஃதறிதி
சாவதுவும்பிறப்பதுவுந்தாமென்றேயுரைதருவார்
போவதுவும்வருவதுவும்புரியட்டசரீரமே
போவதிலைவருவதிலைபோதமயப்பொருளுமே. (எ)

இவ்வண்ணமறியாதாரில்லறத்தைத்துறந்துபோ
யுய்வண்ணம்பெறக்கானிலூசிநுதித்தவம்புரிவர்
நைவண்ணமனத்தோடுகானிலம்போய்த்திரிதருவார்
கைவண்ணவனலோம்பிக்காலத்தைக்கடத்துவார். (அ)

(வேறு.)

தன்னையறிந்தோர்தபோதனரோதன்னையறியார்தபோதனரோ
முன்னைவினையின்முடிபறியார்முதன்மைப்பிரமந்தானென்றே
சொன்னமறையின்பொருளறியார்துறந்துந்துறவார்சுபமுத்தி
பின்னமென்றேபிதற்றுவாரென்னேயுலகின்பேதமே. (கூ)

முதல்வாக்கியம்-முற்றிற்று.

---

## இரண்டாம் வாக்கியம்.

வான்முதலுலகமெல்லாமனத்திடையாக்கவல்ல
நான்முகப்பிரமன்றன்னைநவில்சுகமுனிவனோக்கி
மோனவத்துவிதச்சொற்குமொழிபொருளிரண்டோவொன்ரு
ஞானசற்குரவசொல்வாயென்றுளைநந்துகேட்டான். (க)

(வேறு.)

ஏகமேவாத்துவிதம்பிரமோகமென்றிசைப்பத்
தாகமொடுஞ்சுகமுனிவன்சந்தேகத்தடைநீங்கி
யாகமெனுஞ்சிறையுல்வாதாநந்தச்சிறையாகி
யேகமேயத்துவிதம்பிரமநாமெனத்தெளிந்தான். (உ)

அத்துவிதந்துவிதமல்லாதெனவரியமறையேக
மத்துவிதமிதற்கையமிலையென்றேயறைந்தாலும்
பொய்த்துவிதமயக்கொழியார்பூருவவாதனையாலே
யத்துவிதமொழிபொருடானன்னியமாய்த்தெளிவரால். (ஙூ)

வேறாகிப்பிறந்திறந்தகாலமெலாம்விவேகமிலாக்
கூறாகியருட்குரவன்கூற்றேவலாற்றியபின்

னீறாருந்திருமேனிநிமலன்மாவாக்கியத்தால்
வேறாகாப்பதமளித்தால்வேறாகும்விரகிலிகள். (ச)

ஒன்றாகிப்பரவெளியாயுருவருவமிலதாகிக்
குன்றாதபரப்பிரமங்குகையிருக்குமதைவிளக்கி
னன்றாருமிதயகுகைநாமனாவேவையயமிலை
கன்றாதநின்மொழியான்மெய்ஞ்ஞானங்கடைப்பிடித்தேன். (ரு)

ஊனாடியுயிர்நாடியுண்ணாடிப்புறநாடி
வானாடிவளிநாடிமண்ணாடிநீர்நாடித்
தீநாடிநாதவிந்துசெங்கதிரோன்றனைநாடி
நானாடிப்பார்ப்பளவினானேயப்பரப்பிரமம். (சா)

பல்கலையாலாகமத்தாற்பகர்இசைதபதினெட்டா
னல்வினையாற்கருமத்தானான்மறையான்ஞானத்தாற்
சொல்லூகத்தான்மறையாத்துணிவாலிற்றுறந்தோரா
னல்லோரானான்பார்க்கினானேயப்பரப்பிரமம். (எ)

ஒருகாலந்தோன்றினேனொருகாலம்வளர்கின்றே
னொருகாலஞ்சாம்பினேனென்றுரைக்குமுணர்விலிக
ளொருகாலம்பிறந்ததிலையொருகாலம்வளர்ந்ததிலை
யொருகாலமறிந்ததிலைநானேயவ்வுயர்பிரமம். (அ)

நான்மனிதனன்றுநானவிலுறுதேவனுமன்று
நானிராக்கதனன்றுநலியசுரனானன்று
நான்முனிவனன்றுரகனான்முகனுநானன்று
நான்றிருமாலன்றரனுமன்றரியபிரமநான். (கூ)

முன்னவருநானல்லமுடிமன்னர்நானல்ல
துன்னுவசியருமல்லசூத்திரருநானல்ல
வன்னியருநானல்லவன்னியருநானல்ல
பின்னமொடுபிறப்பிறப்புமில்லாதபிரமநான். (க0)

நான்பிரமமெனுஞானஞானிகள்பாலுளவாகு
மூன்பிரமையொழியாதார்க்கொருக்காலுந்தோன்றாவா
மான்வயிற்றினரிதாரமருவுமன்றிவராகவயிற்
றான்பிறக்கக்கண்டாருமுண்டோபொய்க்கலியுகத்தும். (கக)
ஆதலாலகம்பிரமமெனுஞ்சுருதியகந்தெளிந்து
போதினான்முகப்பிரமன்புண்டரிகத்தாள்வணங்கி

யோதொணுமகிழ்ச்சியொடுமுலாவினுலகமெலாஞ்
சோதியிவன்ருனென்னத்துறந்தசுகமுனியம்மா. (கஉ)

இரண்டாம்வாக்கியம்-முற்றிற்று.

---

## மூன்ரும் வாக்கியம்.

சொன்னவருஞ்சுகமுனிவன்றுயர்க்கடலைக்கடந்திடுவான்
முன்னைவினைநல்வினையான்மொய்த்தெழுந்தபூங்கயிலை
மன்னியுறைகல்லாலின்மாதேவர்திருமுன்பு
துன்னினனேகமுறைதொழுதழுதான்சொல்லுவான். (க)

காண்பதெலாம்பிரமமெனிற்கண்டிதமாயழிதருமே
காண்பதலாதனவெல்லாங்காணுமலழிதருமே
மாண்பயிலுமாலறியாமலர்ப்பதத்தாய்புகன்றிடுதி
வீண்பயிலாகச்சுமையான்மிகநொந்தேன்விண்ணப்பம். (உ)

சிறந்ததிருக்கல்லாலிற்றிகழ்கின்றதெய்வமே
பிறந்திறவாப்பெற்றியனேபேதையேன்விண்ணப்ப
மறந்தவிரப்பாவமுறுமஃதொழியவறனெய்து
மிறந்தொழிவதெக்காலமெய்ஞ்ஞான்றுன்பதம்பெறுவேன். (ங)

பக்குவர்க்காய்க்கல்லாலின்பாங்கெழுந்ததெய்வமே
தக்கவிராட்டிருவுருவாய்தமியேன்றன்விண்ணப்ப
முக்குறும்புங்கடந்தவிடமுழுத்துரியநிலையென்ரு
லக்குறும்பைக்கடப்பவன்யாரவனேயப்பரப்பிரமம். (ச)

பொய்ப்பிரமைமொழியதிருக்கல்லாலின்புடையெழுந்தோய்
செப்புமுறையறியாதசிற்றடியேன்விண்ணப்ப
மப்பிரமேயப்பொருளாமறிவென்னிலறிபவர்யார்
சுப்பிரமமுடரேறுந்தோற்றியுமென்ரேற்ருவே. (ரு)

அருந்தவர்க்காய்க்கல்லாலினகத்திருந்ததெய்வமே
புரங்கடந்தாற்றுரியநிலப்பொற்பொதுவுங்கடந்தேறி
யிருந்தபடியிருவென்ருலேழையேன்விண்ணப்ப
நிரந்தரநாமென்றறியினிடேதமெஞ்ஞேவிதியென்ஞே. (சு)

வேதியர்க்காய்க்கல்லாலின்வீற்றிருந்ததெய்வமே
போதமிலாப்புன்மதியேன்பொய்யாதவிண்ணப்பம்
பேதமிலையெனிற்பேதம்பெற்றமையென்பினும்பேதம்
போதுமோர்பிராந்தியெனிற்பூரணர்க்கேனிப்பொய்ம்மை. (எ)

ஆதலாலடியேனுக்ககந்தெளியவிடைதேற்றிக்
காதலாலடியேனைக்காப்பையெனக்கைகுவித்துச்
சீதரன்முன்னறியாததிருவடிக்கீழ்வீழ்ந்தலறிப்
போதமசைவறநின்றான்புரமட்டோன்புகலுமால். (௮)

சத்தியமீதிதற்கையஞ்சாராதுசமுசயமா
மித்தையிதிலொழிந்துபோமிவ்விடைக்குவிடையில்லை
சுத்தகிளிப்பெயரோய்கேள்சுருதிமுடிவினுஞ்சார
மெய்த்தமறையொன்றாலன்விரிவொடுங்குமிஃதறிதி. (௯)

பாவாபாவாதீதம்பிரமோகமெனப்பகரு
மூவாதவாக்கியத்தின்முடிவறியின்முன்மாயை
நீவாதபின்மாயையிரண்டிற்குநீண்டிருக்கு
மோவாதபரப்பிரமநீயாமென்றுணர்கண்டாய். (௧0)

(வேறு.)

கேவலசகலமென்னக்கிளைத்தெழுமாயைதன்னைக்
கேவலஞானத்தாலேகிழித்தறிவாகிநிற்பாய்
பூவலம்புரிந்தமாந்தர்புண்ணியதீர்த்தமாதி
யாவலாய்த்தானமாதியாகமாதியவிதாமால். (௧௧)

(வேறு.)

நினைவழிப்பினைதன்பின்னேநினையாமையெழுமத்தை
நினைவறியாவறிவுருநாமென்றவற்றினையளிற்பாய்
மனிதரறியாவிந்தமாறுதசுகோதயத்தைத்
தனியிருந்துகாண்டியாற்சகங்கடந்தவத்தோயே. (௧௨)

காரணகாரியங்கடந்தகாரிப்பிரமநாமென்றே
யாரணநூற்புகன்றபடியனுபவிப்பாயருந்தவனே
காரியமேழ்காரணமேழ்கழறினுபாதிகளாகுங்
காரியமுன்பாலுடைத்துக்காரணமக்கடவுடன்பால். (௧௩)

தேகமொடுபொறிகரணஞ்செறியுயிரோடேழென்பா
ராகிலுயிருபாதியிதாலகிலேசனுபாதிசொலிற்
சோகமிலாச்சருவசிட்டிமுதற்சருவாந்திரியாமி
பாகமுறுஞ்சுகமுனிவகடையேழும்பரிந்தறியே. (௧௪)

இன்னணமாயுயிரரணைக்கடந்தேறியிறையரணைப்
பன்னுமறையின்படியேகடந்திடற்பைங்கிளிப்பெயரோய்

சொன்னபரப்பிரமமயமீயாயேதோன்றுமா
லன்னியமாயொருபொருளுந்தோன்றாவேயனுபவத்தே. (கரு)

தேகமலேன்பொறியல்லேன்செறிகரணநானல்லேன்
மூகபிராணனுமல்லேன்முழுப்பிரமநானென்னச்
சோகமெனப்பாவிக்கிற்சுகமுனிவ·வுயிர்த்தடைபோம்
மாகமுறுமதிபோலவிளங்குமுன்றன்மதிதானே. (கசு)

சிட்டிமுதற்றொழிற்கெல்லாஞ்செப்பிடினுன்பரமென்ன
விட்டவைக்குச்சாக்கிநானெனில்விமலமடைகின்றாய்
வெட்டவெளிப்பெரும்பாழில்வீற்றிருக்கும்பரம்பொருணீ
யிட்டசெழுங்கதிர்போல்வையிருக்குமுனையறியாவே. (க௭)

பாவனையெல்லாமிறந்தாற்பாழன்றோபரமேட்டி
பாவனையெலாமிருந்தாற்படுசெகமன்றோவிரண்டு
மோவியதேநின்னிலையமுபாதியறுசூனியமா
யோவியம்போனிருவிகற்பவுணர்வாய்நில்சுகமுனிவ·. (க௮)

(வேறு.)

அறிவையன்றியறியப்படும்பொருள்
சிறிதுமில்லையெனத்தெளியாவிடின்
மறியுமைம்புலவாதைத்திரைகளில்
பிறவிமைக்கடல்வீழ்வைபெருந்தவ. (க௯)

(வேறு.)

அனந்தகுணகலியாணவப்பிரமேயப்பொருளே
மனந்தமொராநிலயம்வகுத்தநந்திவாகனனே
தனந்தனியேயிருந்தாடுஞ்சங்காரகாலத்தின்
முனந்தபரவெளிக்கோயின்முக்கணநின்னுலுய்ந்தேன். (உ0)

(வேறு.)

வேதநாரணன்புள்விலங்காகியு
மாதியந்தமறிந்தனரில்லையாற்
பேதபாவனைநீத்துப்பெருந்தகாய்ப்
பாதமாமுடிபற்றியதென்கோலோ. (உக)

(வேறு.)

உளதிலதாம்பொருண்முடிவினுறுபொருளையான்கண்டே
னுளதிலதேபொருளென்னுமுணர்விலிகள்காண்பாரோ
வளவிலாப்பொருண்முடிவைக்கண்டேனின்னருட்கண்ணா
லளவிலாவாநந்தம்பெற்றேன்யார்பெறுவாரே. (உஉ)

காணுக்கண்கேளாதகாதுமுளைகழுநாப்
பூணுதபூடணமும்புனேயாதபொற்றுகிலும்
வேணுதவேட்கையுமேல்வீழாதவிரிவியப்பு
மாணுதிநாமல்லாவறிவாநிதந்தனையே. (உஙு)

கைம்மாறுகாண்கிலேன்கடையுகவெந்தீயாடி
பெய்ம்மாரிக்குதவியெவர்பெறவளிப்பார்பேருவகைப்
பெம்மானேபணிந்திறைஞ்சும்பெரும்பேறெற்கருடியென
மும்மாயைப்புரங்கடந்தசுகோதயமாமுனிபோனுன். (உசு)

மூன்றும்வாக்கியம்-முற்றிற்று.

## நான்காம் வாக்கியம்.

உண்ணுர்போன்முகம்வாடியுண்டிமேல்விழைவின்றி
யுண்ணுடிப்பரம்பொருளேயுன்னியுலவாத
வெண்ணுதநெடுங்காலமிதுவதுவென்ருர்கின்ற
வெண்ணுதவெண்ணமெலாமெழவதனையிடிக்கின்ருன். (க)

(வேறு.)

எத்தனைதாயைக்கண்டோமெத்தனைதமரைக்கண்டோ
மெத்தனைமனையைக்கண்டோமெத்தனைமகவைக்கண்டோ
மெத்தனையூரைக்கண்டோமெத்தனைபேரைக்கண்டோஞ்
சித்தமேதிரும்பாயீசன்றிருவடிகாணுமாறே. (உ)

(வேறு.)

வாமனமேயென்கண்டாய்வையகத்திற்போயழுந்திச்
சாமளவுமென்னேயேன்றமொற்றஞ்செய்கின்ருய்த்
தூய்மனமேயென்ளுேடுந்துணைப்பட்டாயாகிலன்றே
தேய்மதியூர்சடையானையின்றேசென்றடைவேனே. (ங)

பொல்லாதபுலன்மரத்திற்போயேறிப்புகழிகழாம்
பொல்லாதகனியுண்டுபோதொழிக்கும்புன்குரங்கே
நல்லார்போம்வழிநாடிநால்வரைப்போலிருந்தக்கா
னல்லாய்நீயல்லேயெனஞாலமுனைத்தூற்றுமே. (ச)

ஆக்கறக்குமந்நேரமகந்தொறுஞ்சென்றிரவாதே
கோக்களிடத்தேசென்றுகுற்றேவல்செய்கின்ருய்
மூர்க்கருறவேதேடிமுயல்கின்ருய்முதுநெஞ்சே
போக்குவரவகன்றபரிபூரணனைப்புறகிட்டே. (ரு)

போகாதபுல்க்கடலிற்புக்கதனிற்பொருமியெழு
மாகாதநஞ்சினையுண்டாந்தோநீயழிகின்றாய்
மூகமனமேயுனக்குமுடிவுமொருக்காலுமுண்டோ
காகமுறுக்காட்டிலுனைக்கனன்றீடுமெல்ன்களையாறும். (௬)

விரியமனங்கடவதெனவியாதனிட்டசாபமோ
பெரியபிராரத்தமோபிரமன்விதித்தவிதியோ
கரியமனக்கள்ளாநீகவலைவனம்புகுகின்று
யொருமொழியாலுனைக்கட்டியுருட்டிவிடக்காண்பேனே. (எ)

அஞ்சுபுலன்வழியோடியலைகின்றமனமேவா
நஞ்சமுதமாயுண்டநாதன்பாற்போவோம்வா
தஞ்சமினிவேறில்லைசங்கரன்றட்டஞ்சமன்றி
யுஞ்சிடவோர்நெறியில்லையோகியர்பாற்போவோம்வா. (அ)

பெரியவர்தந்தரிசனத்தாற்பெறாதபொருளொன்றுண்டோ
வரியவவர்மொழித்தடியாலடிக்கின்றேன்வாமனமே
யொருபொழுதோர்நொடியளவுநிற்பாயேலுயர்முத்திக்
கரைகாண்பேன்மெய்ஞ்ஞானக்கடவுளையுங்காண்பேனே. (௯)

அகமுகமாயைநடக்கியாறெக்கியாநந்தச்
சுகமடைந்தசனகனைச்சென்றடைகின்றான்சுகமுனிவன்
பகலிரவும்பொருட்டேடிப்பரியவர்பாலடையாது
சகதியிடைக்கேழலெனத்தவமிலர்பாலடைகின்றார். (க0)

சனகனெனுமன்னவர்கோன்றனைமுகநோக்கினர்க்குண்டோ
மனசமுகமெனக்கேட்டுவாய்தனிலீரேழ்பகலு
மனதாகமின்றியேயவனிருப்பப்புரவலனு
நனிவாவென்றழைப்பவந்தான்ஞாலத்தையறத்துறந்தான். ()

பைந்தொடிசங்கமமின்றிமற்றையபல்லுபசார
மங்கியற்றவேலினுறவாழிதரிசனகன்
புங்கவனேயெவ்வண்ணமிருக்கின்றாய்புகறியென
விங்கறியேன்சுகவசுகமிரண்டுமென்றான்சுகமுனிவன். (கஉ)

அறிகின்றேனறிவில்லேனெனுநிலையங்கடந்தநிலம்
பிறிவறியசுவானுபவாதீதம்பிரமோகமென
மறுவின்மறைகூறுமாவாக்கியத்தைக்கடைப்பிடிக்கி
னறிகின்றவனுபவமுமனுபவமன்றாமன்றே. (கங)

அவ்வறிவுங்கடந்தொளிருமனுபவமேதென்றாயே
லிவ்வறிவுசீவனமாயிருப்பளவுந்தோற்றுவாஞ்
செவ்வறிவாய்நீநிற்பிற்றெரியுமதையென்சொல்கேன்
பௌவமடைநதியெனவும்பசுபோதமடங்கிடுமால். (௧௪)

நீயறியப்பட்டதெலாநிட்டையல்லவதீதத்தே
போயறியுமறிவினையும்புகவிழுங்கிப்பூரணமாய்த்
தாயறியுங்குழவியினைத்தனையறியாவணம்போ
லாயபெரும்பாழறிவாரறியாதவனிர்வசனம். (௧௫)

உன்றந்தையுரைத்ததுவுமுயர்முனிவனுரைத்ததுவு
மன்றல்கமழ்கமலனுரைவாக்கியமுமகதேவ
ரன்றுரைத்தவாக்கியமும்யானுரைத்தவரும்பொருளு
மொன்றேயாமையமிலையுனையன்றிவேறில்லை. (௧௬)

பேறாதபெரும்பேற்றைப்பேசாதபெரும்பேச்சை
யூறாதகண்ணீருமுடையாதபேரன்பு
மாறாதவனுபவமுமணுகாதவணுகலுமாய்
மாறானுங்காணாதமகத்துவத்திலழுந்துவாய். (௧௭)

பெறுபவன்யார்பேறியாதுபேசென்றான்சுகமுனிவ
னறிபவன்போயானந்தத்தனுகூலமானபினர்ச்
செறிபிரமமொன்றொழியவிரண்டில்லாத்திறத்ததேல்
பெறுபவன்யார்பேறியாதுபேசென்றான்பெருஞ்சனகன். (௧௮)

காண்பவன்யார்காண்பனயார்கழறென்றான்சுகமுனிவன்
சேண்பயிலுமொளிக்கொளியாய்ச்சித்தாகிப்பரவான்மா
தான்பிரகாசித்தபினர்த்தானேதானானமையாற்
காண்பவன்யார்காண்பனயார்கழறென்றான்கனசனகன். (௧௯)

உண்பதியாதுண்பவன்யாருரையென்றான்சுகமுனிவன்
புண்பயிலுமுடல்பொருளும்பொன்றாதவாவியுமத்
தண்புனலோடாரியற்குத்தத்தமெனவீந்தபின
ருண்பதியாதுண்பவன்யாருரையென்றானுயர்சனகன். (௨௦)

பூசனையார்பூசகன்யார்புகலென்றான்சுகமுனிவ
னாசையெலாநிராசையாயானந்தமுங்கடந்த
வீசனானீசனிரண்டற்றவெல்லையிலே
பூசனையார்பூசகன்யார்புகலென்றான்புகழ்ச்சனகன். (௨௧)

தோத்திரியார்தோத்திரம்யார்சொல்லென்றான்சுகமுனிவ
ஞார்த்தமொடுமனவாக்குக்கதீதத்தேயளவிறந்த
சேத்திரத்திற்சிவமாகித்திறம்பாதநிலையத்திற்
றோத்திரியார்தோத்திரம்யார்சொல்லென்றான்றுனைச்சனகன்.

முத்தியுண்டோபெத்தமுண்டோமொழியென்றான்சுகமுனிவன்
சித்தமலமிறந்தரியசிற்பரையுங்கடந்துபோ
யெத்திசையுமெய்ப்பொருளும்யாமாகிநின்றிடத்தின் [ன்.
முத்தியுண்டோபெத்தமுண்டோமொழியென்றான்முநிர்சனக

(வேறு.)

கூர்கொண்டவாள்கொலைசெய்யுமோகொலைசெய்பவன்கையன்றியே
கார்கண்டலோபயிர்செய்வதுகதிர்கண்டலோவிழிகாண்பது
பார்கண்டியானிருவாதனைப்பயிர்செய்வதுமிறைகண்டலோ
தீர்கின்றநாளென்ஞான்றுசொல்சிவயோகியேசிவயோகியே. (உச)

முன்பண்ணியவிருவாதனைமுநிர்தேசிகன்விழியாலறும்
பின்பண்ணியவிருவாதனைப்பிரமாற்பணத்தாலேகெடு
மன்பொன்றியநாமச்சுதனென்கின்றபேராநந்தமேற்
றுன்பங்களாரின்பங்களார்சுகயோகியேசுகயோகியே. (உரு)

(வேறு.)

ஐயமெனும்புறங்காட்டையட்டேனின்னருண்மொழியால்
வையகத்தினின்போன்றமாதவராரொனவாழ்த்த
வுய்யுநெறியுணர்ந்தேனேயுன்வரவெற்கிடைக்குமோ
செய்தவத்தாலுன்பாதத்தெரிசனையான்பெற்றேனே. (உசா)

என்றொருவருக்கொருவரிவ்வண்ணந்தமிழ்பேசிச்
சென்றொடுங்குமாறென்னச்சித்திரிகன்கண்ணென்னக்
கன்றிறந்தவாறென்னக்கண்ணிழந்தான்கநியென்னத்
துன்றரியசுவபானுபவத்தழுந்தினான்சுகமுனிவன். (உஎ)

வாழ்த்திடவும்வாயில்லைவணங்கிடவுஞ்சிரமில்லை
சூழ்த்திடவுமலரில்லைதொழுதிடவுங்கையில்லை
யேத்திடவும்பாவில்லையெதிர்ந்திடவோரிறையில்லைப்
பார்த்தவிடந்தொறுமியானேயெனையானேபணிகின்றேன். ()

பண்டைமறைமொழிப்படியேபரமபதமினிதுணர்ந்து
தண்முதலில்வியாதமுனிமனங்குவியத்தானினைப்பக்

கண்டையொத்தமனங்குவித்துக்கனகவரைமீதடைந்தங்
கண்டொலாமறியாதமத்துவிதவீடுற்றான். (௨௯)

மாறாதவாசையெலாமனமாரத்துறந்துபோ
யெறாதமுத்திமலையினிதேறியிச்சகத்தை
நீறாக்கிநினையாமனித்தியாநந்தமுற்றான்
றேறாவென்போலியெலாந்தினமலையுந்தெரிவையர்க்கே. (௩0)

காற்றிலாவிளக்கொளியோகண்ணாடிமண்டிலமோ
நீற்றொளியோசார்க்காலநிறைமதியோநிறைவானோ;
தேற்றுறுபூங்கங்கையோதிரையற்றபாற்கடலோ
வாற்றரியதவனோற்றசுகமுனிவனகமம்மா. (௩௧)

ஆங்கவனைநினைதொறுமென்னகங்காரமடுக்கழியும்
பூங்கமலத்திருத்தாளையுள்குதொறும்புகலுளவாங்
தீங்கறுமன்னவன்காதைசெவிபுகவென்றீமையுகுங்
பாங்குடையோன்றுறவெனக்கும்பதியுமோபாரிடத்தே. (௩௨)

ஐயாசையாறாசையற்றவறிவுடையோனை
யையாண்டாயினுமன்றியாண்டேனுஞ்சோதித்துப்
பொய்யாவிந்நூலவர்க்குப்போதிக்கபுகழ்க்கீயின்
பொய்யாரும்புலைநிரையம்புகுவர்புவியுள்ளளவும். (௩௩)

குக்குடம்போற்சற்சீடன்குப்பையைப்போற்சற்குரவன்
குக்குடம்போலாராயின்குருக்குப்பைக்குருக்காட்டு
மற்கடம்போற்றிரிவோர்க்குமகிடம்போலிருப்போர்க்குங்
கற்கடகம்போல்வார்க்குமிந்நூலைக்காட்டற்க. (௩௪)

ஆ திருவிருத்தம - ௬௯.

சுருதிசாரவிளக்கம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

| | | |
|---|---|---|
| முதல்வாக்கியம் | - | பிரக்கியானம்பிரமம் |
| இரண்டாம்வாக்கியம் | - | அகம்பிரமாஸ்மி |
| மூன்றாம்வாக்கியம் | - | தத்தொமஸி |
| நான்காம்வாக்கியம் | - | ஆயமான்மாப்பிரமம். |

---

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

பன்னிரண்டாவது

## சிந்தனைவெண்பா.

### தக்ஷிணாமூர்த்தி துதி.

எணியைப்போலியாவரையுமேறவிட்டுமியானேறேன்
றேணியொப்புப்பல்லியொப்புச்சொல்லலா - நாணமற
வெல்லார்க்கும்போதித்துமியானில்லேனென்செய்கேன்
கல்லாலாமுற்றுமெனைக்கா. (க)

### குருவணக்கம்.

அம்மைமுலைப்பாலன்றமுதுபெறுஞ்செல்வ
வெம்மைப்புரக்கவந்தவீசனே - செம்மை
யரக்காம்பல்வாயினாலாகமநுட்பத்தைத்
துரைக்காழிச்சம்பந்தாசொல். (க)

ஆகமங்கள்சொன்னபரப்பெல்லாமறச்சுருக்கி
யோகையுறச்சொல்வேனீயுற்றுக்கேள் - பாகமொரு
நாலாம்பருவமுறஞானதாகம்பிறக்கு
மேலாதுமற்றையர்க்கெல்லாம். (உ)

படைபிழைத்துப்போவார்போற்பதைபதைக்குமஞ்ச
முடலரவமென்றலறியோடி - நொடியளவும்
வீண்போதுபோக்காதுமெய்யடியார்தங்குழாங்
காண்போமோவென்றுருகுங்கால். (௩)

சருவபரிபூரணமாய்ச்சதானந்ததேசாய்
சருவபுவனங்களுந்தானுமிறைவன் - மருவிலருட்
டிருமேனிகொண்டுவந்துதிருநோக்கத்தாலுன்
கருமேனிபொன்றிவிக்குங்காண். (௪)

பொன்னைப்பொருளைப்புகழைக்குறியாது
தன்னையளித்தவனேசற்குருவா - மின்னமின்னம்
பொன்னீபொருளீயென்றோதுங்குருவெல்லா
மன்னியனேசற்குருவன்றாம். (௫)

ஐயந்திரிவகற்றியான்மாவைக்காட்டியதற்
கையனருளையறிவித்து - மெய்யன்
திருவடியைக்காட்டிச்சிவோகம்பாவிக்க
வருள்செய்வோன்ஞானகுருவாய். (௬)

உள்ளஞ்சுழலவுயிர்சுழலவூன்சுழலக்
கள்ளப்புலனிலெனைக்காட்டாதே - யுள்ளத்திற்
கண்டாருங்காணாதகத்தாவைக்கைவிரலால்
விண்டாழக்காட்டுவிரகா. (௭)

கண்போலவான்மாகதிர்விளக்குப்போலாக்கை
விண்போற்சிவமதிபோல்விஞ்ஞானம் - விண்போந்த
சூரியன்போல்மெய்ஞ்ஞானஞ்சூழிருள்போலஞ்ஞானந்
தாரகைபோற்றத்துவங்கடான். (௮)

சரவசரந்தோறுஞ்சாக்கியாய்நிற்பன்
பரமசிவனையப்படாதே - திரிபுரைக்கன்
றில்லாவிடமில்லையென்றதிருவாக்கு
நல்லாய்நமக்கரணநாடு. (௯)

சிவன்வேறுசீவன்வேறென்றதேசீவன்
சிவன்கூறுசிவைகூறுதேகஞ் - சிவனிதயந்
தான்மாபிறந்தானன்றைம்முகத்துமைம்பூதந்
தான்பிறக்கக்காண்கிலைநீதான். (௧௦)

தேறினார்சித்தத்திருந்தார்சிவனென்றால்
வேறுபடுத்துவதேன்வீணாநீ - மாறுபட்டுப்
பேசாதையெல்லாம்பிரமமென்னும்வேதாந்த
மாசையற்றாலீயேயது. (௧௧)

சிவன்வேறுசீவன்வேறென்றிரண்டாய்ச்செப்பு
மவன்சிவனையென்றுமறியாதான் - றவமில்லா
வுள்ளத்தார்க்கெய்துமோவூர்க்குருவியாகாச
மெள்ளப்பறந்தறியுமே. (௧௨)

அதுவேநீயாமென்றருமறைகள்சொல்லு
மெதிர்சிவனேநீயானாயென்னு - மூதுசைவம்
வேறோவேறன்றோசொல்வேதியனேவிண்விசும்பும்
வேறோவேறன்றோவிளம்பு. (௧௩)

ஐம்பொறியுமைம்புலனுமைம்பூதமுமகற்றி
யின்பசிவநீயென்றாலேலாதோ - வன்பனே
முத்திமுடிவீதென்றான்முன்னூலும்பின்னூலு
மற்றநூலெல்லாமற. (௧௪)

தானேபரமாணுற்றத்துவசாலத்திலே
யேனோபிறந்திறந்தேனித்தனைநாள் - மாணாகேள்
நீபிறந்ததில்லையுண்மைநெஞ்சுபுலனும்பொறியு
நீபிறந்தாற்போனிச்சயம். (௧௫)

கடத்திருக்குமாகாயமென்றகதிச்செய்யு
ளுடற்குள்வருதுன்பமெலாமோட்டும் - விடற்கரிய

மன்னுமனேகாகாரமென்றதிருவார்த்தை
யின்னேபிறப்பறுக்குமேண். (கசு)

ஓரிடத்துநில்லாவுலகுயிரஞ்ஞானமிவை
யாரிடத்தினுண்டாயதண்ணலே - காரிடத்தின்
மின்றோன்றுமாபோல்விளங்குமுயிர்ப்போதத்தின்
முன்றோன்றுமென்னுமுமை. (கஎ)

ஒன்றுடனுந்தோய்வில்லானென்றவுரையாலே
யென்றும்பிறப்பறுத்தாயென்றாயே - யென்று
மிவனவனுகில்லானெனன்றவுரையென்கொல்
தவமிலர்க்குச்சொன்னமொழிதான். (கஅ)

அமுசோகம்பாவனையாலாருயிரின்போதச்
சமுசயத்தையென்மொழியாற்றள்ளி - யிமையளவுங்
கட்டவுடலாகாமற்காமிகத்திற்சொன்னவண்ண
நிட்டையிலேநின்றுவிடுநீ. (கக)

மெய்கண்டான்வெண்காடனெங்குருச்சிற்றம்பலவன்
பொய்கண்டகண்டசுகர்பூரணர்க - ளவனையு
முள்ளடக்கியொன்றாயுணர்வாயுறங்கினர்போ
லுள்ளடங்கிநீயுமுணர். (உ0)

ஆட்பாலவாக்கருளுமென்றருளிச்செய்த
கோட்பாடுடையவருட்கோவே - தாட்பா
லணைந்தவுயிர்க்குவமையாதோமுன்னீருப்
பணைந்ததுபோலாமென்றறி. (உக)

ஏதுக்களாலுமென்றகவையாப்பைச்
சோதித்தார்க்கன்றோசுகவுதய - மாதுக்கம்
போக்குமருந்தொழித்துப்பொய்க்கடலில்வீழ்பவர்போ
லாக்கமிழந்தேனுனற. (உஉ)

தானேசிவமல்லாற்றனிச்சிவம்வேறில்லையென்ற
மோனமொழியொன்றின்முடிபறியா - யோனிதொறுஞ்
சென்றுபிறந்தெய்த்தேன்சிவாயசிவவென்செய்கே
னென்றுகடத்தேறுவேனியான். (உங)

எழுவாய்ச்சிவங்காட்டியீற்றிலசிகாட்டு
முழுவாக்கியத்தின்முடிபறியா - விழுதையே
னுய்யுநெறிகாணேனுயர்ந்தகுலத்திற்பிறந்துஞ்
சைவநெறிபுக்கியுமெந்தாய். (உச)

அறிவென்றறியாதவாணவமேஞானச்
செறிவாயவென்னைநீதீண்டற்க - வறிவாய
வென்னைச்சிவமாக்கியென்னறிவிலெக்காலும்
பின்னமறநின்றான்பிரான். (உரு)

மொழிந்தசிவசம்பந்தாமுப்பதுமோராறுங்
கழிந்தவிடத்தென்னையெவண்காண்பேன் - கழிந்த

கருவிகளிற்சிவனெனக்காணுமதீதத்திற்
பரமசிவனீயுணரப்பார். (௨௬)

கேளாதனவெல்லாங்கேட்பித்தாயன்னைபோல்
மீளாதவாநந்தம்வேட்பித்தா - யாளுடைய
பிள்ளாயுனையன்றிப்பேய்த்தெய்வம்பேய்ச்சமயங்
கொள்ளேனவருரைக்குங்கோள். (௨௭)

சிந்தனையால்மாறாத்திரோதமலநீங்கிப்
பந்தமகன்றுபரையாகிச் - சந்திரனை
யொத்தாவிக்குள்ளவுறுதுயரமொன்றின்றிச்
சுத்தான்மாவாகித்தொழு. (௨௮)

புத்தகப்பேயேயிந்தச்சிற்றிலைக்கீழ்ப்போவென்ற
சித்தன்மொழியினூற்குச்சித்தாந்தம் - வைத்த
பரப்பெல்லாநீத்துப்பழையசிவத்தோன்றா
யிருப்பன்றோவாவிக்கியல். (௨௯)

எல்லாவுயிர்கட்குமின்பங்கொடுத்தலால்
எல்லாஞ்சிவனையேயெண்ணலால் - எல்லாஞ்
சிவனுருவேயாமாற்றெவிட்டாப்பேரின்பஞ்
சிவனுருவமென்றுணர்விற்றேர். (௩0)

ஆகாயந்தன்னையளக்கமரக்காலெடனை
வாகாயமம்மரக்காற்குள்ளிருக்க - வாகாயங்
கண்டாயேலந்தக்கருத்தேகருத்தாகிக்
கண்டாலதுவேகதி. (௩௧)

பவனமாய்ச்சோடையாயென்றபத்துப்பாட்டுஞ்
சிவன்றாளடைவோர்க்குத்தெப்பங் - கவலை
யுருவழியச்சொன்னவுபதேசமன்றோ
சொருபத்திருப்பாசுரம். (௩௨)

ஞானசம்பந்தன்சொன்னாடோறுமேத்துவா
ரூனசம்பந்தமுறாவொன்ற - ஞானமொழி
யொன்றும்போதாதோசொல்லுள்ளமேயெப்போது
நின்றதிருத்தாண்டகத்தினில். (௩௩)

சீர்பூத்தவேதச்சிரப்பொருளையெல்லா
மோர்பூத்திருக்கடையாப்பென்ன - நேர்பூத்த
திருஞானசம்பந்தன்சீர்பாததூளிக்
கருகணன்றியிலையாம். (௩௪)

சமயம்விசேடஞ்சத்தியநிர்வாண
மமைவிலபிடேகமாறு - லுமைபங்க
னாகமசித்தாந்தமறைநியஃதில்லாப்
பாகமுறார்க்கீயிற்பவம். (௩௫)

சிந்தனைவெண்பா-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதின்மூன்றாவது

## நிராமயவந்தாதி.

மெய்யைப்பொய்யென்றான்வெளியைநல்லவீடென்றான்
சைவத்துறைகாழிச்சம்பந்தன் - ஐயமற
நின்போதம்போமிடத்தேநீயேசிவமென்றா
னென்போதத்துள்ளேயிருந்து. (௧)

இருந்தபடியிருந்தாலிறையுருவந்தோன்றும்
பொருந்துமலமிம்மையிலேபொன்று - மிருந்தபடி
யேதென்றங்குன்னியிரண்டாட்டுவார்க்குண்டோ
போதமுண்டபிள்ளைபுகல். (௨)

புகலிக்கரசேயுன்பொய்ப்போதம்போனாற்
சகலமறுங்கேவலமுஞ்சாயும் - அகலாத
நல்வினையுந்தீவினையுநட்டமாமென்றுரைத்து
மொல்காவென்போதவொழுக்கம். (௩)

போதவொழுக்கமென்றுபொன்றுங்கொல்சம்பந்த
நாதனேயுள்ளபடிநாட்டுவாய் - பேதா
யறிந்தவறிவெல்லாநாமன்றறிந்திட்டாங்கே
செறிந்தறிவாய்நிற்கிலிறுந்தேர். (௪)

தேரிலதிதூரமெனச்சிந்தைவிடாதையென்று
ஓருருவாயினையென்றவும்ப - ஓரு
மறிவேயறிவென்றானவ்வறிவுக்கப்பா
லறியோமறிவையறிவால். (௫)

அறிவாலறியப்படும்பொருளேயாகிற்
பொறியாலறியப்புகாவோ - பொறியாரக்
கண்டதெலாமாயையெனக்கண்டித்தான்மெய்ஞ்ஞான
முண்டதிருச்செவ்வாயானுற்று. (௬)

உற்றுணரினீயெயுயர்பிரமமென்பதுவு
மற்றசிவன்றானாய்வகுப்பதுவு - முற்று
மிறந்தவிடத்திரண்டுமேகமேயென்றான்
சிறந்தசீகாழிவருதே. (௭)

தேவேதிருஞானசம்பந்ததேசிகனே
யோவிலெழுத்தஞ்சினையுமோதாய்கொ - லாவியார்
பின்னிரண்டைத்தள்ளிப்பிரியாதவானந்த
முன்னிரண்டைக்காணுதன்முத்தி. (௮)

முத்திநடனத்தைமொழிஞானசம்பந்தா
சத்திதிருவம்பலத்திற்றான்றானாய்ச் - சுத்தவுயிர்
காணமுயலகனைக்காலான்மிதித்தருளித்
தானுநடம்புரிவான்றான். (௯)

தானேசிவமானசத்தியஞானாநந்த
மோனநிலைசொல்காழிமுன்றோனே - ஞானிகடம்
முள்ளமாகாயமாயொன்றாயவானந்த
வெள்ளமாய்நிற்குமவர்மெய். (௧௦)

நிராமயவந்தாதி - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினான்காவது

## அறுபத்துநாலுசங்கை.

முதலாவது

### பதிசங்கை.

சிவன்தானோதெய்வம்? இதரதெய்வங்கள் தெய்வமன்றோ? வேதாகமபுராண கீதைகளெல்லாம், சிவனே தெய்வமென்று சத்தியமாய்ச்சொல்லும். அஃதன்றியும், வியாசபகவான் விட்டுணுவை தெய்வமென்று சொன்னநாவும் எடுத்தகையும் தம்பித்துநின்றதுவே சாட்சி.—இதனால், (வியாசமர்த்தநாயகமாக) என்றுசிவனுக்குப்பெயர் வந்தது; ஆனால், சிவனேபரதெய்வமென்பதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"சிவனையொக்குந் தெய்வந்தேடினுமில்லை"—எனவும்,

"சிவனெனயாவுந் தேறினன்காண்க"—எ-ம்,

"ஈசனையொப்பவர் தேவகணத்திடையாரேயோ"—எ-ம்,

"ஈசனையன்றி யினையொருதேவில்லை
பூசனையன்றிப் புறம்பொருநோன்பில்லை"—எ-ம்,

"சிவமேவம்பரந் தெய்வஞ்சிகாராயநமோநமஃ"—எனவும் வரும். (க)

சிவனுக்குத்திருமேனி உண்டோ இல்லையோ? உண்டென்றால் நம்மிலொருவர்; இல்லையென்றால் வேதாகமமில்லை; வழிபடுமாறுக் கருமில்லை; ஆனால்,திருமேனியுண்டானதெப்படி? தியானத்திருமேனி மந்திரத்திருமேனியுண்டு.இதற்குவசனமுண்டோ?உண்டு,--எப்படி?

"ஒருவயிற்றும்வாரா வுடம்புடையான்வந்தான்"—எ-ம்,

"வேதமொழி விசும்பு மேனிசுடர் விழிமண்
பாதந் திருப்பா திருப்புலியூர்-நாதர்
பரமாம் பரமாம் படுகடலெண் டிக்குங்
கரமா மவர்க் குயிர்ப்பாங் கால்"—எ-ம்,

"அருளே திருமேனி யான்மாத் திருமேனி
குருவே திருமேனி கொள்"—எ-ம்,

"சிவனுரு வருவுமல்லன் சித்தினே டசித்துமல்லன்"—
எனவும் வரும். (உ)

சிவன் ஆணே? பெண்ணே? அலியோ? என்னில், சொன்ன மூன்றும் அன்றென்பதே சித்தாந்தம்; ஆனல்,

"பெண்ணாகி யாணா யலியாய் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி"—என்று

வசனம் உண்டே என்னில்; அதன்பின்னே, "இத்தனையும்வேறாகி" என்று வசனம் உண்டாயிருப்பானேன்? ஆனல் ஒருபொருளுக் கிரண்டு தன்மையுண்டோ? உண்டில்லையென்பது இரண்டும் பெத்தமில்லை; இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"வாக்குமனமு மில்லாமனோலயந்
தேக்கியெனக்குச் சிந்தைதெளிவித்து"—எ-ம்,

"வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா வுணர்வாய தன்மையனை - நோக்கிப்
பிரித்தறிவு தம்முட் பிரியாமை தானே
குறிக்கு மருணல்கக் கொடி"—எ-ம்,

"வீணாய்ச்சுழலுமெனக் கொருஞான விழியளித்துக்
கோணகத்துள்ளொருகூத்தப்பிரானுண்டக்கூத்தப்பிரான்
ஆணவதுமன்றுபெண்ணவதுமன்றலியுமன்று
காணக்கண்கொண்டினிக் காணியென்றான்கச்சியேகம்ப
[னே"—எ-ம்,

"ஆணோவலியோ வரிவையோ வென்றிருவர்
காணக்கடவுள்"—எனவும் வரும். (௩)

ஆனல் அந்தச்சிவன் எங்கேயிருப்பார்? கயிலாயம், காசி, காஞ்சி முதலிய தானத்திலிருப்பார். நாமரூபமான்படியினல் முத்தி என்னமாய் முடியும்? ஆனல் எங்கும் வியாபி, சருவேந்திரியாமி, சருவபரிபூரணன், சருவலோகநாயகன், சருவசாட்சி, ஈஸ்வர சர்வபூதானமென்னும்வசனத்தால், சிவனெங்குமிருப்பதே சித்தாந்தமாயினும் பசுவுக்குப்பால், கால் கொம்பு, சரீரமெங்கும் இருந்தாலுந் தன்னியத்தின்

வெளிப்படுமாறுபோலக் கயிலைமுதலிய தானங்களிலேயும், சிவக்கி யானிகள் சித்தத்திலேயும், வெளிப்படுவர். இதற்கு வசனம் உண் டோ உண்டு, எப்படி ?

"பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர்
பட்டினத்துப் பல்லவனீச்சுரத்
தெங்குமாயிருப்பா ரிவர்தன்மையறிவாரார்"—எ-ம்,

"சிவனறிந்தருளுவன் சீவராசியை
சிவன்றனையறிந்திடாச் சீவராசிகள்
சிவனிலாவிடமிலைச் செடசித்தெங்கணுஞ்
சிவனிலாவிடிலுயிர் செகமற்றில்லையே"—எ-ம்,

"வானத்தா னென்பாரு மென்கமற் றும்பர்கோன்
றானத்தா னென்பாருந் தாமென்க-ஞானத்தால் [தா
முன்னஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்
னென்னெஞ்சத் தா னென்பன் யான்"—எ-ம்,

"விறகிற்றீயினன் பாலிற்படுநெய்போல்
மறையநின்றுளன் மாமணிச்சோதியா
னுறவுகோல்நட் டுணர்வுக்கயிற்றினான்
முறுகவாங்கிக் கடையமுன்னிற்குமே"—எனவும்
வரும். (ச)

ஆனால் அந்தச்சிவனுக்கு எண்குணமுண்டென்றால், ஒருகுண மும் இல்லாதவர் என்று வசனம் உண்டாயிருப்பானேன் ? இல்லையெ ன்பது பஞ்சகிருத்தியங் கடந்தவிடத்தில். ஆனால், எண்குணத்துக்கும் வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

"தன்வயத்தவன் றூயவுடம்பினன்
றனியற்கை யுணர்வினனாகுதல்
பன்னுமுற்ற வுணர்தலியல்பினன்
பாசநீக்குதல் பேரருளாகுதல்
மன்னுமீறில வாற்றலுடைமையும்
வரம்பிலின்பமு மாகியவெண்குண
மின்னதாகச்சை வாகமமோதுமெம்
மீசன்றனை யெப்போதும்வணங்குவாம்"—எனவும்
வரும். (ரு)

எல்லாஞ் சிவன்வசமாமோ? என்னில், திரிபுரவிசயம் பண்ணுங்காலைச் சருவமுந்தன்வசமாய்த் தான்மீதியாய் நின்றபடியினாலும், ஆலபோசனஞ் செய்தபடியினாலும், உயிர்க்குயிராய் நின்று தொண்ணூற்றாறு கருவிகளையுமியற்றுதலாலும்,

"சருவதத்துவாதிபதயே சிவாயநமஃ"—வென்று,

வசனம் இருத்தலாலும், தன்வயத்தனென்னும் குணந்தரும். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"அவனசைந்திடி லொருவனுமசைந்திடு
மவனசையாவிடி லணுவசைந்திடா
சிவன்சத்தியோ டுறிற்செகம்விரிந்திடுஞ்
சிவன்றனித்திடில் விரிசெகமொடுங்குமால்"—எனவும்
வரும். (௬)

தூயவுடம்பினன் என்றது எவ்வாற்றால் வந்தது? ஒருகருப்பாசயங்களிற் படாமையாலும், நரை, திரை, மூப்புமுதலிய இல்லாமையாலும், சர்வமும் அழிந்துந் தானழியாமையாலும், சிவன்நிர்மலதேகி என்று வேதமுறையிடுதலாலுமாம். இதற்குவசனமுண்டோ? உண்டு, எப்படி?

"யோனிவழி யேயுதித்து யோனிவழி யேயிளைந்து
யோனிவழி யேயொடுங்கு மூமர்காள்-யோனிவழி
வாரா வொருவனையே வந்தித்தால் யோனிவழி
வாரா வகையருளு வான்"—எனவும் வரும். (௭)

சிவன் இயற்கையுணர்வினன் என்பது எவ்வாறு? எனில், தெட்சணாமூர்த்தியாய்ச் சருவதேவர் முனிவர்கணங்களுக்கு முபதேசியா நின்றபடியினாலும், தசாவதாரத்திலே விஷ்ணுவுக்கு ஐந்து நிக்கிரகமும், ஐந்து அநுக்கிரகமும் பண்ணினபடியினாலும், சிவஞ்சத்தியாய் நின்று உயிர்களின் அறுதிகன்மங்களை அறிந்து ஊட்டிவிக்கையினாலும், எல்லாம் அறிந்துவேதமோதிவைத்தலினாலும், சூரியனைப்போல இயற்கைவுணர்வுதரும். இதற்குவசனமுண்டோ? உண்டு, எப்படி?

"அறிவிக்கக்குரவரில்லை யன்னையும்பிதாவுமில்லை
யறிவிக்கவயலொன்றில்லை யம்பலத்தாடியென்று
மறிவிக்குமம்மானேயென் றயனரிமுனிவரெல்லாஞ்
செறிவுடையடிமைசெய்வார்திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (௮)

சிவனுக்கு முற்றுணர்தல்வருமாறு எங்ஙனம்? என்னில், அண்ட ரண்ட பிரமாண்டங்கள்தோறுமுள்ள உயிர்களுக்குத் தனு, கரண, புவன, போகங்கொடுக்கையாலும், சிவதத்துவம், வித்யாதத்துவம், ஆத்மதத்துவமாக முப்பத்தாறுதத்துவங்கள்தோறும் நின்று அறிவிக் கையாலும், அளவிறந்த கண்களுக்குள்ள செய்தியெல்லா மங்கங்கே போயறியாமல், ஏகமாய்நின் றறிகிற சூரியனைப்போல, முற்றுமுணர் வன். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"எங்கணுமிருக்கையாலு மிருவினையருத்தலாலுஞ்
செங்கதிர்மதியமீனந் தேய்ந்திடமிகையாலுஞ்
சங்கையொன் றின்றியெல்லாந் தானறிந்திடுதலாலுஞ்
செங்கண்மாற்கறிகநீயே திருப்புலிவனத்துளானே"-எ-ம்,

"எங்குஞ்செவியுடையா யடியேற்கிரங்காயே"—எனவும் வரும். (சூ)

சிவனே பாசமோசகனென்றால் மற்றத்தேவதைகளுக்கு அடா தோ? என்னில், எவ்வழியானும் அடாது. இராஜாவின்கண்ணுக்கும் ஊழியக்காரன்கண்ணுக்கும், சூரியனிருளைத்துரப்பதுபோலச் சீவ ராசிகள், மனிதர், தேவர்முதலியகண்ணுக்குச் சிவாநித்தனை அன்றிப் பாசநீங்காது; ஆகையால், அநுக்கிரககாலத்தில் சிவனேமுன்னிட் டறிவிப்பன். தேவர்களுக்குஅநுக்கிரகம்பண்ணவர்ஆர்? தேவேந்திர னுக்கு அநுக்கிரகம்பண்ணவர்ஆர்? பிரமனுக்கு அநுக்கிரகம்பண்ண வர்ஆர்? விட்டுணுவுக்கு அநுக்கிரகம்பண்ணவர்ஆர்?உருத்திரமூர்த்தி க்கு அநுக்கிரகம்பண்ணவர்ஆர்? ஆகையாலெல்லாவநுக்கிரகங்களும் சிவனேயென்றறி. ஒருகுழந்தைக்கு ஒருகுழந்தை, இதுதீது இது நன்மையென்று சொல்லுவதுஞ் சிவாநுக்கிரகமெனக்கொள்க. இத ற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"பண்டொருகாலந்தன்னிற் பதஞ்சலிக்கருளிச்செய்தா
னண்டர்கோன்வழிபட்டேத்த வநுக்கிரகங்கள்செய்தான்
முண்டகன்றிருமால்போற்ற முத்திமோக்கங்கொடுத்தான்
டிண்டிறற்புலிபூசித்த திருப்புலிவனத்துளானே"—எ-ம்,

"ஆவுக்கும்புலிக்குமுன்ன மநுக்கிரகங்கள்செய்தா
னுவிக்கும்வலியனுக்கு நாகைக்குமருளிச்செய்தான்
மூவர்க்குமுனிவர்கட்கு முதுக்குறையறிநருக்குந்
தேவர்க்குமுத்திதந்தான் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (சு0)

சிவன் அருளோடு கலத்தலால் அவர் மகா காருண்ணியரோ வென்ருல், அஃதெவ்வாற்ருல்? வருமாறு, பன்றிக்கு இரங்கிப் பால்கொடுத்தமையாலும், ஆனைக்கிரங்கி யரியையேவினபடியாலும், சர்வஜீவதயாபரரானபடியாலும், காருண்ணியமென்பதற் கடையாளமாய் அத்தநாரியாகையாலும், இரக்கமெல்லாஞ் சிவகுணமேயாம். ஈயாமை, இரங்காமையெல்லாம் மலகுணமேயாம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"பரைவடிவீசற்கான படியினுற்பன்றிக்கன்றுக்
கருண்முலைகொடுத்தான்பின்னு மானைக்காயரியைவிட்டா
குருவடிவாகிக்கல்லால் குறுகினுறுதலாலே [ன்
தெரியருண்மூர்த்திபோலுந் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (கக)

சிவனுக்கு முடிவிலாற்றலுடைமை எங்ஙனம்? என்னில், இராவணனைச்சிறுவிரலால் ஊன்றியபடியாலும், விட்டுணு மேகமாய்த்தாங்கிப்பொறுக்கமாட்டாமல் வெட்கிப்போனபடியாலும், அன்றுதொட்டு மேகவாகன கர்ப்பமானபடியாலும், ஊழிகாலையில், சங்காரகர்த்தாவாய்ச் சர்வத்தையுந் தகிக்கிறபடியாலும், பூமியைச் சேடன், சேடனைக்கூர்மங், கூர்மத்தைக் காலாக்கினி ருத்திரராய்த் தாங்குகிறபடியாலும், அளவிறந்த பலமுடையாரென்பதற்கு ஐயப்பாடுண்டோ? இல்லை. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"அரக்கனைமிதித்தலாலு மரிவெட்கிப்போனதாலு
முருக்கனலாகியண்டம் யாவையுமொருக்கலாலுஞ்
சுருக்கமிற்புவியைத்தாங்கித் தூலமாயிருத்தலாலுஞ்
செருக்களவாற்றலுள்ளான் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும், (கஉ)

சிவனுக்குவரம்பி லின்பமுடைமைவந்த வழிகாட்டுமென்னில், ஈச்சுரன் இன்பமயனேயாம். எங்ஙனமென்னில், வேதம், வேத்தியம், ஆத்மா, அனுத்மா, திருக்கு, திரிசியம், இவற்றையறியாமற் சச்சிதானந்தமானபடியாலும், ஞாதுரு ஞான நேயங்களுக்கப்பாற் பட்டிருக்கிறபடியாலும், இன்பமெல்லாம் விளைகிறபூமியானபடியால் சம்பு என்ற நாமம்வந்தமையாலும்,

"சட்டோநினைக்கமனத்தமுதாஞ்சங்கரனை"—
என்றமையாலும்,

"நினைத்தோறுங்காண்டோறும் பேசுந்தோறெப்போது
மனைத்தெலும்புண்ணெக வானந்தத்தேன்சொரியும்"—
என்றமையாலும்,

முடிவில் இன்பமென்பதற்கையமே இல்லை.—அரிகரப்பிரமாதி, நாரதாதியிருடிகள், முனிகள், மனிதர், தேவர்கள், சர்வர்களுந் தியானிக்கிறபடியினால், சிவன்இன்பமயனேயாம். இன்பங்கொடுக்கிறவர், சிவனென்பதே வேதாகமசித்தாந்தம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"எல்லா வுயிர்கட்கு மின்பங்கொ டுத்தலினால்
எல்லாஞ் சிவனையே யெண்ணலால்-எல்லாஞ்
சிவனுருவே யாமாற் றெவிட்டாத வின்பஞ்
சிவன்பா லிருக்குமெனத் தேர்"—எ-ம்,

"இன்பத்துளின்பமாய் நின்னடியெய்தும்வண்ணம்
துன்பத்துட்டுன்பநீக்கித் துறவிகடேங்கிநிற்பார்
பொன்பதுமத்தோன்மாயன் புண்ணியதவங்களுறைப்பார்
செம்பதுமத்தாள்காட்டாய் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (கஅ)

ஆனால் இந்தச்சிவன் எங்கேயிருப்பார்? எங்கும் இருப்பரென்று முன்னமே சொன்னோமே. எங்கும் இருந்தால் எனக்குத் தெரியவில்லையே? எங்கும் இருப்பவர்; நின் அறிவிலேயும் இருப்பர். எந்த அறிவிலே? சுட்டறிவுகெட்ட சுகாதீத அறிவிலே. அந்த அறிவுவேறு நான் வேறோ? அந்தவறிவே நீதான். அந்த அறிவே நானாயிருந்தால் எனக்குத்தெரியாதோ? வெளிமுகமானபடியினால் தெரியாது. அகமுகமானால் தெரியுமோ? அகமாய்ப்பார்த்துப் பின்பு கேள். ஆனால், அந்த அறிவுவேறுதானோ? அனுபவித்தால்தெரியும். அனுபவித்தவர் உண்டோ? உண்டு, அவர்கள்யார்?சுகர், வாமதேவர், திருமூலர், நந்தி, சிவவாக்கியர், அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், சடகோபர், பட்டினத்தார், பத்திரகிரி முதலியமகத்துக்கள் எல்லாம் அனுபவித்தவர்கள்; தின்றபண்டந் தேக்கிட்டாற்போல, அவர்கள் வாக்கியங்கள்காட்டும். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"சுகன் வாமதேவன் றுருவா சன்காதி
மகன்விதுரன் வெண்காடன் மாறன்-சகமாண்ட

பத்திரகிரி வான்மீகி பற்றற்றே முத்தியினை
யுற்று ருருர்க்கிவ ரொப்பார்''—எ-ம்,

''சிவனைநான் சிந்தையுட்கண்டவாறே''—எ-ம்,

''தேடிக்கண்டுகொண்டேன் றிருமாலோடு நான்முகனும்
தேடியுந்தேடொணாத் தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன்''—எ-ம்,

''உள்ளத்தினுளியைக் கண்டதுள்ளமே''—எ-ம்,வரும்.

அறிவுக்கறிவாய் நிற்கின்றசிவம் எனக்கேன்தெரியவில்லை?பஞ்ச பாசமறைப்பு. நான் அறிவானால் எனக்கேன்மறைப்பு ? சிற்றறிவா னபடியினாலே ; இந்தச்சிற்றறிவுபேரறிவாமோ ? ஆகும். எப்படி ?

''ஓங்காரமான கலசத்தமுதுண்ணிற்
போங்கால மீசனே யாம்''— என்று,

வசனம் இருக்கிறபடியினாலே பேரறிவாம், ஆகிறத்துக்கு எது எத்தலாம் ? மாமிசபிண்டம், மந்திரபிண்டமாய்த் தேகம் இந்திரியம் அந்தக்கரணம் பிராணவாயு இந்தயேழுபாதியும் நீங்கினால்பேரறி வாகி, அச்சிவனைக்காண்பாய். இதற்கு வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

''பிண்டமாமுடனல்லேன் பிராணவாயுவுநானல்லேன்
கண்டவிந்திரியநானல்லேன் கரணமோர்நான்குமல்லேன்
பண்டையவறிவேநானெனன் றுணர்தருபருவம்வாய்ப்பின்
வண்டறைகொன்றைத்தாரான் மலரடிகாணலாமே''—
எனவும் வரும். (கரு)

---

இரண்டாவது
## பசுசங்கை.

ஆத்மாக்கள் அளவிறந்ததென்றால் அளவிறந்தகாலம் அளவிறந்த உயிரும் முத்தியடைந்தும் ஒழியாமல் நிற்பானேன் ? இந்த ஆத்மா க்கள்பிறந்த இடந்தெரிந்தால் அந்தச்சங்கை ஒழியும்,

''நரியைக்குதிரைசெய்வானும்''

''சித்திலாதபோதுசிவனில்லை''—என்னும்,

திருவாக்கானும், அகமுகமாய்த்தியானசமாதியில் தன்னைப்போ க்கித் தானதுவாய் நிற்பின், அந்த நுட்பந் தெரியும். இதற்கு வசன முண்டோ ? உண்டு, எப்படி ?

"பாவமுமறமுமொத்துப் பக்குவம்பருவமுற்றிங்
காவியைம்புலனைப்பற்ற தகமுகமாகியென்று
மோவியம்போலநின்றங் குணருணராமைபோக்கிச்
சீவனுஞ்சிவனும்வேறு திருப்புலிவனத்துளானே" —
எனவும் வரும். (கசு)

ஆத்மாவிலே சிவன் எப்படியிருப்பர்? பூவும் வாசனையும்போலே இருப்பர். அத்தனை சமீபமானால் தெரியாதிருப்பானேன்? விடயவாதனையாலே. விடயமின்றிப்பார்த்தால் தெரியுமோ? உன்னைப்போலே வெகுபேர் பார்த்து,

"கரியன்கொல் செய்யன்கொல் காண்கின்றிலேனே" —
என்று,

அலர்தூற்றினர். ஆனால், காணப்படாதபொருளோ? அன்று; காணும்பொருளோ? அன்று; பின்னைத்தானெவ்வழி? பார்க்கவேண்டுமென்னும் பசை யற்றால் அன்றைக்குச் சொல்லுவேன். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"பாசபத்ததேசிவா பாசமுத்தேசதாசிவா" — எ-ம்,

"நிறையறிவாயிருந்து நின்மலன்றன்னைத்தேடி
மறைமுதனூலாராய்ந்து பின்னருமயங்குந்தன்மை
யிறைவனேயெனக்குநாக்குண் டில்லையோவென்றுகேட்க
வறைவதுநாக்கேயென்ன வகந்தெளியானைப்போலும்" —
[எ-ம்,

"வாக்கினன்மனத்தினன் மதிக்கொணாதசோதியைப்
பார்க்கவேணுமென்றலோ பலதிசைகளோடுவீர்
நோக்கிலாதநோக்கைநோக்கி நோக்கிநிற்கவல்லிரா
னோக்கிலாதநோக்குவந்து நோக்கநோக்கநோக்குமே" —
எனவும் வரும். (கஎ)

ஆத்மாவுக்குள்ளே சிவமும், சிவத்துக்குள்ளே ஆத்மாவும், சமவாயசம்பந்தமா யிருக்குமென்று ஆகமங்கள் சொல்ல, பஞ்சபாசங்களும் ஆத்மாவை மறைக்குமென்பது எப்படி? என்னின், ஒரு கடத்திலே நீர்விட்டு எரிக்குங்கால், அதிலே ஆகாசம் வியாபகமா யிருந்தும் அந்தத்தீ நீரைச்சுடுமென்றி ஆகாசத்தைச்சுடுமோ; ஆனால், ஆத்மா கண்டிப்போ? அன்று; அகண்டமென்று கண்டால் அந்தச்சங்கை

யில்லை. ஆத்மாவும் அகண்டமும்,சிவமும்,அகண்டமானல்பஞ்சபாசம் பின்னை யாருக்கு? இந்த விவேகமில்லாதவர்களுக்கு. இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"ஒழிந்தேன்பிறவி யுறவென்னும்பாசங்
கழிந்தேன்கடவுளு நானுமொன்றானே
னழிந்தாங்கினிவரு மாக்கமும்வேண்டேன்
செழுஞ்சால்புடைய சிவனைக்கண்டேனே"—எனவும்
வரும். (கஅ)

சிவத்துக்கு ஒப்பு சூரியன், ஜீவனுக்கு ஒப்பு படிகமலை, பாசத்து க்கு ஒப்பு பஞ்சவன்னங்கள். இப்படி அனாதிதொடுத்து இன்றை வரையும் சிவம் உன்னைவிட்டுப் பிரியவில்லை. இந்த ஆத்மலாபத்தை நான் எப்படி மறந்தேன்? சற்சங்கதி, சன்மார்க்கசந்ததி, சிவாகமசம் பாடணம் இல்லாமையால் மறந்தாய். இப்போது குருதரிசனத்தால் எல்லாங் கிடைத்ததென்றறி. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"சுத்தப் படிகமுச்சிச் சூரியனைச் சந்தித்தா
லெத்தன்மைத் தத்தன்மை யீசனிலை-யுற்றுற்றுப்
பாரா தவர்க்குப் பவமும் பலபிணியும்
போராடு மெஞ்ஞான்று போம்"—எனவும் வரும் ()

ஜீவசம்பந்தம் எனக்கெப்படிவந்தது? ஜீவத்துவம் நீங்கிச் சிவ மெப்படியாவேன்? ஜீவசம்பந்தம் அறியாமையாலே. சிவசம்பந்தம் அறிவாலே. அந்த அறியாமை எங்கேபிறந்தது? உன்னிடத்திலே. ஆனல்,என்னை மறைத்த இருளை யான் அறியாமற்போகவேண்டியது என்னை? இந்த அஞ்ஞானத்தை என்றைக்குக் கடப்பேன்? இந்த மாயையாலே மூடுபட்டேன்! இந்த கர்மம் என்னை விடவில்லையே! என்பதனல் அறிந்தாயோ யில்லையோ. ஆனல் அறிவு எங்கேபிறந் தது? உன்னிடத்திலே. அறியாமையும் அறிவும் ஒருசம்பந்தமாய் இரு க்குமோ? இருக்கும். எப்படி? ஒரு கடலிலே விடமும், அமுதமும், பிறந்தாற்போலவும்; ஒருமரத்திலே ஈரமும், நெருப்பும், பிறந்தாற் போலவும்;ஒருகண்ணிலே கொடுமையும்,கிருபையும்,பிறந்தாற்போல வும்; உன்னறிவிலே அறியாமையும், அறிவும், ஒன்றாய்ப்பிறந்ததைக் கண்டுகொள்ளுதி. அந்த அறியாமை எதனால் இறந்தது? அறிவு மேலீட்டாலே. அந்த அறிவு எவ்வண்ணம்? நான் எவ்வண்ணம்? அத்தை இரண்டாட்ட இடமில்லை. ஆனற்போம்வழியாது? (அறிவுஞ்

சிவனுமொண்ணு அல்லவென்கிறவன்வாயில் மண்ணு) என்கிற உலகவசனமே சாட்சி. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"ஆணவமேலிடவாருயிர் கீழிட்டடங்கிநிற்கு
மாணவங்கீழிடவாருயிர் மேலிட்டருளுருவாம்"—எ-ம்,

"அறிவென் றறியாத வாணவமே ஞானச்
செறிவாய வென்னைநீ தீண்டற்க-வறிவாய
வென்னைச் சிவமாக்கி யென்னறிவி லெக்காலும்
பின்னமற நின்முன் பிரான்"—எனவும் வரும். (உ0)

ஆத்மாவுக்கு அனாதியிலே மலசம்பந்தம், செம்புக்குக் காளிதம்போலும், கடலுக்கு உவர்போலும், நெல்லுக்கு உமிபோலுமான தென்னில், ஆத்மா அறிவென்றால், மறைக்குமோ? சிற்றறிவானபடியினாலேமறைக்கும்; ஒளியை இருள் மறைக்குமோ? மறைக்கும். சந்திராதித்தர்களை, இராகுகேது மறைக்கிறதுபோலும்; நெருப்பை ஈரம்மறைக்கிறதுபோலும்; ஆகாசத்தை, மலைமறைக்கிறதுபோலும். ஆனால், இந்தமறைப்புத்தான் வருவானேன்? நீபண்ண கன்மத்தால். நான்அவயவம் இன்றிநிரவயவமா யிருக்கக்கன்மத்தை எப்படிச்செய்தேன்? நிரவயவன் நானென்பதைமறந்து, அவயவம் நானென்னுங் கருத்தாற் கன்மம்வந்தது, அந்தக்கன்மத்தால் மாயையுண்டாச்சுது, இந்தமாயையால் சர்வபதார்த்தமும் உண்டாச்சுது. இதுபோமாறு? சிற்றறிவாகிய நீ,பேரறிவாய்நின்றால்பசுபாசம் இல்லை. இதற்குவசனமுண்டோ? உண்டு, எப்படி?

"அறிவுருவாயவென்னை யாணவமாதிகூடிப்
பிறிவறியாதநின்னைப் பிறித்துத்தான்முழுதுமாகி
நெறியினைமறைத்துப்பொல்லா நீசருக்கடிமையாகிச்
செறியிருணின்றதென்னே திருப்புலிவனத்துளானே"
—எனவும் வரும். (உக)

சிவமேகுருவாய் வருமென்னில் விரோதஞானமாம்; உங்கள்சிவனுக்குக் காலுங் கையும் உண்டோ என்னுந் தர்க்கம்வரும்.

"குருவேசிவமெனக் கூறினனந்தி"—என்று,

வசனம் உண்டாயிருப்பானேன்? ஆனால், சிவனைக்குருவெனனச் சிந்தியேலந்த அவமதியா லாழ்வைநிர்யத்து-என்று வசனம் இருப்பானேன்? ஆனால், இதற்குவாயில்லை. இனிப்போமாறு? சிவஞானிகளை

அதிட்டித்துக்கொண்டு அநுக்கிரகம் பண்ணுவர். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"அறிவுக்கறிவா யறிவிப்பான்சில்லோர்க்
கறிவுருவுகொண் டருளுவான்"—எ-ம்,

"ஆட்டுவித்தா லாரொருவராடாதாரோ
காட்டுவித்தா லாரொருவர்காணாதாரோ
காண்பாரார்கண்ணுதலாய் காட்டாக்காலே"—எனவும் வரும். (உஉ)

பதிதான், அநாதிபசுவும், பாசமும், அநாதியோ? சூரியன் உள்ளபோதேகண்ணும் அநாதி. கண்ணைமறைத்த இருளும் அநாதி. பதிதான் நித்தியம், பசுவும்பாசமும் நித்தியமோ? ஆதித்தன் உள்ளபோதேகண்ணும், கண்ணைமறைத்த இருளும் நித்தியம். ஒன்றுக்கே நித்தியப்பட்டம் அன்றி மூன்றும்நித்தியமோ? வென்னில், சிவனறிவிலே சீவனறிவு கலக்கப்பண்ணிப் பிரபஞ்சத்தை மறைக்கிறபடியினாலே, பாசத்தைநித்தியம், அநாதியென்றது. ஆனால், இது துரியமாச்சுது. துரியங்கடந்த விடத்திலே ஆகமமும் எனக்கெட்டாதென்று சொல்லும்; வாழையடி வாழையாய் உலகத்தைமறைக்கலால், அநாதியென்றும் ஆகமத்துக்குவிரோதமில்லை. வேதாந்தம் ஒன்றேயென்று சாதிப்பானேன்? அடியேனுக்கு அதுதெரியவில்லையே? தெரியப்படுத்துமென்றுகேட்கத் தேவையில்லை. வேதம்விரோதஞ்சொல்லுமோ? சொல்லாது. உன்போதம்போனால் எல்லாம் அவிரோதமாம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"சுடரொளியானென்றுமுள னன்றளவும்யாதுமுளனாகி
நின்றநிலையிற்றரித்து நில்லாமல்"—எ-ம்,

"பதிபசுபாச மெனப்பகர்மூன்றும்
பதியினைப்போற்பசு பாசமநாதி"—எ-ம்,

"அறிவறிவென்ற வறிவுமநாதி
யறிவினைக்கட்டிய பாசமநாதி
யறிவுக்கறிவாம் பதியுமநாதி
யறிவுபதியிற் பிறப்பறுந்தானே"—எனவும்வரும்.

ஆத்மா ஒன்றென்று வேதாந்தஞ்சொல்ல, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரொன்று அனேகமாக ஆகமஞ்சொல்லுவானேன்? வேதவழிபோனவன் ஆகமவழியிற்போகான்; வடக்கேபோகிறவனுக்

குக் காவேரிமகத்துவந்தெரியுமோ ; தெற்கே போகிறவனுக்குக் கங்கைமகத்துவந் தெரியுமோ ; அப்படிபோல்,

"முத்திபலவும்பகர்ந்தோம் பக்குவத்துக்கீடாய்"—

என்பதைப்பற்றில், சமுசயநாத்தி. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"ஒன்றதேபேரூர் வழியாறதற்குள்"—எ-ம்,

"ஒன்றென்றுசொல்பவர்சொன்னாலுஞ்சொல்லுகவோவிரண்டா,மென்றென்றுசொல்பவர் சொன்னாலுஞ்சொல்லுகவேத்தியன்பர், சென்றன்றுநல்குசிற்றம்பலநாடிசிரபுரத்தோ, னன்றென்றிதாமென்று சொல்லாதமுத்தியளித்தனனே."    ()

வேதம், வேதாந்தம், வேத்தியம், வேதமகாவாக்கியம், வேதாந்தமகாவாக்கியவிசாலம், வேத்தியப்பிரமம்; இப்படி, வேதபண்டிதாள் வெகுமுகமாகச்சொல்ல, ஆகமவாக்கியமே பிரதானமென்று முற்சொல்லிய வேதத்தை நிந்திப்பானேன் ? தத்துவமசி, சித்துவமசிக்கும், அது நீயானாய்,சிவம் நீயானாய், என அர்த்தம் ஏகமே ; இதற்கு அத்தாட்சி ; அங்கயற்கண்ணி, மீனாட்சி, இடைச்சி, கோணிச்சி, வெள்ளிமலை, ரசிதமலை, காஞ்சி, கச்சி, காசி, வாரணாசி, வெண்காடு, சுவேதவனம்,வேதாரண்ணியம்,மறைக்காடு. இதற்கு வசனம் உண்டோ ? உண்டு, எப்படி ?

"அதுவேநீ யாணையென் றருமறைகள் சொல்லு
மெதிர்சிவனே நீயானு யென்னு-முதுநூலும்
வேறுவே றன்றுசொல் வேதியனே விண்விசும்பும்
வேறுவே றன்று விளம்பு"—எ-ம,

"தன்னைவிட்டொரு தற்சிவந்தேடியே
பின்னையில்லுருப் பெற்றியைநாடியே
மன்னுமாலையுங் காலைவழிபட
வன்னையில்லுரு வாகுவனானையே"—எனவும் வரும் ()

ஆத்துமாவே சிவமென்பது சித்தாந்தமானால், சிவமென்றும், பிரமமென்றும், அரிகரப்பிரமாதியென்றும் பலவாய் வருவானேன் ? உபாசிகள்,உபாசனையால் வேறுவேறாயின. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி ?

"காவேரியொன்று கால்வாய்நூற்றெட்டு
மண்ணொன்றுபாண்டம் வரும்பலவாகி
விண்ணொன்று ஆகாயம் வேறுவேறாகு
மாவியுமிவ்வண மாய்ந்துகொள்வீரோ"—என்று,

வசன மிருக்கிறபடியினாலே சங்கையில்லை. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"என்னகத்துளென்னைநா னெங்குமோடிநாடினே
னென்னகத்துளென்னைநா னறிந்திலாமையானதா
னென்னகத்துளென்னைநா னறிந்துமெய்தெளிந்தபின்
என்னகத்துளென்னையன்றியாதுமொன்றுங்கண்டிலேன்"
—எனவும் வரும். (உசா)

இவன் அறிவு, சிவன் அறிவிலே கலந்தால் மலம், மாயை, எக்காலும் இல்லையா? இல்லை. எப்படியில்லை? மத்தியான சூரியனை அத்தராத்திரி மறைக்குமோ; நீரிலே முழுகினவனை நெருப்புச் சுடுமோ; மச்சுவிளக்கை வாயு அலைக்குமோ; அதுபோலாமென்று அறி. ஒருகாலஞ் சிவன் கலந்ததென்றால், ஒருகாலம் பிரிந்ததுண்டோவென்னு மாற்றம் வருமேயென்னில், குருடனுக்குக் காசத்தடைமாத்திரமேயன்றி, அவன் கண்ணுக்கு பிரகாசம் ஒருகாலம் வரவுபோக்குநாத்தி. ஒளியிருந்தால் மறைப்பு வருவானேன்? அப்பிரகாசமாயிருக்குங் காசம் நீங்கப்பிரகாசிக்குமெனக்கொள்க. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"குருடர்க்குமுன்னே குடிகொண்டிருந்ததென்
கோலமல்கு"—எ-ம்,

"அறிவுங்கரணமும்போ யானந்தபூரணத்தைக்
குருடன்விழியொளிபோற் கூடாமற்கூடினமே"—என
வும் வரும். (உஎ)

உடலுக்கு - மூலம் இந்திரியம்; இந்திரியத்துக்கு - மூலம் பிராணன்; பிராணனுக்கு-மூலம் கரணம்; கரணத்துக்கு-மூலஞ் சீவன்; சீவனுக்கு-மூலஞ் சிவன்; சிவனுக்கு-மூலஞ் சிவனே. இச் சிவனே இவைகளைப் பிரேரிக்கிறபடியினாலே, சிவன் அல்லாதது எல்லாஞ் சிவன்போலத் தோற்றும்; ஆகையால், எல்லாஞ் சிவம் என்பதும், நானே பரப்பிரமமென்பதும், இக்கருத்தைப்பற்றி வந்தன. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"உடம்பினைச்சிவமேயென்ப ருடம்பிற்குமூலமோரார்
திடம்படுபிராணன்றனே கத்தனென்றுரைப்பரஞ்சு
மடம்பெறுமிந்தியத்தை மதியென்பரிவைக்குமூலந்
திடம்படநின்னைக்காணர் திருப்புலிவனத்துளானே"—(உஅ)

எனவும் வரும்.

தத்துவ முப்பத்தாறும் ஆத்மாவுக்கு விடயஞானம். இந்தத் தத்துவம் ஆத்மா அல்ல. ஆத்மதத்துவம் அசுத்தமாயை. வித்தியாதத்துவம் அசுத்தாசுத்தமாயை. சிவதத்துவஞ் சுத்தமாயை. ஆத்மதத்துவம்நட்சத்திரங்களைப்போல, வித்தியாதத்துவஞ் சந்திரனைப்போல, சிவதத்துவஞ் சூரியனைப்போல, ஒருமாயையிலே மூவிதமாயிருப்பதெப்படி? அத்தாட்சி, கருப்பஞ்சாற்றிலே வெல்லம், சர்க்கரை, கற்கண்டு உண்டானாற்போலவும்; மண்ணிலே இரும்பு, வெள்ளி, பொன்னுண்டானாற்போலவும்; இப்படிமும்மாயையும் ஒன்றுக்கொன்றுமேலீடுகாண்க. இந்த மும்மாயையுமே முப்பாழுமானபடியினால் தத்துவாதீதன் ஆத்மாவென்று வேதஞ்சொல்லும். இந்தத் தத்துவத்தோடே ஆத்மாக் கூடுவானேன்? கூடாவிட்டால் பஞ்சகிருத்தியம் இல்லை. பஞ்சகிருத்தியம் இல்லாவிட்டால் என்ன? உன்னைக்கேட்டோ ஈசுரன் பஞ்சகிருத்தியம் பண்ணுவான்; ஈசுராக்கினை அறியப்படாதென்பதே சித்தாந்தம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"பூதமுங்கரணம் பொறிகளும்புலனும்
பொருந்தியகுணங்களோர் மூன்று
நாதமுங்கடந்தவெளியிலே நீயுநானுமாய்
நிற்குநா ளுளதோ"—எனவும் வரும். (உகூ)

ஆத்மா, சுதந்தர ஈனன். தத்துவஞ்செடம், செடத்தையுஞ் சித்தையுங் கூட்டிவைக்கிறவர் சிவன். இந்தச் சிவன், ஏன் செடசித்தைப் படைத்தார்? திருவிளையாட்டு. செடமுஞ் சித்துஞ் சிருட்டிக்குமுன்னே, எப்படி யிருக்கும்? பழைய பரமசிவமா யிருக்கும். ஆனால், எல்லாஞ் சிவமென்னலாமோ? அதுக்குச் சந்தேகமில்லை. ஆனால், ஆண்டவன் அடிமையில்லையோ? அனுபவித்துப்பார். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"நன்றுகண் டரிது நமச்சிவாயப்பழந்
தின்றுகண்டார்க்கது தித்திக்குமாறே"—எ-ம்,

"அனுபவத்தறிவதன்றி யளவையாலறியக்கூடாச்
சனகனைச்சாக்கிசொன்னாற் சருவருமொப்புக்கொள்வர்

மனமொருபாலேவிட்டுன் மலரடிநோக்கும்வஞ்சர்
இனமலரிடினும்வேண்டாத் திருப்புலிவனத்துளானே''-
எனவும் வரும். (௩௰)

ஆத்மாவை யெப்படி யறியப்படும்? ஆத்மாவே பிடிபடாமற்போனால் சிவம் எப்படிப் பிடிபடும்? சோத்திராதியால் சத்தாதிகளை யறியப்படுதலாலும், உசுவாசம் நிசுவாசம் வாங்கிவிடுகிற படியினாலும், சந்திராதித்தர்கள் தோன்றி யொடுங்குகிறபடியினாலும், இதற்கெல்லாம் பிராணதாரியா யிருக்கிறவனே ஆத்மா. இந்த ஆத்மாவைவிடச் சிவமில்லையோ? விலாங்கு சம்பந்தம்போல உண்டு. அதெப்படி?

''ஆமடிகெட்டேனே-பாம்படி
யல்லடிகெட்டேனே விலாங்கடி''—என்பதுபோல,

வெகுமுகத்திற் சீவனும், அகமுகத்திற்சிவனும் தோற்றும். இந்த வித்தை நானெங்குங் கண்டதில்லையென்னில், வேதாகம வீதியிலேபோனாற் காணலாம். இதற்கு அத்தாட்சி,

''ஆமடிகெட்டேன் பாம்பீதன்றுகெட்டேன்
விலாங்கென்னுமோ குடியம்போலுமுளன்''—எ-ம்,

இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

''காதெவனாலேகேட்குங் கண்ணெவனாலேகாணு
மோதுநாவெவனாலுண்ணு முடலெவனாலேயோரு
மோதுமூக்கெவனன்மோக்கு மூச்செவனாலேயோடும்
போதெவனாற்போய்மீளு மவனடிபோற்றுகிற்பாய்''—
எனவும் வரும். (௩௧)

ஏகமோ, துவிதமோ, அத்துவிதமோ, சிவ சீவநாத்தியோ, முத்திநிச்சயார்த்தம் எப்படி? என்னில், ஏகமென்றால், ஆண்டவனடிமை என்கிற குணம் வரத்தேவையில்லை. துவிதமென்றால் அயிக்கமுத்தி கூடாது. கலப்பென்னின், ஒருவீட்டிலிரண்டு பயித்தியக் காரரில்லையென்பதேயாம். சிவனுமில்லை சீவனுமில்லையென்னில், அனீச்சுரவாதியாய் முடியும். ஆனாற் போம்வழி? (கிட்டையிலே நட்டமானேன்) என்னு மகாவாக்கியத்தாற் காண்க. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

''நீரிடைமுழுகினே னிறையவுண்டவன்
வாரமிருமதன் போன்றுமாமயன்

தீர்சிவயோகத்திற் றிளைத்திருப்பர்க
ளாரவர்பெருமையை யளக்கற்பாலரோ''—எ-ம்,

"அண்ணலுமுயிரும் வேறெனவறைந்தா லயிக்கியமுத்தி கூடாவா, லண்ணலுமுயிரு மொன்றெனவறைந்தா லாண்டவனடிமையின்றாகு, மண்ணலுமுயிரு மிரண்டலவொன்று மன்றெனினீயுறவாகு, மண்ணலுமுயிரு நாத்தியென்றுரைக்கி லனீச்சுரவாதிநீயாமால்''—எனவும் வரும். (௯௨)

ஆத்மா சுதந்தரபோதனோ? வசுதந்தரபோதனோ? என்னில், ஆகமம் முத்தியில் சுதந்தரபோதனென்று சொல்லும். வேதம் பெத்த முத்தியிரண்டிலுஞ் சுதந்தரபோதனென்று சொல்லுமானால், சுபாவ சித்தாந்த மேதென்னில், அனுபவத்திற் காண்க. முன் சொன்ன வேதாகமஞ் சொல்லவில்லையோ? என்னில்,தற்போக்கே சிவம் தான் இல்லாமையே யதற் கடையாளமென்றும், அகந்தத்துவா சுபவா வென்றும் சொல்லும். ஆனால், அது தெரிகிறவழி எப்படி? என்னில், உன் சித்தம் ஈசுரத்தியானத்தில் அழுந்தினால் அன்றைக்குத் தெரியும். தெரிந்துவந்து, உலகர்க்கு உபதேசம் பண்ணக்கடவோமென்னும் ஆசையை விடக்கடவாய். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"காணாதகாட்சியைக் கேளாதகேள்வியைப்
பூணாதபூணைப் போற்றுதுநாமே''—எ-ம்,

"அனுபவத்தன்றிவேறறியொணா
விறையுடனம்புலீயாடவாவே''—எ-ம்,
யணுவினுக்கணுவதாய்நின்ற
நேர்மையையறிந்தம்புலீயாடவாவே''—எனவும்வரும்.()

---

மூன்றாவது

## பாசசங்கை.

ஆணவமலத்துக்கு அனேக சத்தியும் சிவனுக்கு இரண்டு சத்தியுமாயின், ஆணவமுயர்ந்து சிவந்தாழுமோ? என்னில், சிவந்தானறிகிற சத்தியொன்று, சருவாத்மாக்களுக்கும் அறிவிக்கிற குணசத்தியொன்று. ஆணவத்துக்கு அனந்த சத்தி அனந்தாத்மாக்களை மறைக்கிறபடியினாலே, பெருங்குலத்தானென்னும் பேர் புலையனுக்கு வந்த

மையால், அவனுயர்ந்தானோ இல்லை. அதுபோலவா மென்றறி. இதற்கு வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

"சிவத்தினுக்கிரண்டுசத்தி திமிரத்துக்கனந்தசத்தி
சிவத்தினுக்குயர்ந்ததென்பர் தெளிவிலாமாந்தரெல்லாஞ்
சிவத்தின்றன்றன்மையெல்லாந் திமிரமேமறைத்தலாலே
சிவத்தினையறிந்தோர்போற்றுந்திருப்புலிவனத்துளானே"

—எனவும் வரும். (கூச)

இந்த ஆணவமலம் அருவமோ ? உருவமோ ? இரண்டுமல்ல. உருவமென்னிற்கண்ணுக்குத் தெரியவேண்டும். அருவமென்னின் மறைக்கமாட்டாது. பின்னைத்தான் போம்வழி ? பாசம் உண்டென்று முன் சொன்னதும், ஆசாரியன் இல்லையென்று பின் சொன்னதும், ஆசாரியன். இதற்கு வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

"அறிவறியாமைதன்னை யன்றுநானறியேனின்றுங்
குறியுறக்காணேனின்றன் கூத்தாட்டலிருந்ததென்னே
மறிமழுக்கரத்தாயுன்றன் மலரடிகாணநோக்கிச்
செறிபலமுனிவர்போற்றுந் திருப்புலிவனத்துளானே"

—எனவும் வரும். (கூரு)

இந்த ஆணவமாதிய பஞ்ச பாசங்களும், நித்தியமென்று சிவாகமஞ் சொல்லுமெனில் கூடாது. எப்படி ? ஒரு வேதம் பஞ்சபாசங்களும் அநித்தியமென்று சொல்லிற்று ; பின்னொருவேதம் கானற்சலம் போலத் தோற்றரவு மாத்திரமேயென்று சொல்லிற்று ; பின்னொரு வேதம் ககனாரவிந்தம், வந்தியாபுத்திரன், சசவிஷாணம்போல அனுபவத்திலே பஞ்சபாச மில்லையென்று சொல்லிற்று ; நாலாம் வேதம் மாயையேயில்லை, இருக்கிறதெல்லாம் பிரமமேயென்றுசொல்லிற்று ; அட்டாவக்கிரகர் தன்குய்வயிற்றிலிருந்துகொண்டுதகப்பனைநோக்கி, (எல்லாம் மாயையென்கின்ற வாய் எல்லாம் பிர்ம்மமென்று சொல்லாதோ)—வென்று, திருவுளம் பற்றினபடியாலும், பஞ்சபாசங்களு மில்லையென்பதே சித்தாந்தமென்னில் ; உண்டாயிருந்த தென்பது வரத்திரியும். ஆகையால், இல்லை யுண்டென்பதிரண்டும் அனுபவத்திலே தோன்றுமென்பதே சித்தாந்தம். விபகாரத்துக் கொப்பக் காட்டென்னில், அனுபவம் விபகாரத்துக் கெட்டாது. இதற்கு வசனம் உண்டோ ? உண்டு, எப்படி ?

"இல்லையெனுமாயையி விட்டெனைநீ
பொல்லேனறியாமை பொறுத்திலையே"—எ-ம்வரும்.()

மலம், மாயை, கன்மம், ஒருகுணமோ ? பலகுணமோ ? மலம்-மறைக்கும் ; மாயை-விளக்கும் ; கன்மம்-விகாரப்படுத்தும். மலம் அறிவை மறைக்குமோ? மனத்தை மறைக்குமோ? மனத்தைத்தான் மறைக்கும். அறிவை மறைக்குமென்று வசன மிருப்பானேன் ? மனமும் அறிவின் சம்பந்தமானபடியினால் அங்ஙனஞ் சொல்வாருமுளர் ; செனனமரணப்படுவெது மனந்தானோ? ஆத்மாவோ ? ஆத்மாதான். செனனமரணப் படுவதென்றால், அனுபவி யொப்புக்கொள்ளான். செனனம் - கருவியிற்றோய்தல் ; மரணம்-கருவியைநீங்கல் ; நரகம்-ஆயாசம் ; சொர்க்கம்-அநாயாசம். இதற்கு வசனமுண்டோ ? உண்டு,எப்படி ? சுருதிசார முற்றிலுங்காண்க. (கஎ)

இந்தக் கண் நானல்ல ; கண்-சடம் ; நான்-சித்து ; கண்ணைக் கொண்டறிகிறது-மனம் ; மனத்துக்குச்சாட்சி-நான் ; கண்ணும்-விடயமும் - மனமும்-மாயை, நான்-அறிவு, என்பெயர்-ஆத்மா. இதற்கு வசனம் உண்டோ ? உண்டு, எப்படி ?

"கண்ணெவனாலேகாணும்"—எ-ம்,

"காளத்தியானவனென் கண்ணுளானே"—எ-ம்வரும்.()

இந்தச் செவி நானல்ல ; செவி-சடம் ; நான்-சித்து ; செவியைக்கொண்டறிகிறது-மனம் ; மனத்துக்குச்சாட்சி-நான் ; செவியும் விடயமும்-மனமும்-தூலம் ; நான் சூக்குமம், என்பெயர் ஆத்மா. இதற்கு வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

"காதெவனாலே கேட்கும்"—எ-ம்,

"சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி"—எ-ம் வரும். ()

இந்தத் தொக்கு நானல்ல, இது சடம், நான் சித்து, தொக்கால் பரிசத்தையறிகிறது-மனம், இந்த மனத்துக்குச்சாட்சி-நான், இவையெல்லாமிறந்தாலும் நானிறவாதபடியினாலே நான் சின்மாத்திரன். இதற்கு வசனமுண்டோ ? உண்டு, எப்படி ?

"உடலெவனாலேயோரும்"—எ-ம்,

"உடற்சக்கரத்தி னுயிர்ப்பையுங்காட்டி"—எ-ம் வரும்.()

இந்த ஆக்கிராணம் நானல்ல, இது சடம், நான் சித்து,ஆக்கிராணத்தைக்கொண்டு கந்தத்தையறிகிறது-மனது, அந்த மனத்துக்குச் சாட்சி-நான், எனக்குச்சாட்சி-சிவம், இந்த சிவம் வேறு நான் வேறல்ல ; ஆக்கிராணமும், கந்தமும்,மனசும் அழிய நானழியாமல்சிவத்தை முன்னிட்டுப் பாசத்தை பின்னிட்டபடியால், நான் சிதானந்தரூபன். இதற்கு வசனம் உண்டோ ? உண்டு, எப்படி ?

"மோதுமூக்கெவனுன் மோக்கும்"—எனவும் வரும். ()

இந்தநாக்கு - நானல்ல, நான்-சித்து, நாக்கு-சடம், நாக்கைக் கொண்டு ருசியையறிகிறது-மனம்; இந்த மனத்துக்குச்சாட்சி-நான், எனக்குச்சாட்சி - சிவம், இந்தச் சிங்குவையும், ருசியும், மனமும் அழிய நான் அழியாதபடியால் நான் நித்தியானந்தன்.—இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"ஓதுநாவெவனுலுண்ணும்"—எனவும் வரும். (சஉ)

பிராணவாயுவும் நானல்ல, பிராணன்-சடம், நான்-சித்து, பிராணனைக் கொண்டறிகிறது-ஆத்மா, அந்த ஆத்மாவே-நான், இந்தப் பிராணனும், மனதும் அழிய, நான் அழியாதிருக்கிறபடியால், நான் சருவானந்தன். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"மூச்செவனுலேயோடும்"—எனவும் வரும். (சங)

இந்த மனமும் நானல்ல, புத்தியும் நானல்ல, ஆங்காரமும் நானல்ல, சித்தமும் நானல்ல, அந்தக்கரணம்-ஆத்மாவுக்கு மந்திரி, பிராணன் - பிரதானி, ஆத்மதத்துவம் - தூசிப்படை, வித்தியாதத்துவம்-சிற்றணி, சிவதத்துவம்-பேரணி, காயமே-அரண்மனை, இப்படி சாக்கிரமாதி தானமாகிய உத்தியானவனங்களிலே சஞ்சாரிபோலச் சஞ்சரிப்பன்; ஞானக்கண்ணினுற் பார்க்கிறவர்களுக்கு தோற்றப்படுவன்; ஊனக்கண்ணினுற் ரோற்றப்படான்; ஆத்மா இன்னுனென்று ஏன் தோற்றப்படவில்லை? தோற்றியுங் கன்மத்தால் தோற்றப்படவில்லை; நீயார், என்னில், நான்தான், நீயார் என்னில் யாருமில்லை, என்பவனே ஆத்மா, இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"நானுென்றுரைப்பவனே நாடிலந்தவான்மாவா
நாநானென்றுனுக்குக் கயல்வேருேர்நாக்குண்டோ
நானேநீநானே ஞானமுடையமானுக்க
நானுவேதப்பொருளு நாட்டுவதற்கையமிலை"—

எனவும் வரும். (சச)

ஆணவம்-இருள், மாயை-விளக்கு, கன்மம்-கருக்கனுே வெள்ளியோ-வென்னு மயக்கஅறிவு; கண்-ஆத்மா, சூரியன்-சிவம், பகல்-சகலம், இரா-கேவலம்; இப்படி அனுதிதொடுத்து இன்றளவும் வரும். சற்குரு ஞானதீக்கையால் சகலகேவலம்அறும்; அறவே ஞானசூரியன் உதயமாம்; ஆகவே ஆணவவிருள் நாசத்தையடையும்; அடையவே மாயை-விளக்கவியும், அவியவே-ஐயந்திரிபு அறும், அதனுல் ஆத்மா சுவானுபவத்தைப்பெறும், பெற்றுல் வேறுபடுமே யென்னில், வே

திலாமையைக்கண்டதே பெற்றதெனக்கொள்க. இருள் சூரியனில் மறைந்தாற்போல, ஆணவஞ் சிவத்தில் அடங்கும் எனக்கொள்க; இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"சருவக்கியானோத்தரமேயாம்"—எனவும் வரும். (௬௫)

சிவத்தைவிட ஆத்மாவென்று நாமம் வருவானேன்? சிருட்டியால்; ஆனால் சிருட்டிக்குமுன் ஜீவராசியில்லையோ? இல்லையென்றே வேதஞ்சொல்லும்; வேதாந்தத்துக்கு மேலான ஆகமம், உண்டென்று சொல்லுகின்றதே; அது பூருவகாண்டத்திற் சொல்லும்; உத்தரகாண்டத்தில் வேதஞ் சொன்னபடியே சொல்லும்; இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"காலமுநாள்களூழிபடையாமுனேகவுருவாகிமூவருருவிற், சாலவுமாகிசமயங்கலாறினுருவாகி நின்றகழலோன், ஞாலமுமேலைவிண்ணேருலகேழுமுண்டுகுறளாயோராவினிலைமேற், பாலனுமாயவற்கோர்பரமாயமூர்த்தியவனுநமக்கோர்சரணே"
[—எ-ம்,

"திஷ்டேபூர்வமாத்மா யேகமேவா"—எ-ம்,

"சிருட்டிக்குமுன்னுயிரெல்லாஞ் சிவமென்றுசெப்புமறை
சிருட்டிக்குப்பின்னுயிர் வேறுபட்டான்சிறுசீவனென்றே
சிருட்டியைநீக்கிச்சிவோகமென் பாவனைசேர்தரலுஞ்
சிருட்டிக்குமுன்சிவமானன் றிருக்கச்சியேகம்பனே"—
எனவும் வரும் (௬௬)

ஆனால் அந்தச்சிவத்தை எந்தப்பிரகாரம் அனுபவிக்கலாம்? என்னில், வனத்தின் வள்ளிமுதலின் நுனியைப்பற்றி அதன் மூலம்பற்றுவாரைப்போல, வசனத்தைப்பற்றி-வாக்கு, வாக்கைப்பற்றி-மனது, மனதைப்பற்றி-புத்தி, புத்தியைப்பற்றி-ஆங்காரம், ஆங்காரத்தைப் பற்றிச் - சித்தம், சித்தத்தைப்பற்றிச்-சீவன், சீவனைப்பற்றிச்-சிவம், இப்படி யனுபவிப்பாயாக. அனுபவிக்கிறவன் யார்?

"அவனருளாலே யவன்றாள்வணங்கி"—என்பதே

சித்தாந்தம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"வெள்ளநீர்சடையர்போலும் விரும்புவார்க்கெளியர்போ
உள்ளுளேயுருகிநின்றங் குவப்பவர்க்கன்பர்போலுங் [லும்
கள்ளமேல்வினைகளெல்லாங் கரிசறுத்திடுவர்போலு
மள்ளலார்பழனமேய வாலங்காட்டடிகளாரே"—எனவும்
வரும். (௬௭)

தேகவாசனை, லோகவாசனை, சாத்திரவாசனை இந்த மூன்றுக்கும் விபரம் ; தேகவாசனை-பூப்பிரதக்கணமுதலிய செய்யவேண்டுமென விருப்பம் ; லோகவாசனை-தன்னை யுலகமறிக்க நடித்துப் புகழைவிரும்பி யிகழைவிலக்கல் ; சாத்திரவாசனை-அநந்தசாத்திரங்களுமறிவோமென்றல் ; தேகவாசனை யாவது-சருவஞ்சிவமயஞ் செகத்து என்கிற விவேகத்தால் நசிக்கும் ; லோகவாசனை-அரிகரப்பிரமாதிகளையும் புகழ் இகழ்விடாதென்பது சித்தாந்தப்பட்டால் நசிக்கும் ; சாத்திரவாசனை-ஆத்மக்கியானஞ் சற்குருகடாக்ஷத்தால் அன்றி விளங்காதென்பது, சித்தாந்தப்பட்டால் நசிக்கும் ; சாத்திர விருப்பம்-எவனுக்குண்டோ அவனுக்கு அனுபவங் கோடிக்காலத்தானையாகிலும் இல்லை என்பதே சித்தாந்தம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"உத்தமமீசுரத்தியானம் மத்திமமாகமசாத்திரயோ
கோகனிட்டங்கீதநாதாயா வாதார்த்தம்பசுலட்சணம்"
—எனவும் வரும். (சஅ)

ஆத்மா-குருடன், குருடு-ஆணவம், கோல்-சரீரம், கோல் கொடுத்திழுப்பான்-ஆசாரியன், சூரியன்-சிவம், படுகுழி - நரகம், மேடு-சுவர்க்கம், கோயிலுக்கிழுத்தால்-கௌத்துக்குப்போவேனென்பதே சீவபோதம், (அரவானிருந்தறுக்குது - ஆளிருக்குலாவுது) என்னும் வசனத்தால் ஈசுரன் உண்டு ; அவனால், செகசாலமுண்டென்பதே சித்தாந்தம் ; (எங்குஞ் சிதம்பரம்-பொங்கிவழியுது) என்னும் வசனத்தால், அகமுகமாயினோர்க்கு அக்கணமே பஞ்சபாசங்களும் விடுபடும். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"இருட்டறைமூலை யிருந்தகுமரி
குருட்டுக்கிழவனைக் கூடல்குறித்துக்
குருட்டினைநீக்கிக் குணம்பலகாட்டி
மருட்டியவனை மணம்புணர்ந்தாளே"—எனவும் வரும்.

சூரியனுக்குள்ளே-மேகம், மின்னல், இடி, இந்திரதனுசு, மழை முதலிய அஞ்சுந் தோன்றினாற்போலச் சருவசூனியசிவத்தில் ஆணவம், மாயை, கன்மம், மகாமாயை, திரோதாயி அஞ்சுமலமுந் தோன்றியவாறுகாண்க. சிருட்டிகாலத்திற் றோன்றிச் சங்காரகாலத்திற் சிவனிடத்தெப்படி இல்லாதேபோம் ? கார்காலத்திற் சூரியனிடத்திலே தோன்றிய-அஞ்சுங் கோடையில் மறைந்துபோனது சூரியனிடத்திலேயே யென்பதே சித்தாந்தம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"தோற்றுவதெல்லா நின்னிடத்தோற்றந்
தோற்றம்பிரிநிற் றேற்றுச்சுடர்முனே"—எ-ம்,

"மன்னுமாலயனோடு வானும்வையமும்
பின்னமுமபினமும் பெருகிச்சிவனும்
பன்னுமானவமுதற் பாசமியாவையு
முன்னுமிச்சிவத்திடை யுதித்தொடுங்குமால்"—

எனவும் வரும். (ரு0)

தோற்றமுமொடுக்கமுஞ் சிவத்திலே கூடாதென்று சிவாகமஞ் சொல்லுமேயென்னில், நீ ஆகமத்கைகண்டால் முற்றுந் தெரியும்; அஃதெங்ஙனம்? அங்ஙனம் பூர்வகாண்டத்திற் சொல்லும்; உத்தர காண்டத்தில் வேதஞ் சொன்னபடியே சிவத்திலே உற்பத்திலயஞ் சொல்லும்; மாயையிலே உற்பத்திலயமென்னில்,

"ஏழுபாரொழுகட லிபங்களெட்டுவெற்புடன்
சூழும்வாளகிரிதொடங்கிச் சூழுமேழுலகமும்
வாழிமால்விசும்பினோடு பிரமவண்டம்யாவையு
மூழியாளொளிக்குளே யுதித்துநின்றொடுங்குமே"—

என்றும், வசனம்வரக் கணக்கில்லை; சர்வ பரிபூரணர், சர்வ காரணர், சர்வலோகநாயகர், சர்வசிவதயாபரர், சர்வகாரியகாரணர், சர்வஞானகாரணர், சர்வதேவசிகாமணி என்று சிவத்துக்கு நாமம் வரக் கணக்கில்லை. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"திரைநுரைகுமிழியெல்லாந் திரைகடற்றோன்றுமாபோ
லுரையுயிர்மாயையாக்கை யுலைநிடமுதிக்கக்கண்டேன்
பரைதிருவுருவமாகிப் பசுந்தொராறுங்குடியிருந்த
திருமறுமார்பன்போற்றுந் திருப்புலிவனத்துளானே"—

எனவும் வரும். (ருக)

சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மயேசுவரன், உருத்தி ரன், விட்டுணு, பிர்மா, இந்த நவந்தருபேதமுஞ் சிவபேதமுஞ் சத்தி பேதமுமாம். சரீரபேதமெல்லாஞ் சத்தி; சீவபேதமெல்லாஞ் சிவம் என்று, திவ்வியாகமஞ் சொல்லும்; அதற்குமுன்னே வேதமுஞ் லும். இந்தவேதாகமக் கண்கள்பெற்ற நாதாக்களும்

"சத்தியாவதும்முடற்றயங்குசீவனுட்சிவம்
பித்தர்காளிதற்குமேற்பிதற்றலாவதில்லையே"—என்று,

சொல்லியிருக்கிறார்கள். எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதந்தோறும் பிறந்திறக்கிறவன் இவன் சிவனாவானோ? சிவனுக்கு உற்பத்தி லயமில்லையென்று சிவாகமஞ் சொல்லும்; ஆனாற் செனன மரண மாருக்கென்னில், மனாக்கென்றே ஆகமசித்தாந்தம்; இது எங்கே சொல்லியிருக்குதென்னில், சர்வக்கியானோத்தி ருத்திலுஞ்சிந்தியாகமத்திலுங்காண்க. இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"தேகமாதுமையாள்கூறு சிவனின்கூறதானா
லாகமாய்ப்பிறந்திறப்ப தாமெனவறையலாமே
மோகனவிடபவூர்தி மனமெனவறிந்துகொண்டேன்
மேகவாலயத்தைநீங்காத் திருப்புலிவனத்துளானே"—

எனவும் வரும். (௫௨)

அநாதியிலே பாசம் பசுவை யெவ்வண்ணம்வந்து பற்றிக்கொண்டது?

"மால்கொடுத்தாவிவைத்தார் மாமறைக்காடனாரே"—

என்பதனால், அநாதியிலே ஈசுரசங்கற்பத்தை யுன்பொய்ப்போதத்தால் அறியப்படாதே என்னில், ஒருபரிகாரம் பசிகண்ட குழந்தைக்கு விகாரமுமுண்டானாற்போல அநாதியிலேமலம்வந்து பொருந்திற்றென்னில், ஆத்மா நிர்வயனோ அவையவனோ வென்னுஞ் சங்கைவரும். சந்திரனிடத்திலே யிருக்கிற களங்கத்தை முயலென்றும், மானென்றும், ஆலவிருட்சமென்றும், பூமிச்சாயையென்றும் பலவாய்ச்சொல்லுவதன்றிப் பிரத்தியட்சமே பிடிபடாமல் மயங்குமென்னில், அநாதியிலே விளைந்த விருத்தாந்தம், நீ சிவமாய்நின்றாற் றெரியுமன்றிச் சீவனாய் நின்றுபார்க்குமளவுந் தோன்றாதென்பதே சித்தாந்தம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"*அநாதியின்மலம்வந்தென்னை யடுத்ததுமதற்குமுன்ன
மநாதிகளிலாதவாறு மலடிபாண்மைந்தன்போலந்
தனாதிநின்சத்தியாலே தனுகரணங்கள்வந்து
பினாதிநிற்பெற்றுப்பின்னர்ப் பிரிந்ததும்பேசல்வேண்டுஞ்
செனாதிபன்வழிபட்டேத்துந் திருப்புலிவனத்துளானே"—

எனவும் வரும். (௫௩)

சீவராசி, சிவசம்பந்தமானால் பின்னர்ப் பாசசம்பந்தப்படுமோ? படாது. பரமமுத்தனானால் பிராரத்தம் அனுபவிக்கிறவன் சுகதுக்க

* இஃது ஐ அடிச்செய்யுள்.

ப்படாதோ? பட்டும் பட்டவனல்ல; கண்டுங் கண்டவனல்ல; கேட்டுங்கேட்டவனல்ல; பார்த்தும் பார்த்தவனல்ல; உண்டும் உண்டவனல்ல; மோந்தும் மோந்தவனல்ல; என்று சர்வக்கியானோத்தரஞ் சொல்லும். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"கடலிலேகலந்தவாறு கதியிடைப்பின்வந்தாலும் [ரு
கடலினுட்டன்மைகுன்றாக் கதையெனநினைக்கண்டோ
முடலிடமிருந்துமுண்டு முறங்கியுமுலாவிநின்றுந்
திடனுடைஞானியன்றோ திருப்புலிவனத்துளானே"
—எனவும் வரும். (ருச)

சிவமும்-ஜீவன் முத்தர்களும், பூவும்-வாசனையும், மணியும்-ஒளியும், நீரும் - தட்பமும், நெருப்புஞ்-சூடும்போலுமென்னில்; இவை இரண்டுபடாதோ? இவைகளொன்றுக்குரிய வுவமைகளென்பதே சித்தாந்தம். ஒன்றென்பதும் விலக்கேயென்னில்,

"இரண்டுபட்டவூரிற் குரங்குங்குடியிரா"—என்றும்,
"மதியுங்கதிருமொன்று பட்டதமாவாசிய புண்ணியதினம்"
—என்றும்,
"கண்டனுங்கண்டியுங் கலந்தொன்றுபட்டார்"—
என்றுஞ்சொல்லுகின்ற இந்தவசனங்களெல்லாம் விலக்கு; ஆனால், அனுபவத்தில் ஒன்றென்ற அனுபவமும் விலக்காம். அனுபவத்துக்கெல்லாம் ஒன்றென்பதே சருவமதசம்மதம். இதுதர்க்கத்துக்கடாது. இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"ஒன்றாயுலகனைத்து மானார்தாமே
யூழிதோறூழி யுயர்ந்தார்தாமே"—எ-ம்,

"ஒன்றா யுலகனைத்து மானாயென் றப்பமுனி
பொன்றா மொழியாற் புகன்றிருக்கப்-பொன்றாத
முத்தியிலு மும்முதலு முண்டென் றுனைத்தலைவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு"—எ-ம்,

"ஒன்றிரண்டல்லவென்றாங் சொன்றினையொன்றும்பற்றி
நன்றுதீதென்றுநிற்குஞ் ஞானிகளுள்ளக்கோயி
லென்றுநிற்கினியதென்றேவிடைவிடாதிருந்தவெம்மான்
சென்றடையாதசெல்வத் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (ருரு)

பஞ்சபாசங்களும் பஞ்சஞானங்களாற்றனித்தனி நீங்கும்; பஞ்சஞானமாவது சொற்சொரூபம், பரசொரூபம், புருடார்த்தசொரூபம், உபாயசொரூபம், விரோதிசொரூபம். சிவனுடையநாயகி சிவகாமி என்றாற்போல, ஆத்மாவுக்கு ஆத்மநாயகி யென்றுண்டானது. அது சிவத்தோடு கலந்தபோதும் உண்டோ? என்னில், அப்போது அவனே யிவனும், அவளே யிவளுமாம். அது என்போலவென்னில், சந்திரனும், சந்திரிகையும், அமாவாசியிற் சூரியனோடொன்றி அது இதுவாய் நிற்றல் போலாமென்றறி. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"பாசத்தாற்பாசத்தோடும் பதிந்திடப்படுவார்நின்பாற்
காசற்றவிழியார்போலக் கலந்தபின்பிரிவதில்லை
யாசற்றநீயும்நானு மன்னியமின்மையாலே
தேசத்தாற்பரவலான திருப்புலிவனத்துளானே"—எ-ம்,

"ஈண்டியமாயாவிருள்கெட வெப்பொருளும்விளங்கத்
தூண்டியசோதியைமீனவனுஞ் சொல்லவல்லனல்லன்"—

எனவும் வரும். (ருசு)

ஒருமனிதன், பரமசிவ சொரூபமாவது அதிசயமன்றியடாதே? ஆகமஞ் சொன்னால் உனக்கேன் சமுசயம்; ஆகமமே, சிவன்வேறு சீவன்வேறு ஆண்டவனடிமைக் கழிவுவாராதென்று சொல்லுமே. அதுவெல்லாம் பூர்வகாண்டம்; உத்தரகாண்டத்திற் சொல்லுகிறதைச் சொல்லுகிறேன் கேள். ஒரு குளவியாற் கீடத்துக்குக் கீடத்துவம்போய்க் குளவிசிந்தனை முற்றமுற்றக் குளவியான தன்மையும், ஒரு பாடாணஞ் சிற்பனால் வேதாங்கப்படி செய்யத் தெய்வமான தன்மையும், ஒருவிழல் ஆறு அமாவாசிப் பிடிங்கிப்பிடுங்கி நட விலாமிச்சியான தன்மையும்போல,

"சீவன்தீக்கையாலுஞ் சிவஞானத்தாலும் சிவமாவன்"—

என்று,

சர்வக்கியானோத்தரம், தேவிகாலோத்தரம், வாதுளாகமமுதலியவைசித்தாந்தப்படுத்தும்; ஆகையால், பூர்வகாண்டம் பொருளல்ல; பொருளென்னில்-உனக்கனுபவகாலஞ் சமீபமில்லையென்பது வாந்திரியும். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"கீட்படுகீடமல்ல கேழ்கிளர்குளவியாலே
யாட்படவதுதானே ததிசயம்போலுமம்ம

சோகம்பாவனை, பூசை-சமதரிசனம், அநுட்டானஞ்-சிவோகம், சந்தியாவந்தனம்-மகாவாக்கியம், வந்தனைவழிபாடு-தற்றெரிசனம், சமதி-சிவதெரிசனம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"வடிவிலாவடிவினின்று மனமிலாத்தொழில்குயிற்றி
யடிமுடியில்லாஞான வாரமுதுண்டிருப்போர்
படுகுழியனையபெண்டீர் பாழ்நரியனையமைந்தர்
செடியுடையாக்கைவேண்டார் திருப்புலிவனத்துளானே"

—எனவும் வரும். (ருகூ)

சிவஞானிகள் பஞ்சாக்கரத்தின் முத்தியானந்தம் பெற்றிருப்பதெப்படி? என்னில், நகாரமாகிய மாயையை நாமல்லவென்று நழுவாமனழுவி, மகாரமாகிய வாணவமறைப்பு நீங்கி, யகாரமாகிய வாத்மதரிசனம்பண்ணி, வகாரமாகிய தாயைக்கண்டு, சிகாரமாகிய பிதாவைத் தாயாற் கண்டுங்காணுமற் சுவாநுபவத்தி லழுந்திநிற்பர்கள். அழுந்தல்வேற்றுமையைக் காட்டாதோ?என்னில், அழுந்தலென்றது ஒப்பனை. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"நகாரத்தின்மயலைஞான வாளினாலறுக்கிப்பின்னர்
மகாரத்தின்மறைப்பைநாமே மணியெனமதியால்வாட்டி
யகாரத்தின்வழியேசென்று மாலயனறியாதெங்குஞ்
சிகாரத்தைக்கண்டேநின்றார் திருப்புலிவனத்துளானே"

—எ-ம்,

"மந்திரமாவதுமஞ்செழுத்தே யந்தமந்திரத்தி
னைந்துபொருளையுங்காட்டி யிரண்டின்வழியடைத்து
மூன்றுமிரண்டின்வழியைத் திறந்துயர்முத்திதந்தான்
கந்தன்கணபதிக்கப்பன் கலிக்கச்சியேகம்பனே"—

எனவும் வரும். (சுo)

தற்போக்கே சிவமாய்த் தானில்லாமையே அதற்கடையாளமாய்க் கண்டமகத்துக்கள், திருநடனதரிசனங் கண்டிருக்கும் வண்ணஞ் சொல்லில், ஆனந்தமூர்த்தி நடனத்துக் காடரங்கம் ஆத்மாவாக, ஆத்மா அபேட்சை உபேட்சையென்னு மிரண்டு கண்களையுமூடி நிர்வாணபதத்தை நினையாமல் நினைப்பதே நடனதரிசனம். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"நோயிலாவாக்கைபெற்று நுண்ணறிவுடையராகித்
தாயினுமினியநின்னைச் சமாதியிற்காணமாட்டார்

மாயையால்வகுக்கப்பட்ட வடிவிடைநின்னைக்காணச்
சேயராயராற்றுகின்றார் திருப்புலிவனத்துளானே''—
எனவும் வரும். (சுக)

சிவஞானியைப் பிராரத்தம் வாதிக்குமோ? வாதியாதோ? வெகுமுகத்தில் வாதிக்கும்; அகமுகத்தில் வாதியாது. அகமுகமானால் வெகுமுகம்வருமோ? அதுதான் பிராரத்தவாசனை. இந்த வாசனை கிருஷ்ணர், இராமர், சுகர், வாமதேவர், நந்தி, பிருங்கி, வசிட்டர், வான்மீகி இவர்களிடத்திலுங்காண்க. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"அமைத்தபடியெல்லா மனுபவிப்பதன்றியே
யுமைக்குரியோனாலு மொழிக்கமுடியாவே''—எ-ம்,

"ஆழியானு மயனுமறிகிலா
வேழைபங்கனை யன்றியிருமலத்
தூழைவென்றவ ருண்டுகொலோசொலாய்
மாழைபோன்று மலர்ந்துளஞாழலே''—எ-ம்,

"தனுவொடுகலவாராயின் சார்தராவினையிரண்டுந்
தனுவொடுகலத்தலாலே சார்தரும்வினையிரண்டு
மனமொழிகாயமூன்று மவனைமுத்திரையினிற்பச்
சினமயலகன்றோர்போற்றுந் திருப்புலிவனத்துளானே''
—எனவும் வரும். (சுஉ)

சிவயோகிகள் சிவாலயதரிசனம், குருதரிசனம், சங்கமதரிசனம், செய்வாரோ? சிவனே ஆலயமாகவும், சிவமே குருவாகவும், அறிவே சீடனாகவுந் தரிசிப்பர்; தன்னைச் சிவாகாரமாவதே சங்கமமாகவுந் தரிசிப்பர்; சிவாலயமாகவுந்தரிசிப்பர்; இப்படி மூவகைப்படுமோ? என்னில், உபசாரமன்றிச் சுபாவத்தில் ஒன்றேயாம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"குறியறிவாருங்கோயில் குறிப்பருமாவியாகு
மறிவுசங்கமமேயெல்லா மறிவெனக்கண்டுகொண்டேன்
றறியெனவுடலுங்கண்ணுஞ் சமாதியிலிருக்குங்காலைச்
செறிபவமினியெற்குண்டோ திருப்புலிவனத்துளானே'
—எனவும் வரும். (சுங)

சிவயோகிகள் சிவதரிசனம் பண்ணுவாரோ? பண்ணின், மனவாக்குக்காயம் அசையாதோ? அசைந்து மசையாத நிலையிலிருப்பர். போகம்-போக்கியம், சாமி-சாமியம், சாக்ஷி-சாக்ஷியம், இரண்டுவகுப்புமின்றி நித்தியானந்த துரியத்தில் தேகபரியந்தம் வரவும்போக்குமிருக்கும்; ஆகையால், வழிபடுவோரைக்குறித்துச் சினகரமே தேகமென்றும், சிவமே தாமென்றும் நினைப்புள்ளமட்டும் நினைப்பர். பஞ்சபாசங்களுக்குஞ் சாட்சிநாயகர் தாமானபடியால், அந்த அனந்தானந்தத்தை என்னென்று சொல்லுகேன். கடைசாரஞ் சிவாத்மாவே பரமாத்மா; பரமாத்மாவே சிவமாகுற் சைவசித்தாந்தம் ஒப்புக்கொள்ளுமோ? பூர்வகாண்டத்திற்குத் தள்ளுபடி; உத்தரகாண்டத்திற்குச் சம்மதம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"வானகமண்ணகம் வளைந்துதிரியினு
ஞானிகள்வாய்மொழி நாம்பலகேட்பினுந்
தானேசிவமலாற் றனிச்சிவம்வேறிலை
மோனநிலையிதுக் கையமுமுட்டுமே"—எ-ம்,

"சைவசித்தாந்தமெல்லாந் தானவனாகிநிற்றல்
மையறுவேதசித்த மற்றதுநானேயென்ன [லாபகுஞ்
லுய்வகைக்கிரண்டுமொன்றென் றேகுகியென் னுயிர்க்கி
செய்தசற்குருவனீயே திருப்புலிவனத்துளானே"—
—எனவும் வரும். (சுச)

இந்த அறுபத்துநாலு சங்கையும், அறுபத்துநாலு கலைக்கியானமும் இதற்கு யோக்கியம்; நிருவாணதீட்சைபெற்ற சத்துக்கள் இதனாற் பஞ்ச பாசத்தினின்றும் விடுபடுவர்.

## சிவயோகிவாக்கு நான்மறைவேதம்,

அறுபத்துநாலுசங்கை - முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

பதினைந்தாவது

## தசவழக்குச்சிந்தனை.

சிந்தனையென்பது, ஆகமவாக்கியங்களாயுள்ளவை. அஃதெத்தனை? ஏகசிந்தனை, துவிதசிந்தனை என்றிருவிதம். அதில், துவிதசிந்தனை யொழிப்பான்பொருட்டு ஏகசிந்தனை வந்தனவாம். இதற்குச் சாமியம்;

"சிந்தனையைத்தந்தென்னைச் சிவமாக்கியாண்டானை
சிந்திக்கச்சிந்திக்கத் தர்ப்பணத்தைவிளக்க
வந்திடுமவ்வொளிபோல மருவியரனுளத்தே
வரவரவந்திடுவன் பின்மலமானதறுமே"

### பிரதமந் திருமேனிகொண்டவழக்கு.

சிவனுக்குத் திருமேனியில்லை; எங்ஙனம்? என்னில், ஆகாசமே பிர்மத்துக்குச் சரீரமென்று வேதஞ்சொல்லும். அஃதன்றியும், ஆதிதொடுத்து இற்றைவரையுஞ் சிவனுருவமாய் வரக்கண்டோமில்லை. ஆனால், அட்டமூர்த்தி, அண்ணாமலை யென்பதும், மந்திரசொரூபி யென்பதும் பொய்யோ? என்னில், அஃதெல்லாம் தியானமாத்திரமன்றிப் பயன்படாதேயென்னில். உன்னைப்போலக் கண்டிதப்பட்டு மலசரீரியாய்க் காமாதிகுற்றங்களோடுங் கூடிநின்றால், அப்போதிவன்தான் சிவனென்றறிவை; இந்த அறிவையாரோ உனக்குப் போதித்தவர்! அவரோ குருட்டுக்குரு, நீயே குருட்டுச்சீடன் பேதாய்! இந்த வழைமதியாலேயன்றோ பிறந்திறந்தாய்; ஆகையாற் சிவனுக்குத்திருமேனி யுண்டென்பதே சித்தாந்தம். சாமியம்;

"அருளேதிருமேனி யான்மாத்திருமேனி
குருவேதிருமேனிக் கொள்"—

"அறிவுக்கறிவா யறிவிப்பான்சில்லோர்க்
கறிவுருவுகொண் டருளுவான்
எங்குமிலையென்பா ரிதயந்தொறுமறிவா
யெங்குமிருப்பா னெம்மிறை"—

(நாதவிந்துகளாதீத நமோநமஃ வேதமந்திரசொரூபாய நமோநமஃ) என்னுந் திருவாக்குகளா லறியக்கடவாய்.

## ஆவிநிலை யுயிர்வழக்கு.

சிவனுக்குத் திருமேனியுண்டாகில், இந்தச் சிவனையன்றி ஆத்மாக்களில்லை ; எங்ஙனம் ? என்னில், சருவதேகங்கடோறுமாய் நின்று உண்ணல் உடுத்தல்முதலிய காரியங்களைச் சிவனே செய்வன். அன்றியும்சுருதி "சரீரபின்னம், பரமாத்மனேகம்" என்றுசொன்னமையால் ஆத்மா நாத்தி ; ஆனால், உன்பெயர் மாயாவாதியோ ! அனீச்சுரவாதியோ ! இருபெயரும் உனக்கே தகும் ; இந்தக்கொச்சை மதியாலேயன்றோ,

"மாயவாதமென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித்தார்த்து"—என்று,

மாணிக்கவாசகரால் தூற்றப்பட்டாய்,மதிகேடனே ! உயிருண்டு நரகசொர்க்கஞ் சிவனுக்கோ ? சிவனுக்கோ ? சிவனுக்கே ஆனாற் சிவனெங்கே ? நீதான். என்னுக்கெனக்குண்டோ வில்லையோ ? என்னில், உண்டில்லையென்பதே நாக்கென் றறிந்தாற்போலச் சிவனை யறிவாய். மூடனைச் சீவாத்மாவென்றும், விவேகியைப் பரமாத்மாவென்றும், சொல்லுகையாலும் சிவனுண்டு. கருவியோடெங்கூடினதே உயிர்க்குப்பிறப்பு ; கருவியைப் பிரிந்ததே உயிர்க்கிறப்பென் றறி ; சிரசிலே மயிருண்டானதுபோல, நாயன்மார் உள்ளத்திலே உயிருண்டென்று மதிக்கப்பட்டது. உள்ளங்கையிலே மயிர் கொத்துக்கொத்தாய் முளைத்தெழுந்த கதைபோல, உன்னறிவிலே உயிரில்லையென்று மதிக்கப்பட்டது. உன்கண்ணறி உடைமைக்கேற்கக் கழறினை. கோட்டான் சூரியனில்லையென்றால் ஆர்தாமொப்புக்கொள்வார் ; இதற்குச் சாமியம்,

"ஊமனொளியில்லையெனி னொப்புவரோ மற்றதுபோ
லேமவுயிரின்றென்பாரில் உவனுவனுதுவெனுமுன்னாமு
தோன்றிநின்றழி முத்தொழிலுளவதனும் [ச்சுட்டாய்த்
சிவனுண்டவனுஞ் சிவனுமுண்டாங்
கறிவினைமறைக்கு மவிச்சையுமுளவே
உடலிழந்தழுதிரோ உயிரிழந்தழுதிரோ [ங்கண்டீ
உடலிழந்தழுதிராகில் லுடறனையன்றுங்கண்டீ ரின்று
ருயிரிழந்தழுதிராகி லுயிர்தனையன்றுங்காணீ ரின்றுங்
[காணீர்"—எ-ம்,

"இல்லையுயிரொன்றுளைக்கு மூனைக்குளிருக்குமுயிர்
தொல்லையுயிரிலையென்பவனே யுயிர்தோன்றிடலு
நல்லமலர்மணம்போலுயிர் நாதனுநண்ணுமென்றான்
கல்லிற்புறப்பட்ட கையுடையான்கச்சியேகம்பனே"—

(உளதிலதென்றலின்யந்திர தனுவினான்மா) என்றுந் திருவாக்கால் அறியக்கடவாய்.

## திரிதியை யாணவவழக்கு.

ஆத்மாவுண்டு; ஆத்மாவைப் பஞ்சபாசத்தி லாணவமறைக்குமென்பது கூடாது. ஏன் கூடாது? ஆத்மா சுவயஞ்சோதி, அசரீரி, அநாதி, அவிகாரி, நிரவயன், அநந்தாநந்தன்; ஆகையாலாணவமறையாது. உன் பெயர் அகம்பிரமவாதியென்றுயர்ந்தோர் சொல்லுவர்; கெடுவாய்? பிரமன், நான் பிரமமென்று பட்டபாடும், புருடோத்தமன், நான் பிரமமென்று பட்டபாடும், புராணங்களிற் கேட்டறிந்ததில்லையோ! ஆகையால், உன்கருமமே கட்டளைக்கல்லாயிற்று. பேதாய்! இந்த மதியைக்கொண் டெங்ஙன்பிழைத்தாய்! இத்தனைகோரணிக் கிடங்கொடுத்ததே அஞ்ஞானம்! குழந்தையைப் பராக்குச்செய்வதுபோல, நாடோறு முன்னை விடயப்பராக்குச் செய்வதாணவம்; அன்றியும், (உன்றுணைவந்நுக்கசுநிவந்தநில்லையோ) வென்னும் வையச்சொல்லானு மறியக்கடவாய்; இதற்குச் சாமியம்,

"அன்னியத்தைக்காட்டிய நன்னியத்தைத்தான்
மறைக்குமென்னே மலத்தினியல்"—

அன்னியமானவற்றையுணர்த்தி யன்னியமாய் நிறைந்த வறிவறியாமையானும் மலமிலை மாயை மறைக்குமென்னில்,

"மலகுணமறைந்தல் மாயைவிளக்க
லளைபுக்கொடுங்கிய வரவின்வாலுள
தலையிலையென்னல் சவலைச்சொல்லே"—

ஆனால், இந்த மலம் அநாதியோ? ஆதியோ? அநாதியென்னில் நீங்காது. ஆதியென்னின் நீங்கிப் பின்னுமாவரிக்கும். பாலுக்கு வெண்மையும், கரிக்குக் கறுப்பும் இயற்கை. சுக்கிலாம்பரத்துக்கு அழுக்கேறல்செய்கை; ஆனால், இந்த இருதலைக்கொள்ளிக் கிடைப்பட்டயான் போம்வழி, பன்னிரண்டெருடங் குருக்கிடை.

## சதுர்த்தி மாயைவழக்கு.

மாயையேயில்லை; எவ்வாற்றானில்லை? சருவம்பிரமமயமென்று சுருதிசொல்லும்; அதன்றியுங் காணப்படுவன, கேட்கப்படுவன, உண்

பண, உடுப்பன, கலியாண, கிரியாண முதலியவெல்லாம் பிரமமென்று என்னனுபவத்துக்கே யொக்கும்போலும்; ஆயின்முன்னே ஒரு சர்வ சீவதயாபரக்கொக்கு நாமமாத்திரஞ் சிறப்ப, ஏரி, குளம், மடுக்கள், குட்டையிலுள்ள மீனெல்லாந் துய்த்த கதையை விளக்க, நீயும் அவி காரவாதிப் பட்டங்கட்டிக்கொண்டு, கிருட்டினவிலாச புத்தகத்தைக் கைப்பிடித்து, மேலுஞ் சர்வாத்மாக்களும் போம்வழி தூர்த்தனை. மாயையிலே அகப்பட்டுக்கொண்டு விழிக்கிறதும் வனிதையருபத்தத் திலே சிங்குவைப்படுவதும் உனக்கேதெரியும். மத்திமப்பேதாய்! தற் போதச்சிவன் மற்ற நாதாக்கள் அனுபவநிலையை யறியாது பிதற்று கின்றனை. உன் கருமமே கட்டளைக்கல்லாயிற்று. சாமியம்,

"ஒருமலவழக்கு மிருவினைத்தொடரு
மும்மலச்செருக்கு நால்விதவாக்கு
மைவகைப்புலனு மறுவகைக்குற்றமு
மற்றாலன்றி யறிவாகாயே"—எ-ம்,

"மாயையேயுடலமாகும் யாவையுமாயையாமே"—எ-ம்,

"ஆசையாலிந்தமாயை யறிவினைமுழுதுமூடித்
தேகமேயான்மாவென்றுஞ் சேயிழைமடவார்தங்கள்
போகமேமோக்கமென்றும் புத்தியைத்திரிபுபண்ணுஞ்
சோகம்பாவனையாலித்தைத் தொலைப்பர்கள் சிவன்முத்தர்"

என்னுந் திருவாக்கானு மாயையுண்டென்றறி. இந்த மாயை அறிவை மறைக்குமன்றி விளக்காதென்னில்,

"ஆணவத்தி லேகிடந்த வாருயிர்க்குக் காயமெனுங்
கோணைவிளக் களித்த கோமானே-யாணவமு
மாக்கையும்வந் தென்னைநித மல்லற் படுத்தாமற்
சாக்கிரா தீதத்தைத் தா"—

என்னுந் திருவாக்காற்றெளி. ஆகிலிந்த மாயையெங்கே பிறந் தது? என்னில், மனதிலே பிறந்தது. அந்த மனதெங்கே பிறந்தது? என்னில், வியாழவட்டங் குருக்கிடை.

## பஞ்சமி கன்மவழக்கு.

கன்மமே கர்த்தா; கர்த்தாவொருவன், வேறொன்பதில்லை. பிற க்கப்பண்ணுவதுங்கன்மமே, பாலயௌவனவிருத்தம்நோய் சாக்காடு முதலியன பண்ணுவதுங்கன்மமே. இந்தக் கன்மந் துலையொத்தகால

த்தில் கன்மமே முத்தியைக்கொடுக்கும். இந்த கன்மநுட்பந் தெரியாதவர் கர்த்தா கன்மக்கயிற்றாலே யாட்டுவிப்பானென்பர் ; ஆயின் உன்பெயர் கர்மவாதியென்றும், காலவாதி சகோதரனென்றும்,கேட்டிருப்போம் பேதாய் ! இந்த ஏழைமதியைக்கொண்டல்லோ அனேக காலம்பிறப்பை வளர்த்தாய் ! தெரிந்துந் தெரியாதவன், கற்றறிமோழைநீயே, கங்கையை யடுத்தும் கழியிடைமூழ்குங் குணத்தவன்,

"அறம்பாவமென்னு மருங்கயிற்றாற்கட்டி"—

என்னுஞ் சுருதிதெரிந்துந்தெரியானாகி விளக்கைப்பிடித்துக் கிணற்றிடை வீழ்பவனீயே, உனக்கொப்பு வாரிபுடைசூழ்ந்த வையகத்துளில்லை. கெடுவாய் ? பூர்வசென்மத்திற்செய்த விருப்பும் வெறுப்பும் சடமாகையாலும், அதை யுனக்கு ருசிக்கப்பண்ணிப் பொசிப்பிக்கிறவரோ கர்த்தா. எனக்குக் கன்மமில்லையோ கர்த்தாவில்லையோ வென்னும் வழக்கச்சொல்லாற்றெளி. ஆனாலந்தக் கன்மஞ் சாகாரமோ ? நிராகாரமோ ? என்னின், சாமியம்,

"அருவாயவல்வினைநோ யடையாவண்ண
மாவடுதண்டுறை யுறையுமமரரேறே"—

என்னுந் திருவாக்காற்றெளி. கன்மத்துக்குச் சடமுஞ் செயலுமுண்டோ ? என்னில், சாமியம்,

"கன்மம்வியாபிகடம்போற் சடமன்று
சென்மிக்கப்பண்ணுஞ் செயல்"—

ஆனாலிந்த கன்மம் நாசமடையுமோ ? நித்தியமடையுமோ ? என்னில், சாமியம்,

"மாயப்பிறப்பறுத் தாண்டானென்வல்வினையின்
வாயிற்பொடியட்டிப் பூவல்லிகொய்யாமோ"—எ-ம்,

"ஊழா லுடம்புள் ளுடம்பாலிங் கூழுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு-காழ்கொண்ட
வித்துமர மும்போல வீயா தொருக்காலு
முத்தியிலே வீயு முனை"—எ-ம்,

"சஞ்சிதந்திருநோக்காற்போம்பிராரத்தந்தனுவோடேகும்
விஞ்சுமாகாமியங்கள் விளங்கனுபவத்தால்வீயுஞ் [ன்
செஞ்சயான்செய்ததெல்லாஞ் சிவன்செய்ததென்றுதேறி
மஞ்சனேவினைத்திறங்கள் வந்தனைச்சந்தியாவே"—எ-ம்,

"முன்னேவருவினையெல்லாஞ் சின்முத்திரைகொண்டெரித் தேன், பின்னேவருவினையெல்லா மருளிற்பிரித்துவிட்டேன், றின்னும்வினையினையெல்லாஞ் சிவார்ப்பணஞ் செய்தொழித் தே, னின்னமெனக்குப் பிறப்புமுண்டோகச்சியேகம்பனே"

இக்கருத்தா ஞசமடையுமென்பதேசித்தாந்தம். ஆயின், இந்தக் கன்மம் ஆதியோ? அநாதியோ? என்னில், குருக்கிடை. கன்மத்துக் குப் பிறப்பிறப்பெங்கே? என்னின், உன்னறுபவத்திற் றெரியுமன்றி, திருவசனம் வசனத்துக் கெட்டாதென்றறி. கன்மம் நினைத்தாலுந் தீண்டினாலுந் தொழிலுனையாலும் வரும்,

"உன்னலொருகால் பின்னுரைத்தலிருகாலதனைத்
துன்னன்மூக்காலொன்றே தொழில்"—

திரிகரண மசையாதுநிற்பின் கன்மம் பற்றாதென்பதே சித்தாந் தம். சாமியம்,

"விருப்புவெறுப்பற்று வேதமொழிப்படி மெய்யுணர்ந்து
மரிப்பைச்சனிப்பையு மற்றொளியாகியமாதவர்பாற்
கருப்புச்சிலையனுங் காலனும்வந்தென்செயக்கடவர்
நெருப்பைப்புழுப்பற்றுங்கொல்லோ நெடுங்கச்சியேக
ம்பனே"—எனவும் வரும்.

## கேவ்டி யாநாதிவழக்கு.

சொல்லிப்போந்த மும்மலங்களும், ஆன்மாவை யநாதியிலே பற் றிச் செப்புங் காளிதமும், உவருஞ் சமுத்திரமும், மணியு மாசுண மும், உமியுந் தண்டுலமும், காசமும் விழியும்போலப் பசுவையு மறைத்துப் பதியையு மறைக்கும். கண்ணைத்தா னிருண்மறைத்தது, கதிரையு மறைக்குமோ? என்னில், இவனுக்குப் பதிமுகந் தெரியா வண்ண மறைப்பது பாசமானமையால் மறைக்கும்; ஆன்மா, அநாதி, சுகரூபி, நிராகாரன், சிவசம்பந்தனுறல் எப்படி மலம் மாயை கன் மம்வந்து கிரணமானது? என்னில், முயற்கொம்பும், ஆகாசத்தாமரை ப்பூவும், வந்திபுத்திரனும், கானற்சலமும், தானுபுருடனும் போல மலம், மாயை, மாமாயை, கன்மம், திரோதாயி யென்று வேதஞ்சொன் னல், உனக்கேன் அநாதி சங்கைவரும்; ஒருத்தியைப் பேய்பிடித்ததெ ன்று ஜநிகமாகச் சொல்லவே, அவள்பேயானபிற்பாடு பூசாரி ஆட்டி, அடித்து, அயோக்கியை யோக்கியையாக்கித் தெய்வத்தைச் சிரமின்

மேல்வைத்துப் பேய்போனதென்னவே, என்பேரிலே தெய்வமிருக்கிறதென்பதுபோலச் சிவான்மசம்பந்தம் போக்கிச் சிவத்துவம் வருவித்தபின், சிவத்துவம் வந்தவழியும் பேய்வந்தவழியும் விசாரிப்பது அவம். குழந்தையை யுறங்கென்று பிட்டத்தைத் தட்டத்தட்ட வுறங்காது சிரசைக் கிளப்பிற்றாகிலென்செய்வாள். அதுபோலச் சீவன் சிவத்திலே யுறங்கினால், அதனிழுக்குத் தெரியுமென் றாசாரியன் சொல்லச்சொல்ல இரட்டித்துப் போதந் தலையைக்கிளப்பும். இதற்குச் சாமியம்,

"முன்புகண்டேனில்லை பாசம்பசுபதிமுன்முதலும்
பின்புகண்டேனில்லை யென்னாகண்மாயம்"—எ-ம்,

"இல்லையெனுமாயையி லிட்டெனை நீ
பொல்லேனறியாமை பொறுத்திலையே"—எ-ம்,

"மையாடுகண்ணியு மைந்தருஞ்சுற்றமும்வாழ்வுஞ்செந்தி
லையாநின்மாயையுரு வெளித்தோற்றம்போலானதெல்லா
மெய்யாயிருந்தது நாட்செல்லநாட்செல்லவெற்றவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க் கனவாய்மெல்லப்போய்விட்
டதே"—எனவும்வரும்,

ஆனால், மித்தையென்றால் ஆகமசித்தாந்தம் என்னமாய் முடியும்? மலசத்தியிறந்தும், மலம் அப்பிரகாசமா யிருக்குமென்றதுஞ் சரியோ? என்றகப்பன் செத்துத் தெய்வமா யிருக்கிறானென்றும், வீமனெறிந்த யானை ஆகாயத்திலே தொற்றிநின்றொன்றாய்விழு மின்றைக்குமென்றும், இந்த மரத்திலே பேயிருந்தது இப்போது சிறிது காலமா யிறந்திருக்கிறதென்றும், கலியுக அந்தியத்திலே கற்கோழி கூவுமென்றும், பொய்வழக்குப் பலவிதம். இதுபோலாமென் றறிவாய். இருள் போனபிறகு இருட்டுண்டென்னில், சொல்லளவன்றிப் பொருளில்லை. உண்டே? என்னில், உனக்குண் டெனக்கில்லை என்பதேசித்தாந்தம். பெத்தான்மாவுக்குண்டு, முத்தான்மாவுக்கில்லை. வாயுபூதத்துக்கு வடிவுண்டு, ஆகாசத்துக் கதுவுமில்லை; சாமியம்,

"அசைவற்றால் வாயுவாகாசம்பின்னு
மசைவுற்றால் முன்வாயுவாம்"—எ-ம்,

"ஆசையுற்றாற்சீவ னாகாரமாமந்த
வாசையற் றானீயேயரன்"—எனவும்வரும்,

ஆனால், முத்தனானபின் மலசம்பந்தமுண்டோ? உதித்தபிறகு இருட்டுண்டோ? இல்லை. உதியாததற்குமுன் இருட்டுண்டோ? உண்டு. இல்லையென்பது நீ அனுபவியேயானால் அகமுகமாய்ப் பார்த்தறிதி. திருநோக்கம் பட்டபிற்பாடு, பஞ்சபாசங்களு மில்லையென்று,வேதாகமப்படி பிரத்தியேகான்மா சிவோகம் என்றறிவதே சைவசித்தாந்தம். (பாசமென்னைவிடுவான் காலமெந்நாளோ) என்னல், சமுசயாத்மாவா மென்றறி. இதற்குச் சாக்ஷியம்,

"சிவன்வேறுசீவன்வேறென் றிரண்டாய்க்காணு
மவன்செனனமரணத்தை யடைவனாதலினா
லத்துவிதபாவனையை முத்தனாதரிப்பன்"—எ-ம்,

"ஆன்மாவேபரமசிவமெனவுண்மையாக
வறிகின்றானவனெந்த வவத்தையடையினுமிவ்
வான்மாவேபரமுத்தி யெளிதடையுமிந்த
வான்மலாபத்தையொத்த லாயம்வேறில்லை"—எ-ம்,

"சீவன்சிவலிங்கமாகத் தெளிந்தவர்தம்
பாவநசிக்கும் பரிந்து"—எ-ம்,

"அறிவென் றனையறிந்த லானந்த போதச்
செறிவும்பொய் யாணவத்திற் சேர்வும்-பிறிவும்பொய்
யானவித வகிதத் தாட்டுங் கருவிகளிற்
போனாலும் பொய்பொய்பொய் பொய்"—எ-ம்,

"அறிந்தவிடத்தில்லை யறியாமைதன்னைப்
பிறிந்தபினும் பேசல்பிழையன்றோ"—எ-ம்,

சுத்தபடிக சங்காசமாய்ப் பஞ்சபாசங்களு நமக்கிடத் தில்லையென்று பாவிக்கப்படுவதே சித்தாந்தம்.

## சத்தமி சமயவழக்கு.

சைவம், பாசுபதம், காளாமுகம், வாமம், பைரவம், மகாவிரதம், உலகாயுதம், புத்தம், சமணம், வைணவம், மாயாவாதம், அனீச்சுரவாதம் ஆகப் பன்னிரண்டுமதம். இந்தப் பன்னிரண்டுங் கடந்தவனே சீவன்முத்தன்; சமயசாத்திரம், சமயஅனுட்டிப்பு, சமயதேவதை இவைகளெல்லாம் மனம்பழக்கக் கட்டிய வுபாயசூத்திரம்; நாமார் நமக்குப் பதியாரெனவரும் ஞானங்களே சமயாதிதஞானம்;

இந்த ஞானத்தால் சுகர், வாமதேவர், வசிட்டாதி, கபிலரீருய இருடிகளும், சம்பந்தர்முதல் மாணிக்கவாசகரீருய மகத்துக்களும், மூத்தியடைந்தார்கள். ஆகையால்,

"தன்னையறியுமறிவே யறிவன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே"—என்னும்,
திருமூலர் வாக்கியமே வாக்கியம்.

"உலவைச்சமயங்க ளொவ்வாதசாத்திரமாய்
கவலைக் கடல்"—என்றதுஞ் சரியொக்கும்,

"அன்றென்று மாமென்று மாறு சமயங்க
ளொன்றொன்றோ டொவ்வா துரைத்தாலு-மென்று
மொருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கு
மருதனையே நோக்கி வரும்"—எ-ம்,

"பன்னிருசமயத்தோரும்பணிந்திடாப்பராபரத்தை"—எ-ம்,

"நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று
மன்றென்று மாமென்று மாகாதே-நின்றநிலை
தானேதான் றத்துவத்தீர் சம்பறுத்துங் காக்கைக்குப்
போனூற்போற் றேடும் பொருள்"—என்றது,

கருணைக்கையானம்மைத் தூக்கினமையா னல்லனென்றுந், தூக்காமையாற் றீயனென்றும், நானே பரப்பிரமமென்றும், வத்துவன்றி யாத்மா வில்லையென்றும், மனவாக்குக் காயத்துக் கெட்டாமையா லில்லையென்றும், ஈச்சுரனின்றே விரவுபக லுளவோவென்னு மைதிகத்தாலாமேயென்றுங், கூறும் பற்பல சமையிகள் கோரணிக்கூத்தாவுமாகாதே.சுபாவமா யித்தனைக்கு மிடங்கொடுத்த வறிவேநின்ற நிலை; யதுவே தான் இந்தவறிவாய் நின்று சமயப்பேய்களை நோக்காமனேக்கித் தத்துவவிசாரணை பண்ணுந் தத்துவத்தீர் சம்பையறுத்தொருவன்கட்ட நாணின்று நெடியமரத்தால் கட்டுவோமோ, நீர்ப்பாம்பால் கட்டுவோமோ, அன்றி விலாங்குமீனாற் கட்டுவோமோ, நீண்டகற்றாழைற் கட்டுவோமோ, வென்றுவி திகைக்குங்காலை, யாத்தனுனவ னனைத்தையுங் கட்டுவதச் சம்பேயென்னவுந் தேருது, நெடுந்தூரம்போனூைப் போன் றனவாம்;தன்னைத்துறந்து பொருள் காணவேண்டி நீர் போந்தபோக்கென் றதிசயித்தனவா மென்றவாறு. இதற்குச் சாமியம்,

"தானேசிவமல்லாற் றனிச்சிவம்வேறில்லை"—எ-ம்,

(அஞ்செழுத்தும்பாவனையு மவனைப்போன்றனை) என்னும், வையச்சொல்,

"சிவச்சீவோ சீவோசிவாசற் சீவோகேவலசிவா"—எ-ம்,

"அறிவு திரிவிதத்துக் கப்பா லறியு
மறிவே சிவமதுவே நீயா-மறிவொன்றிக்
கண்டாருங் காணாக் கதியை * மழபாடிப்
பண்டாரங் காணும் படி"—என்பது,

மழபாடிப் பண்டாரமே ? யிதேசமயாதீதப் பரமாகியமுத்தி காணக்கடவாய். ஆன்மதத்துவ வறிவும் வித்தியாதத்துவ வறிவுஞ் சிவதத்துவ வறிவுமாய மூவகைத் தத்துவசாலத்துக் கப்பாலறியப்பட்ட சுபாவவறிவே சர்வவியாபி சூனியமாகிய சிவம். அந்தச்சிவமேநீயாம். இதற்கோ ரையப்பாடில்லை. மகாவாக்கியமு மிஃதே ; ஐயறிவுமோரறிவா யொடுங்கிய யோகீஸ்பரானுங் கண்டுங்காணாத முத்தியை யென்றறிவித்ததா மென்றவாறு. அறிவு திரிவிதமென்பதைச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி யென்கினுமாம். இதுவுமதே-அறியுமறிவே சிவமென்றது தூலவருந்ததி நியாயம்போலத் தூலவறிவைக் காட்டிச் சூக்குமவறிவை மூன்றையுஞ் சாக்கியாய்க் கண்டதுவே நீயென்றுகாட்டியது:(அறிவொன்றிக்கண்டாருங் காணாக்கதி) என்றது அறிவாலறியும்பொருளல்லவென்றதாம். காணும்படியென்றது,மாயாவாதியைப் போன்று வாசாப்பிரமமாய்ப் போகாமையென்பதாம் ; சாமியம்,

"நீருக்குட்டம்பம்போ னின்னறிவினின்றுனைப்
பாருட்கண்கொண்டு பாரிக்து"—எ-ம்,

"எங்குநிறைந்தானை யேகமிரண்டென்றே
யெங்குமாய் நீகண்டிரு"—என்றும் வரும்.

## அட்டமி ஞாதருஞான ஞேயவழக்கு.

ஞாதுரு-ஆன்மா, ஞானம்-ஆத்மாவினுடைய ததேசந்திரிய ஞானம், ஞேயம்-ஈச்சுரன். இந்த ஈச்சுரனாலே ததேசந்திரிய ஞானத்தை ஆன்மா வறியும். இந்த ஞானம் முத்தியிலுமுண்டு. கூடாதென்னில் முத்தியின்ப மனுபவிக்கிற வான்மாவுமில்லை. ஆகமமுமில்லையாம். மிகவும் நன்று எல்லா மில்லாமற்போகிறதே சுபாவமுத்தி ;

"அவனுநா னுமெய்ம்மயங்கி யனுபவிக்குமளவிலே
யவனுமில்லைநா னுமில்லை யாருமில்லையானதே"—என்று,

* மழபாடிப் பண்டாரம் என்பது சீடனதுபெயர்.

சுருதி யிருக்கிறதென்னில், சுருதிக்குப் பொருடெரியாமல் யாருமில்லையென்றாய், நேயத்தழுந்தினவிடம் எல்லாமிறவா திறந்திருக்கும். அஃதெங்ஙனம் ? என்னின், ஒருத்தியை ஆலிங்கனம் பண்ணிய ஒருவன் காட்டிற் புலிமுதலிய மிருகங்கள் குறுகினுங் காணானென்னுங்கதையே சாட்சி. ஆனாலிந்தக் கரணத்தோடு முத்தியை யடைவதோ ? என்னில்,முத்தியென்பதுகைலாயம் வைகுந்தம் பொன்னெயில் வட்டமுதலிய தானமன்று, ஆனாற் பின்னைத்தானெது ? என்னில், தானே முத்திதானம். பெத்தக்கரணம்போய் முத்திக்கரணமாதலே இறவாதிறத்தல். மூடன் ஞானியானால் முன் மூடனாயிருந்த தசேந்திரிய வந்தக்கரணமெங்கே யோடிப்போனது ? போகவில்லை. எவ்வண்ணம் ? என்னில், தேவதத்தன் நியாயம்போலா மென்றறி. சாமியம்,

"ஆனந்தந்தாமென் றறியாவறிவிலிக
ளானந்தந்தேடி யலையும்"—ஆனால்,

ஒரு பாடாணத்தைச் சிற்பன் றெய்வவுருவாக்கினால் முன் பாடாணமுண்டோ? இல்லையோ? இல்லையென்னிற் கைக்குத்தட்டுபடாமற்போகவேண்டும். குணுங்கி கற்பிலே மறைந்துநின்றாற்போலப் பாடாணந் தெய்வவுருவின் மறைந்திருக்குமென்றறி. அங்ஙன மறையாதுண்டோ ? என்னில், பாடாணத்தியானமேயில்லையாலும், முத்திசத்தியாலும்,நினைக்குமிடத்துத்தெய்வப்பிரசன்னமாதலாலும்,இல்லையென்பதே சித்தாந்தம். இதுபோலும் அதுவென்றறி. வான்மீகி, வசிட்டர், மதங்கர், கபிலர் கதையே சாட்சி. நதிமூலம், ரிஷிமூலம், குருமூலம், ஸ்ரீமூலம் அறியக்கூடாது. சாமியம்,

"எல்லாருங்களிதுளங்க விரும்பையிரும்பொன்னாக்கி
நல்லார்கடொழுந்தேவாய் நாட்டுகின்றஞாயம்போற்
கல்லாதபுலையேனைக் கருணையாற்கடைக்கணித்துப்
பொல்லாதபரப்பிரம மாக்கினையென்போல்வந்தே"—
எனவும்வரும்.

## நவமி தெய்வவழக்கு.

தெய்வமென்பது பொது ; தெய்வத்தை யார்கண்டவர் ? கயிலாயம், பொன்னெயில்வட்டம், ஸ்ரீரங்கம், திருப்பாற்கடல், செகந்நாதம்,இவை ஒருகாலந்தோன்றும் ஒருகாலமழியும். ஒருதெய்வம் ஒரு தெய்வமாகியும் போகியும்வரும். ஆனாற் றெய்வநிச்சய மில்லையோ? என்னில், தெய்வநிச்சயம் றெய்வமறியாதவனுக்கு நாமேசித்து, சிதாநந்தன், திவ்வியசொரூபனென்று கண்டவன் எந்தத்தெய்வத்தை

வணங்குவான் ? எந்தத் தெய்வத்தையும் வணங்கான். ஆகையால், சிறுபிள்ளைகள் தெய்வங்களைக் கொண்டாடுதல்போல, அறிவில்லாப் பெரிய பிள்ளைகளுந் தெய்வத்தை யாராதனை பண்ணுவார்களென்றறி. தனக்குத்தானே மரம், கல், மிருத்திகை தாம்பிரமென்று தெரிந்தும் (நாட்டோடே நடேவேயோடும்) என்கிற ஐதீகத்தைப் பற்றி மயங்குமென்றறி. சாமியம்,

"அத்தேவர்தேவரவர் தேவரென்றிங்ஙன்
பொய்த்தேவுபேசிப்புலம்புகின்ற பூதலத்தே"—எ-ம்,
"பூவும்புகையும்புனலும் பொருட்டேடித்
தேவைமறைக்குந் தினம்"—எ-ம்,

(சிவோகஞ்சிவோகம்) என்று வேதாகமங்கள் சொல்லுவதே பிரமாணம். சைவபுராணத்திற் சர்வசாட்சி சிவோகமென்று சொல்லும். கீதைகளிலும் பிரத்தேகான்மா சிவோகமென்று சொல்லும் ; ஆகையாலிதுவே சித்தாந்தம். வேதசித்தாந்தமு மிதுவே ;

"உள்ளமேபீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளியரா லர்ச்சிக்குமாறு"—எ-ம்,
"சீவன்சிவலிங்கமாகத் தெளிந்தவர்கள்
பாவநசிக்கும் பரிந்து"—எ-ம்,
"புன்புலாலியாக்கை புரைபுரைகனியப்
பொன்னெடுங்கோயிலாய்ப் புகுந்தென்"—எ-ம்,
"உள்ளமேகோயிலா யுள்குமென்னுள்ளமே"—எ-ம்,

இப்படி அனந்தஞ் சாமியமுண்டு. அனுபவிக்கதெளியும். மற்றையர்க்குத் தெளியாதென்பதே சித்தாந்தம். கைலாயம், வைகுந்தம், பொன்னெயில்வட்டம், இவை கற்பனைத்தானமேயன்றிக் கற்பனைகடந்த அறிவிலில்லை. உண்டென்னில் அனுபவியன்று. ஆகையால் (தானேசிவமல்லாற்றனிச்சிவம்வேறில்லை) என்னுந்திருவாக்கே ஏறுகடைசி ஆகமசித்தாந்தம்.

## தசமி துறவிவழக்கு.

துறவாவது பற்றறத்துறத்தல். கன்மத்தை நீங்கலாவதெப்படி? பட்டினத்தார், பத்திரகிரி, சுகர், வாமதேவர், சடபரதர் முதலாயினோர் பற்றறநிற்றல். அமைத்தபடியன்றி யாராலுந் துறக்கப்படாதோ?என்னில், உயிர்க்குணமாகிய காமாதிக ளடங்கிநிற்பதே துறவு; அவை யடங்காமனிற்பதே சமுசாரம் ; அறிவாகி நிற்பதே துறவு ; ஆகமாய் நிற்பதே சமுசாரம் ; எத்தை யெவன்முன் துறந்தான் ; ஸ்ரீகளைத்துறந்தான் ஸ்ரீமாயை யானபடியினாலே துறந்ததுபோய் துறந்திருப்பாரெல்லாம் வீணே ? என்னில்,

"புலவுநாய்க்குறிகாணினும் புருடர்நெஞ்சுவப்பர்"—

ஆகையால், புறப்பரிசமன்றி அகப்பரிசமுண்டென்பதே சித்தாந்தம். ஆனாற்றுறவறமில்லையோ ? என்னில், இல்லையென்றால் வேதாகமம் ஒப்புக்கொள்ளாது. ஆகையால், துறவறமில்லறம் இருவிதமாய் விளங்க வகுத்தனவாம். இதற்குச் சாமியம்,

"துறப்பார்மற்றுப்புரவில்லா ருற்றபால
வூட்டாகழியு மெனின்"—எ-ம்,

"ஊழைத்துறந்தா லுயர்துறவியானவையன்றி
யூழிருக்கநீ துறவியோ"—

ஆகையால், சித்தாந்தம் கன்மநீக்கமே துறவு ; கன்மசம்பாடணமே சமுசாரம். காமாதிகளிற் பற்றறத்துறத்தலாவது,

"கண்டவின்பமேமீளவுங் காண்கின்றதொருநாட்
கொண்டகோலமேமீளவுங் கொள்கிறதுவந்து
கண்டகாட்சியேமீளவுங் காண்கின்றதென்றால்
விண்டமேலவர்நாணுறு தொழிவரோவெறுத்து"—

என்னுங் கருத்தைப்பற்றிவரும் உபாதியேயாம். பிருங்கிமாமுனி தீர்த்துறந்தும்பின்பட்டபாடு செகமேயறியும் ; சிவக்கூறு-சிவம். தேகக்கூறு-சத்தி ; ஆனபடியினாலே, சிவத்தை யெந்தக்காலமுஞ் சத்தி நீங்காதென்பதே சித்தாந்தம். சாமியம்,

"எத்திறநின்றானீச னத்திறமவளுநிற்பள்"—ஆனதால்,

பார்ப்பான்-பார்ப்பாத்தி, ராசா-ராசாத்தி, வைசியன்-வைசியச்சி, சூத்திரன்-சூத்திரச்சி, இங்ஙனஞ் சிவக்கூறு சத்திக்கூறு கண்டுகொள்க. இல்லத்தான் பாசபெந்தமென்றுந் துறவி ஞானபெந்தமென்றுமுலகங்காணும்வரம்பு காட்டியது. உபாதியாலே வேற்றுமை காண்பதன்றிக் கன்ம வேற்றுமையின்று. மரணகாலத்திலே மதிவேற்றுமையால் நல்லார் பொல்லாரென்று மதிப்பதன்றிப் பிணவேற்றுமையின்று. அதுபோலச் சனவேற்றுமையின்று. சாமியம்,

"பிறப்பொக்குமெல்லாவுயிர்க்குஞ் சிறப்பொவ்வாச்
செய்தொழில் வேற்றுமையால்"—

ஞானம்வந்த ஞான்றெந்தவறமாயினுந் தகும். அகண்டாகார ஞானத்தை இல்லறமுந்துறவறமும் மறையாதென்பதேசித்தாந்தம்.

"செத்துப்பிறந்துழல்பிணக்கைச் சின்மயனன்முத்திரையைப், புத்தியிடைப்புதைத் தருளிப் பொன்றுவித்துப் பொருண்முடிவைப், பத்துவழக்கினுந்தேற்றிப் பரமபதமெற்களித்தா, னத்துவிதமெழுவாயி னமைத்தசிவப்பெயரோனே"—

எனவும்வரும்.

தசவழக்குச்சிந்தனை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

---

## பதினறாவது

## குருமரபுசிந்தனை.

பதி பசு பாசமென்னுமுப்பொருளுக்குட் பதிமுதலாய்ச் சொல்வதோ? பாசமுதலாய்ப் பகரவேண்டியதோ? என்னின், பாசம் பசு பதியென்பது பெத்ததசை; ஆகையால், பாசத்துக்குள்ளே பசு மறைந்து பசுக்குள்ளே பதி மறைந்துநின்றமையாற் பெத்தமென்றது. முத்திதசை-பதிக்குள்ளே பசு மறைந்து பசுக்குள்ளே பாசமறைந்து நின்றமையான் முத்தமென்றது. பதிபசுவாகப் பசு பதியாகப் பாசங் கழன்ற தோற்றமும், பின்னிட்ட பரமுத்தியிற் பதியன்றிப் பசு பாசங்கழன்ற அனுபவத்தாற்காண்க. சாட்சி-மகுடாகமம்,

"சிவச்சீவோசீவோசிவா சற்சீவோகேவலசிவா"—ஆனல்,

பாசமென்பதியாது? பசுவெந்தக்காரணத்தாற் பாசபெந்தப்பட்டான்? பசுவையும் பாசத்தையு மீறிநின்ற பதியாவதியார்? இந்தச் சங்கைமுடிச்சை யவிழ்த்துக்காட்டினதே முத்தியெனப்படும். அநுக்கிரகமுறையிற் பசு பாசம் பதியெனப்படும். ஆகையாற், சாட்சி (பசுவாவதுதான்மா, அப்பசு அசுதந்தரன், தான் பகர்சின்மாத்திரன், மலநாடிதன் மலத்தான்மூடன்) என்னுந் திவ்வியாகமத்தால் அறிக;

"பாசபத்ததேசீவா பாசமுத்ததேசதாசிவா"—எ-ம்,

வாக்கியத்தால் நான் மூடனென்னும்பாவனை நீங்கக்கடவன். (பாசபெந்தத்தினலேசிவனும் பாசம்போனல்ஈசனும்) என்னுந் திருவாக்கினுமறிக.

### ஆணவ வழக்கு.

அனுதியே ஆணவசம்பந்தம் இயற்கைச்சம்பந்தம் அன்று; செயற்கைச் சம்பந்தமே. சீவனுண்டானபோதே சீவத்துவமுண்டாயிற்று. ஊருண்டானபோதே புலைச்சேரி யுண்டானுற்போலும், சமுத்திரமுண்டானபோதே நீருண்டானுற்போலும், செம்புண்டானபோதே களிம்புண்டானுற்போலும், மேகமுண்டானபோதே மழையுண்டானுற்போலும் இப்படிஅனந்தமுவமையுண்டு. அதனுற், சீவன் சிவனை நோக்காமற் பாசத்தை நோக்கப் பாசியென்னும் பெயர்வந்

தது. கள்ளப்பார்வையாற் கள்ளனென்றாற்போலவும், விகடத்தால் விகடனென்றாற்போலவும், சாதுவினாற் பசுவென்றாற்போலவும், விதரணையால் பார்ப்பானென்றாற்போலவும், இப்படியும் அனந்தமுவமையுண்டு ; ஆனால், இஃதொருகால் தீர்வுமுண்டோ ? உண்டு. எங்ஙனம் ? விசுவாமித்திரன் பிரமரிஷியானாற்போலும், குணுங்கி அருந்ததியானாற்போலும், அத்திமரம் தேவதையானாற்போலும், சீவனுஞ் சிவனாவன். சாட்சி,

"இசையாருஞ்செம்பிரதக் குளிகையிற்பொன்னதுபோற்
சீவனுமெய்ஞ்ஞானத்தாற்சிவத்துவத்தைப்பெறுமே"
—எ-ம்,

"பண்டிரும்பிரதத்தினாற் பசும்பொனாமாபோன்
மண்டலந்தனின்மனிதருஞ் சிவமயமாவார்"—என்னும்,

வாக்கியங்களானுமறிக. (சிவத்துவமசி-சிவோகமஸ்மி-சிவோயமஸ்தி)இது அநுக்கிரகமுறைமையெனக்கொள்க. தன்மை,முன்னிலை, படர்க்கை மூன்றுவாக்கியத்துங்காண்க. தன்மை குரு சிவனானேயேயிருக்கின்றேனென்பதாம். சீடன் நானென்ன நீ சிவமானாய் என்பதாம். படர்க்கை சர்வமுமாமோவென்னச் சருவமுஞ் சிவமாயேயிருக்கிறதென்பதாம். நான் நீ யடங்கலுஞ் சிவமேயென்பது வாக்கியத்திரயத்திற்காண்க. பேதசித்தாந்தி இதைக் கைக்கொள்ளான். சரிதை கிரியை யோகத்திலுள்ள விருப்பத்தாலெனவறிக. (அபுருபாநாம்நரசென்மாநாம்விவேகமதிதுல்லபம்) என்னுஞ் சுருதிகளானுமறிக.

## மாயை வழக்கு.

மாயையே யான்மாவை மறைக்குமென்னின், மறையாது விளக்கைப்போல் விளக்குவதேயன்றி மறையாதென்பதே துணிவாயின், மறைக்குமென்று நூல்களிற் சொல்லுவானேன் ? மாயை மயக்கஞ் செய்தலின் மறைப்பென்றுஞ் சொல்லலாம். சாட்சி,

"ஆக்கையுங்குருவான தாசனே"—எ-ம்,

"மாசற்றகொள்கை மனத்திலடக்கினை
யீசனைக்காட்டு முடம்பு"—

என்றதனானுமறிக. திரோதானசத்தி,மாயையானமையான் மறைப்பென்றுங் கொள்ளலாம்.

## கன்ம வழக்கு.

கன்மம் அனாதியே சீவனுக் குண்மையாகுமென்னில், அது சற்குரு சந்நிதானத்திலே நீங்குகிறபடியினாலே, எப்படி யனாதியென்று

சொல்லலாம். செயற்கையென்னில்மீண்டுவரும். ஆனாற்போம்வழி? மலமுண்டானபோதே மாயையுண்டு; மாயை யுண்டானபோதே கன்மமுண்டு; எப்படிப்போலென்னில், பசியுண்டானபோதேவிகாரமுண்டு; விகாரமுண்டானபோதே முயற்சியுண்டானது போலென்றறி. சிவனுக்கு மல மாயை கன்ம மூன்றும் அநாதியியற்கையன்று; அநாதி செயற்கையென்றே சித்தாந்தம். சுண்ணாம்புக்குவெளுப்பும், கரிக்குக்கறுப்பும் அநாதியியற்கை. செம்புக்குக் காளிதமும்,நெல்லுக்குமியும் அநாதிசெயற்கை யெனக்கொள்க. சாட்சி,

"களிம்பறுத்தானெங்கள் கண்ணுதனந்தி"—எ-ம்,

"நெல்லிற்குமியு நிகழ்செம்பினிற்களிம்புஞ்
சொல்லிற்புதிதன்று தொன்மையே"—எ-ம்,

"மாய்மெலாநீங்கியரன் மலரடிக்கீழிருப்பன்
மாறுதசுவானுபவ மருவிக்கொண்டே"—என்னும்,

திருவாக்கினுமறிக.

## திருமேனிகொண்ட வழக்கு.

சிவனுக்குத் திருமேனியுண்டென்னில், மல மாயை கன்மமுண்டு; என்னதியானென்னுஞ் செருக்குமுண்டு; உண்டாகவே நம்மைப் போலக் கலியாணமும் கிரியாணமு முண்டாம். எவ்விதத்தினுங்கூடாது. அஃதெங்ஙனம்? என்னில்,சிவன் அப்பிரமேயனென்றும்,நிரவயனென்றும், நிராமயனென்றும், அகாயனென்றும், அசிந்திதனென்றும், சைதன்யனென்றும், சநாதனென்றும் வேதஞ் சொல்லுகையால், திருமேனி யில்லையெனில்கூடாது. அஃதெங்ஙனம்?என்னில் திருமேனியில்லாவிட்டால் வேதமில்லை; வேதமில்லாதபோதே பிரமாதிதேவதைகளில்லை; தேவதைகளில்லாதபோதே கன்மமில்லை; கன்மமில்லாதபோதேமழையில்லை; மழையில்லாதபோதே பிரபஞ்சமில்லையாய்முடியும். ஆனாற் றிருமேனியுண்டென்பதே சித்தாந்தமென்னில், சாட்சி யொவ்வாதிருப்பானேன்? எப்படி?

"சிவனுருவருவுமல்லன் சித்தினோடசித்துமல்லன்"—எ-ம்,

"ஆணல்லார்பெண்ணுமல்லா ரலிகைவீரட்டனாரே"-எ-ம்,

"பெண்ணோடாணென்று பேசற்கரியவன்"—எ-ம்,

"ஒருநாமமோருருவ மொன்றுமிலார்"—என்றும்,

இப்படி அனந்தமுவமையுண்டு. சனகாதிகளுக்கநுக்கிரகநிமித்தியமாய்க்கொண்ட திருமேனியும், தனஞ்சயனுக்காக வனசரவடிவாய்

விற்றழும்புபட்ட திருமேனியும், மார்க்கண்டேயருக்காக லிங்கோற்பவமூர்த்தியாய்வந்த திருமேனியும், அம்மை தழுவக்குழைந்த திருமேனியும் பொய்யோ ? மெய்யே. ஆனாலிதன் கருத்து ரகசியசம்பந்தம். சமுத்திரத்தில் குமிழியெழும்பி நின்றொடுங்குவதுபோலச் சிவகாருண்ணியத்தாற் காருண்ணியமே திருமேனியெனக்கொண்டு பிரமாதிகளைச் சிருட்டிப்பன் ; பிரமாதிகளால் அகிலநிகிலப் பிரபஞ்சங்களையும் சகல வேதமாதிய நூல்களையுஞ் சிருட்டித்துப் பழைய பரமசிவனாய் நிற்பன். மகத்துக்களிடத்தும், சூரியனிடத்தும், அக்கினிச்சிகையினிடத்துந் தியானத் திருமேனியாயே யிருப்பன். தியானமே திருமேனியன்றி வேறில்லையோ ? வென்னில், இல்லை. சாட்சி,

"மறைநான்கேவான்சரடாய்த்
தன்னையேகோவணமாய்ச் சாற்றினன்"—எ-ம்,

"உமையலா துருவமில்லை"—எ-ம்,

"இலக்கியவிருசுடருந்திருநயனமீறிலடியிலாவெண்டிசைத்திண்டோ, ணிலந்திருவடிநீள்புனலாடைநீர்மருவுந்தழனின்னுதற்செந்தீ, கலந்தெழுமாருதநாசியிற்காற்று கடுவெளியெல்லாந்திருவுருவானால், வலஞ்செய்வதெங்கேவணங்குவதெங்கே மாலயனறியாமன்றினுளாடி"—என்னும்,

திருவாக்கினாலுமறிக. மானுமழுவு மறைத்துச் சிவமே ஆசாரியராய் வருமென்னில், வானந்திரண்டுருவாய் வருமோ ? வராது. ஆனாற் போம்வழி ? காருண்ணியத்தால் அதிட்டித் தநுக்கிரகிப்பனெனவறிக. இதே யாகமசித்தாந்தம்.

## அநாதி வழக்கு.

ஆத்மாவை அநாதியிலே மலம்வந்து சம்பந்தப்பட்டதென்னில், அநாதி யாத்மாவென்றும், நிரவய வாத்மாவென்றுங் கூறும் வேதவாக்கியம் பொய்யாம். ஆனாற் பிறப்பிறப்பு, நரக சொர்க்கம், நல்வினை தீவினை, வெறுப்பு விருப்பு, போக்கு, வரவு, சரியை யாதிபாதம், சாலோகாதிபத முத்திகள், இத்தியாதியுஞ் சிவன் தனக்குச் சிருட்டித்துக்கொண்டாரோ உனக்குச் சிருட்டித்துவைத்தாரோ வென்னும் வாதம் வரும். ஆனால், (நான்பிறந்தகாலம் நீயும் பிறந்தாயென்றும். நானிறந்தகாலம் நீயுமிறந்தாயென்றும்.)

"இன்பமுந்துன்பமு மில்லானேயுள்ளானே"—எ-ம்,

"சேடனருளொப்புருவஞ் செய்கினைற்றில்லீழனவிற்
கூடவிழுந்தாயின் குணம்"—என்று,

இப்படி அன்னேன்னிய வாசிரியம் வருமேயெனனில், இந்த அன்னேன்ய வாசிரியதோடத்துக்குப் பிரமாணமில்லை. அநுபவ காலத்திற் காணலாம். குருக்கிடை. ஆனல் நிச்சயத்துக் கெட்டாதோ? எட்டும். சாட்சி,

"நீக்கிமுன்னெனைத்தன்னொடு
நிலாவகைக்குரம்பையிற் புகப்பெய்து"—எ-ம்,

"அருங்கற்பனைகற்பித்தாண்டா
யாள்வாரிலி மாடாவேனே"—எ-ம்,

"மால்கொடுத்தாவிவைத்தார் மாமறைக்காடனுரோ"—எ-ம்,

"தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே"
—எ-ம்,

"வழித்தலைப்படு வான்முயல்கின்றே
னுன்னைப்போலென்னைப் பாவிக்கமாட்டேன்"—எ-ம்,

"என்னைவகுத்திலையேலிடும்பைக்கிடம்யாதுசொலே"—

என்றும், இப்படி அனந்தமுவமையுண்டாயினும், அநுபவகாலத்தன்றி தெரியவாராது. ஆயிற் சித்தாந்தமென்னமாய் முடியும்? என்னில், ரகசியசம்பந்தம். உலகெலாம்படைத்தான், உயிரையும்படைத்தான்; உலகமுந்தியோ? உயிர்முந்தியோ? என்னிற், பகலின்கொம் பிரண்டு மொருகாலத் தெழுந்தாற்போலும், ஆணும் பெண்ணுமொரு காலத்திற் பிறந்தாற்போலும், சிவன் சிருட்டிவல்லபம் நம்போதமயக்குகளாற் காணப்படாதாயினும்,

"திஷ்டேபூர்வமாத்மாயேகமேவா"—எ-ம்,

"காலமுநாள்களூழி படையாமுனேகவுருவாகி"—எ-ம்,

"ஒருவனுயுலகேத்தநின்றநாளோ ஒருருவேமூவுருவமான நாளோ"—

என்றும், இத்திருவாக்குகளால், ஊமைகண்ட கனவுபோன் றென்னனுபவத்துக்கே யொக்கும்போலுந் தோற்றுகிறது. ஆகையால்,

"உருவாகியென்னைப் படைத்தாய்போற்றி
யுள்ளாவிவாங்கி யொளித்தாய்போற்றி"—

''சேடனருளொப்புருவஞ் செய்கினற்றில்வீழளவிற்
கூடவிழுந்தாயின் குணம்'' —என்று,

இப்படி அன்னோன்னிய வாசிரியம் வருமேயென்னில், இந்த அன்னோன்ய வாசிரியதோடத்துக்குப் பிரமாணமில்லை. அநுபவ காலத்திற் காணலாம். குருக்கிடை. ஆனால் நிச்சயத்துக் கெட்டாதோ ? எட்டும். சாட்சி,

''நீக்கிமுன்னெனைத்தன்னொடு
நிலாவகைக்குரம்பையிற் புகப்பெய்து'' —எ-ம்,

''அருங்கற்பனைகற்பித்தாண்டா
யாள்வாரிலி மாடாவேனோ'' —எ-ம்,

''மால்கொடுத்தாவிவைத்தார் மாமறைக்காடனோ'' —எ-ம்,

''தானெனைமுன்படைத்தானஃதறிந்துதன்பொன்னடிக்கே''
—எ-ம்,

''வழித்தலைப்படு வான்முயல்கின்றே
னுன்னைப்போலென்னைப் பாவிக்கமாட்டேன்'' —எ-ம்,

''என்னைவகுத்திலையேலிடும்பைக்கிடம்யாதுசொலே''—

என்றும், இப்படி அனந்தமுவமையுண்டாயினும், அநுபவகாலத் தன்றி தெரியவாராது. ஆயிற் சித்தாந்தமென்னமாய் முடியும் ? என்னில், ரகசியசம்பந்தம். உலகெலாம்படைத்தான், உயிரையும்படைத்தான் ; உலகமுந்தியோ ? உயிர்முந்தியோ ? என்னிற், பசுவின்கொம் பிரண்டு மொருகாலத் தெழுந்தாற்போலும், ஆணும் பெண்ணுமொரு காலத்திற் பிறந்தாற்போலும், சிவன் சிருட்டிவல்லபம் நம்போதமயக் குகளாற் காணப்படாதாயினும்,

''இஷ்டேபூர்வமாத்மாயேகமேவா'' —எ-ம்,

''காலமுநாள்களூழி படையாமுனேகவுருவாகி'' —எ-ம்,

''ஒருவனாயுலகேத்தநின்றநாளோ ஓருருவேமூவுருவமான
நாளோ''—

என்றும், இத்திருவாக்குகளால், ஊமைகண்ட கனவுபோன் றென்னனுபவத்துக்கே யொக்கும்போலுந் தோற்றுகிறது. ஆகையால்,

''உருவாகியென்னைப் படைத்தாய்போற்றி
யுள்ளாவிவாங்கி யொளித்தாய்போற்றி''—

"உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றி
யோதாதேவேத முணர்ந்தாய்போற்றி"—என்னும்,

திருவாக்கினால் சிவனிருவித முத்தியினும் புசித்தாரென்பதே கூடாது. கூடுமென்றுசொல்லிற்றே ? அதுவு முபசாரமென்றறியவும். பின்னை யார்தான் புசித்தார் ? என்னில், சாட்சி,

"ஓர்ப்பொடுபசியுந்தாகமுச்சாசஞ்சுகதுக்கங்க
டார்பரியங்கனபோகந்தன்மமுமதன்மந்தானு
நீப்பறியாதபுத்திநிகழ்குணமாகுமத்தை
யாத்துமன்குணமேயென்பரயிக்கவாதத்தினாலே"—

(உண்டுறங்கியபிள்ளை விடிந்தகாலையுண்ணவேயில்லை) யென்று சாதித்தாற்போலும், சுத்தவீரனுக்கு உயுத்தியகளத்தி னரியாணக் கிலேசம் மறைந்துநின்றாற்போலும், இருவித முத்தியிற் பிராரத்தம் நின்ற நேர்மைகாண்க.

குருமரபுசிந்தனை-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினேழாவது

## அநுபவசந்திரிகை.

இருவினையொப்பும் மலபரிபாகமுமொரு தலையாயெய்திய சீடனே மகா வாக்கியோபதேசமே யுபதேசம். ஆனாலிதற்குமேலில்லையோ? இல்லை. உண்டுபோலத்தோன்றுகிறதே! என்னில், (விநாசகாலே விபரீதபுத்திதோன்றும்) அது உன்னிடத்திற் றோன்றியதென்றறி. மகாவாக்கியத்தில் அடியேனுக்குச் சிரத்தாபத்தியேன் வரவில்லை? அநுபவகாலம் வரவில்லை. ஆனாலிதன்றி அநுபவம் இல்லையோ? வேதாகமங்களுக்கும், சற்சனராகிய ரிஷிகளுக்கும், முனிகளுக்கும், சனகாதிகளுக்கும், தட்சணாமூர்த்திக்கும், சம்மதம். உனக்குமாத்திரமே சம்மதமில்லை. எனக்குமாத்திரஞ் சம்மதமில்லாமற் போவானேன்? நீபண்ணினகன்மம்,(புத்திகன்மாநுசாரணி) என்று, வசனமிருக்கிறபடியினாலே, இது சம்மதப்படவில்லை. ஆனால் எப்போது இதற்குக்காலம்? என்னில், அந்தக்கன்ம மொழிந்தகாலத்தில். ஒழியுங்கால மெக்காலம்?

> "சற்சங்கத்துவே நிர்ச்சங்கத்துவம்
> நிர்ச்சங்கத்துவே நிர்மோகத்துவம்
> நிர்மோகத்துவே நிர்ச்சலசித்தம்
> நிர்ச்சலசித்தே சீவன்முத்தா"—என்னும்,

ஒழுங்குவந்த காலத்தில், கன்மமொழியும். ஒழியவே, மகாவாக்கியத்தில் விசுவாசம்வரும். சிவாகமத்தில் விருப்பில்லாதவனுக்குச் சிவன்மேல் விருப்பில்லாததுபோலும், சந்தானத்திலே விருப்பமில்லாதவனுக்குத் தாரத்தின்மேலே விருப்பமில்லாததுபோலும், வேதவிருப்பற்றவனுக்கு, வேதவாக்கியவிருப் பெங்ஙனம்வரும். சிவம் நீயானாய் என்றமாத்திரத்திலே முத்திவருமோ? இன்னம் இதிலும் அதீதநிலை யில்லையோ? என்னில், இம்மாத்திரம் அறிவுடைய வுனக்கு, மகாவாக்கியஞ் சொன்ன நீசனுக்கு, ஜெனனமரணம் பற்றறுதெனக்கொள்க;

"குருப்ரம்மா குருவிஷ்ணு குருதெய்வம்மயேஸ்வரா
குருசாட்சாத்பரப்ரம்மம் தஸ்மீஸ்ரீகுருவேநமஃ"—என்று,

வியாழவட்டங் காத்திருந்தபின், இவன் கருத்து வெகுமுகமோ அகமுகமோ, சந்தேகனோ அசந்தேகனோ, துர்ச்சனனோ, சர்ச்சனனோ வென்றுசோதித்து, வேதாந்த விசுவாசம் வரப்பண்ணி, விருப்பம் வருவதைப்பார்த்துச் சர்வக்கியானோத்தரமுகமாக, உபதேசம் பண்ணினால் அன்றே பசுமரத்தாணியாம். இவ்வழிபாடின்றிய உலகச் சுவானங்களுக்குப் புகழைக்குறித்தும், பொருளைக்குறித்தும், குலகோத்திரங்களைக்குறித்தும், பந்துவைக்குறித்தும், கன்மத்தைக்குறித்தும், சவுக்கியபோஜனத்தைக்குறித்தும், மகாவாக்கியத்தை அநுக்கிரகம்பண்ணினால், (வரகிலேமுளைத்தசெந்நெல் களையதானவாறுபோல்) அபக்குவன் வாய்ப்பறையறைந்து, தோட்டிக்கு மூத்தானையிருவரும் அதோகதியையடைவது சித்தம்; ஆனால், சுவாமி? இந்த மகாவாக்கியத்தான் முத்திபெற்றவருண்டோ? என்னில், அநாதிமுதலிற்றைவரைக்கும் மோட்சமடைந்தவர்களெல்லாம், மகாவாக்கியத்தாலேயாமென்றறி; இத்தனைவிசுவாசமுமக்கேனென்பாயேல், உன்சமுசயத்தைப்பற்றி வந்ததெனவறிக. முதற்பதம்-பரம்; இரண்டாம்பதம்-ஆன்மா; மூன்றாம்பதம்-அயிக்கியம்; முதற்பதத்தில் மாயைநட்டம்; இரண்டாம்பதத்திற் கன்மநட்டம்; மூன்றாம்பதத்தில் ஆணவநட்டம்; இப்படி யநுபவித்தறிவாயாக. இதற்கு அவிரோதம்,

"செம்பதத்துச்சம்புவுக்குந் தொம்பதத்துப் பண்புணர்த்
தும் பெருமாளே"—எ-ம்,

"வழக்கையறவொருகணக்கையருளியபெருமாளே"—எ-ம்,
"தெளியத்தெளியப்பவளச்சடிலச்சிவனுக்கொருசொற்புக
ல்வோனே—என்றும்,

(அன்றுரைத்த சத்தமே சத்தம்) என்று குறிப்புமொழியாற் காட்டியதும் இஃதேயாம். மகாவாக்கியமறிந்தவனே ஞானி. மற்றைய மந்திரங்களறிந்தவன் ஞானியன்றோ? என்னில்,

"சத்தகோடிமகாமந்திரஞ் சித்தவிப்பிரமகாரணே"—

என்றமையால், அந்தஞானி ஞானியன்றெனபதே சித்தாந்தம். இது தவிர்ப்பஞ்சாட்சரம், பிரணவம், அசபைமுத்திநெறியல்லவோ? என்னில்,

"முத்திபலவும்பகர்ந்தோம் பக்குவத்துக்கீடாய்
முத்தியதிகாரிக்குச்சொன்னமுத்திகுகன்கேள்'' — என்னும்

திருவாக்கா லவைகளைத்தள்ளி,

"ஓர்வார்த்தையுட்படுத்திப் பற்றிஞய்பதையேன்''—என்பதையேகொள்வாயாக.

மகாவாக்கியத்திற் றிரிசியந்திருக்குமற்றுல், ஆன்மாவும் ஆனன்மாவுங் காணக்கடவாய். கண்டு உன்னநுபவப்படியாய்ப் பிழைத்தேன் உய்ந்தேன் கடைத்தேறிப்போனேனென்று தேறித் தேறினேமென்பதையு மறந்துபோனதே சமுசயநிவிர்த்தி. இங்ஙனஞ் சமுசயநிவிர்த்தியானதற் கடையாளஞ் சிவோகம்பாவனை மின்னல் மின்னித் தோன்றுவபோலவாய், அகத்தி னடித்துக்கொண்டிருக்கும். ஆனல் நான் சிவனே? பின்னைத்தா னுராய்நினைத்தா யறிவில்லாய். ஓஓநாயே! ஓஓபேயே! ஓஓமூடா! ஓஓமூர்க்கா! ஓஓபயலே! என்று விளித்தால், இத்தாதிகளிலும் வெறுப்பையடைந்து, ஓஓசாமி! ஓஓசற்குரு! ஓஓசைதன்னியா! ஓஓசங்கரா! என்று விளித்தத்தில் சந்தோடம் வந்தமையால், நீயே சிவனென்பதற்குச் சமுசயமேயில்லை. அவிரோதயம்,

"உன்னை யொருவ னுயர்சாமியென் றுரைத்தா
லென்ன மகிழ்ச்சி யங்கே யெய்திஞய்-பின்னொருவன்
பாவி பசுவென்றுற் பதைபதைப்பா யாகையினுற்
சீவனல்ல நீயே சிவன்''—

இந்த மகாவாக்கியம் பொருளல்லவென்பாருமுண்டோ? என்னில், அவரைக்கூடாமல் அவர் வாய்மொழி கேளாமற்போவதே சற்காரியம். இதுபொருளல்லவென்கின்ற புத்தி யெவனுக்கிருக்கிறதோ அவன் கற்பகோடிகாலங்களினு மோட்சமடையானென்பதே சித்தாந்தம்; இதிற்கு ஈஸ்வரவாக்கியமுமுண்டு. சர்வக்கியானோத்தரத்திற் கண்டுகொள்க. சுப்பிரமண்ணியருக்குச் சிவன் கயிலாசபர்வதத்திலெழுந்தருளி யநுக்கிரகம்பண்ணி யேறுகடைசியில் மகாவாக்கியோபதேசம் பண்ணித் திருவுளம்பற்றியது,

"ஒருவசனமாகவே முடிந்தபொருளுரைத்தோ மொன்றுகக் காண்பதுவேகாட்சி யின்னும்பலவாய்ப், பெருவசனமாக நீபலபடக்கேட்டாலும் பின்னுநாம்நிகழ்த்துவது மிந்தவுப

தேசங், தருவசனஞ்சமுதாயம் பலபொருளும்விளக்குந் தடுமாறுதேகமாய்த்தானேதானுகி, நிருவசனமாய் ஞானமோனமொன்றுமின்றி நில்லாத நிலையன்றி நின்றநிலை நிலையே''—
ஆகையால்,

இதுவே கடாசாரம். இப்படி நீயும் அநுபவப்படக்கடவாய். (க)

நீயே சிவம்; நானெப்படி சிவம்? அறியாமை அறிவு இரண்டுக்குஞ் சாட்சி சைதன்னியமானமையால். நீயோ? நானுஞ்சிவமாயே போனேன். எப்படி? உமக்கற்றபடி. இந்தச்சராசரங்களோ? சர்வம்ப்ரம்மமயம். இன்னங் கேட்கவேண்டுமோ. நானுர்? நானே. நீயார்? நீயே. இதற்கு அவிரோதம். ஆகமம்,

''சீவோசிவோ சிவோசீவா சந்சீவோ கேவலசிவா''—

''ஆத்மசர்வ்பூதானுங் கேவலஞ்சங்கமஸ்தலம்''—

அத்துவிதம் நீ; துவிதஞ் சரீரபந்தம். மகாவாக்கியத்தில் அசிபதத்துக்காகவந்தது அத்துவிதம். அதற்கு இரண்டல்லவென்பதே சித்தாந்தம். அத்தைத் துவிதக்கலப்பென்பாருமுளர். ஏகமென்றதநுபவத்திற்கேசரி, விவகாரத்தடாதென்பது கண்டுகொள்க,

''சீவனுஞ்சிவனும்வேரு றிருப்புவினத்துளானே''—

என்பதைக் கடைப்பிடித்தோர்க்கு ஐயந்திரிபு திரிகாலத்துமில்லை. டித் தேவிகாலோத்தரத்தில் (நித்தனும்பரமீச) னென்னும் பாசுரத்தாற் றெளியக்கடவை.
(உ)

அநுபவசந்திரிகை-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினெட்டாவது

## திருமுகப்பாசுரம்.

நேரிசை-வெண்பா.

சத்தம் பிறவா விடமேச மாதிநிலை
சத்தம் பிறந்திடமே சங்கநிலை-சத்தம்
பிறவா விடமேதோ வத்தைப் பிடியென்று
னறவாணை னம்பலவா ணன்.

(எ-று) சூக்குமைநாதந் தோன்றாதவிடமேசமாதிநிலை, சூக்குமை நாதந்தோன்றினவிடமே தத்துவக்கூட்டமாகிய பிரபஞ்சநிலை, நாதந் தோன்றாதவிடத்தையே யெவ்வழியானு மிறுகப்பிடியென்றான், புண்ணியமூர்த்தியாகிய வம்பலவாண னெமதாசாரியன். (க)

இரண்டாம்பதம்.

அத்த னுரைத்த தறியாயோ வென்ற மையா
லத்த னுரைத்த தறையுங்கா-லத்தனார்
நாதங் கடந்தசிவ னானென் றுணர்மினென
வோதுவித்தா னும்பர்க்கன் றுற்று.

(எ-று) அநாதிமுத்தன் ஆதியிலே அதிதிமைந்தர்க்கு நாதாதீதப் பரமசிவமாவது நாமேயென்று திருவாய்மலர்ந்ததை மறந்தாயோவச் சோ! என்றமையா லதை நாடிச்சொல்லுமிடத்துச் சிவப்பிரம கைவத்தமென்னும் புராணத்திற் றிருவுளம்பற்றியது. (உ)

மூன்றாம்பதம்.

அன்றுரைத்த சத்தமே சத்தமிதி லேயமிலை
யொன்றே பரமதுநீ யுற்றுணரி-லென்று
நானேநீ நீநானே யென்றுனக்கு நாநவின்றே
மோனமொழிக் குண்டோ மொழி.

(எ-று) முன்னமே தீட்சாக்கிரமத்திலே அக்கினியாகாயஞ் சாட்சியாகச்சொன்ன மகாவாக்கியமே வாக்கிய மிதிலேயப்படவேண்டாம்; சொன்னேன் சொன்னே னென்றமையால் ஏகம்பரம். அப்பரமே

சீவனாகிய நீ. அதை ஆராயின், என்றைக்கும் நித்தியமாயுள்ளநானே நீயென்றும் நீயே நானென்று முனக்குப் பரிவுடனே சொல்லாமற் சொல்லினோமே; பின்னரும் பேறுற்றுச் சமுசயாத்மனேகேட்டால் மௌனமொழிக்குப் பின்னு மிரண்டா மொழியுண்டோ வில்லை யென்பதாம். (௩)

நாலாம்பதம்.

சலனமிலாச் சித்தஞ் சாங்குசித்த மன்றோ
மலமாயை கன்மமெலா மாண்ட-நிலையன்றோ
பெத்த மகன்றிடமும் பேரானந்தப் பெருக்கு
முத்தமமா நன்முத்தி யும்.

(எ-து) சஞ்சலங்களில்லாத சுசித்தமேசங்கிலிட்ட சித்தத்தையுஞ் சொலினசித்தத்தையுங் கோரசித்தத்தையுங் கடந்தசாங்குசித்தமாகை யால், ஆணவமாயை காமியமிறந்தநிலையாம்; அந்த நிலையேமறைப் பெல்லா நீங்கினவிடமும் மறைப்புநீங்கவே யீச்சுரன் வேறல்ல நாமே யீச்சுரனென்னும் பேரானந்தம் அபரிமிதமாய்ப் பெருகும் பெருக்கமுஞ் சர்வோத்தமமா யெல்லாம் விடுபட்ட சற்சுகமுத்திய மென்றதாம். (௪)

ஐஞ்சாம்பதம்.

சித்தமே சுத்தசிவ மென்றதிரு வார்த்தை
முத்திக்கு வித்தா மொழியன்றோ-பெத்தமொழி
சீவனே யெல்லா மிறந்தசிவ மென்னும்
பாவனா தீதமொழி பார்.

(எ-து) சித்தமேசர்வமுங்கழன்ற சிவமென்று திருவாய்மலர்ந்தது சாதகராயனுட்டிக்கு மெய்போலிகட்கெல்லா மோட்சத்துக்கு வித்தா கியமொழியல்லவோ; ஆவரணநீங்கிய சீவாத்மனே சர்வமுங்கழன்ற சிவமேயென்னும் பாவனைக் கதீதமொழியென் றனுபவித்துப் பார்ப் பாய் மாணாக்கனே. (௫)

சத்தம் பிறந்திடத்தே சகலகலை யும்பிறக்கு
மத்த னுரைத் தறியாயோ-வன்றுரைத்த
சத்தமே சத்தஞ் சஞ்சலமொன் றில்லாத
சித்தமே சுத்த சிவம்.

(எ-து) சூக்குமைச்சத்தம் பிறந்தவிடமே சகல கலைக்கியான மாதி யாகப்பிறக்குமென்று சிவன் சொன்னத்தையுமறிந்துமறியாமல் மறந்

தையோ, அன்றுநாம்சொன்ன வாக்கியமே வாக்கியம், சந்தேகப்பட வேண்டாம்; நிர்ச்சஞ்சலமான வாத்மாவே சர்வவுபாதி சூனியரான பராபரவத்து. (௬)

கொச்சகக்கலிப்பா.

"நாற்றமிகும் பூமாலை நற்குரங்கின் கைக்கொடுத்தாற்
போற்றிமணங் கொள்ளாவாம் புத்திதனக் கில்லாமை
வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைத்
தேற்றமிலி கைக்கொடுத்தேன் றேறுவனோ தேருனோ."

(எ-து) மணமிகுந்தபுட்மாலையை நல்லகுரங்கின்கையிலே கொடுத்தால், பாராட்டி யாக்கிராணித்தறியாவாம்; கூர்ந்தபுத்தி யின்மையினாலே தானும் பயனடையாது பிறரும் பயனடையாது எறிந்தாற் போலச் சரியை கிரியாயோகத்தா ரறியக்கூடாத வேதமுடிவிற் சிறந்தவுட்பொருளாகிய வுபநிடதமகாவாக்கியத்தை யச்சோ தெளிவில்லாத மாணுக்கன்கையிலே கொடாது கொடுத்தேன் றேறித்தெளிவானோ தேருதொழிவானோ வென்று சந்திரசேகரசுவாமிகள் திரியம்பகருக்கு மத்தியார்ச்சுனத்திற் றிருவுளம்பற்றியதா மறியக்கடவாய். ()

சத்தம் பிறவாவிடமே, அத்தனுரைத்ததறியாயோ, அன்றுரைத்தசத்தமே, சலனமில்லாச்சித்தஞ், சித்தமேசுத்தசிவம், சத்தம்பிறந்திடத்தே, நாற்றமிகும்பூமாலை, இவையின்முதலைந்தும் ஆதி. கடையிரண்டும் அநாதி. (அ)

திருமுகப்பாசுரம்-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## பத்தொன்பதாவது

## அதிகாரப்பிள்ளையட்டவணை.

சிவஞான மோகதாக மீதூர்ந்த அதிகாரப்பிள்ளை, ஈசனார் யார் என்னைமறைத்திருக்கும் பாசமியாதென்னும்விசாரமீக்கொண்டு கேட்கக் காரணஞானக் கண்ணுடையோன் சித்தாந்த மகாவாக்கியம் விவகரிக்கும்படி. சிவம் நானானேனென்ன நானானென்ன நீயுஞ் சிவம் எப்படியென்ன ஞானதீக்கையால், திருநோக்கால், திவ்வியபாவனையால், சிவயோகத்தால், திருவாக்கால், திருப்பரிசத்தால், சிவமானாயென்ன எனக்குண்டான அநுபோகசிவ மெங்குமுண்டோவென்ன அச்சிவமானது, பூதபௌதிகங்கடோறு முண்டென்ன. விந்த வாக்கியத்தாலுய்ந்து போனேனென்றானந்தமாக் கடலழுந்திய மாணாக்கனுக்கு மீட்டும் வற்புறுத்திமேற்கூறுவார்.

முதல்லாக்கியஞ் சத்து, இரண்டாம்வாக்கியஞ் சித்து, மூன்றாம் வாக்கியம் ஆனந்தம் ; முதல்வாக்கியத்தான் மலநாசனம், இரண்டாம் வாக்கியத்தாற் கன்மநாசனம், மூன்றாம்வாக்கியத்தான் மாயை நாசனம் ; முதல்வாக்கியத்தால் சஞ்சிதநீக்கம், இரண்டாம்வாக்கியத்தாற் பிராரத்தநீக்கம், மூன்றாம்வாக்கியத்தா லாகாமியநீக்கம் ; முதல்வாக்கியம் பிரமா, இரண்டாம்வாக்கியம்விஷ்ணு, மூன்றாம்வாக்கியம் உருத்திரன் ; முதல்வாக்கியம் ஞாதுரு ஞானஞேயமிறந்தநிலை, இரண்டாம்வாக்கியந் தற்போக்கு, மூன்றாம்வாக்கியம் ஞானகேவலம், இதற்குச் சாமியம், பதிபசுபாசவிளக்கம்,

“சிவத்துவமசிசிவோக மத்துமிசிவோயமத்தி
நவத்துதிவாக்கிய”—மென்னுந் திருவிருத்தம்,

முதல்வாக்கிய விசேடம் வருக்குதும். சிவனார் ? சீவனார் ? உபாதியொழிவிற் கூடாமற்கூடலைக்காணுதி. இரண்டாம்வாக்கியம் விசேடம்வகுக்குதும். சர்வமுங்கழன்ற சிவம், சர்வமுங்கழன்ற நான், சர்வமுங்கழன்றானேன். சர்வானந்த ஊற்றிற் பிரளயமுதித்தாற்போன்ற தன்மைகண்டையோ ? கண்டேன்,

“கண்டேனவர்திருப்பாதங் கண்டறியாதனகண்டேன்”—

சுவானுபூதிக்குச் சாமியம் வருத்தனம். மூன்றாம்வாக்கிய விசேடம் வருக்குதும். சர்வமுங்கழன்ற சிவன், பூதபௌதிகங்கடோறு முளன்,

"புல்லுயிர்க்குப்பூட்சி புணர்த்தாய்போற்றி
கல்லுயிராய்நின்ற கனலேபோற்றி"—

"உரைசேருமெண்பத்துநான்கு நூறாயிரமாம்யோனிபேதம்
நிரைசேரப்படைத்தவற்றி னுயிர்க்குயிராயங்கங்கே நிற்பா
ன்கோயில்"—

சிவானுபூதிக்குச் சாமியம் வருத்தனம். வாக்கியமேன்மை விசிட்டம் வருக்குதும்,

"*சிவத்தொமசியென்னும் திருவாக்காலென்றன்
பவத்தைநசித்த பரனே"—

(எ-து)சத்தியதிருவாணதீக்கையிற்செவிப்புலன்வழி வாதுளாகமத்துண்டாகிய மகா வாக்கியார்த்தத்தால் சிவம் நீயாறாய் என்று திருவாய்மலர்ந்து என்னுடைய வெழுவகைத்தோற்றப் பிறப்பை நாசம் பண்ணிய மேலோனே,—அவத்தையிலே என்பது,—கீழாலவத்தையிலேயும் மேலாலவத்தையிலேயுஞ் சுத்தாவத்தையிலேயும்,—சீவனென்றும், கேவலத்திற் சேதன னன்றென்றும்; என்பது,—சீவாத்மாவென்றும், அந்தராத்மாவென்றும், பூதாத்மாவென்றும், அநாதி கேவலத்திற் சேதனவியாபக னன்றென்பதே சித்தாந்தமென்றும், அசேதனன், சிதாபாசன், சதசத்தன், அகர்த்தா, ஆமயன், ஆணவமூடன், அசிந்தியன் என்று பலவாற்றானும்வந்த பாவனைகள்போமா பகர். என்பது,—நான் மூடன், நான் கிஞ்சிக்கியன், நான் சுத்தன், நானவலன், நான் பாவி, நான் சமுசாரி,நான் பிறப்பவன், நானிறப்பவன், நான் சீர்காழியிலேபிறந்தேன், சிதம்பரத்திலே வளர்ந்தேன், திருவாரூரிற்சென் றிறப்பேனென்னு மளவிறந்த பாவனைகள் போமாறறியாது புலம்புகின்றேற் குய்வண்ணங்காட்டி யுபாயஞானத்தாலுளவாகுமுபதேச ஞானமாத்திரத்தாற்போமாறு திருஞானசம்பந்தநாதனே திருவாய்மலர்.

---

"*சிவத்தொ மசியென்னுந் திருவாக்கா லென்றன்
பவத்தை நசித்த பரனே-அவத்தையிலே
சீவனென்றுங் கேவலந்திற் சேதனனன் றென்றும்
பாவனைகள் போமா பகர்"—

"¶பொன்மலையைச்சார்ந்த சிறுகாக்கைப்புள்ளினங்க
ணின்னிறமு மந்நிறமாய்ச் சாருமால்"—

(எ-து) மகாமேருவென்றுஞ் சாம்பூநதமாகிய வாயிரத்தெண்மாற்றுப் பொன்மலையிற்சேர்ந்த சிறிய காக்கைப்பக்ஷிகள் பொன்மயமாய்ப் பின் கருநிறம் நினைப்பினில்லாமையாய்ச் சாம்பூநதமாய்ச்சார்ந்த தன்மையைப்போன்று,

"————————————————முன்னவனைச்
சேர்ந்தாருமண்ணைச் சிவோகம்பாவித்தலா
லாய்ந்தவனே"—

(எ-து) உபாதிகுணிய சிவனையுபாதிகுணிய சற்சிவனாய்ச் சேராமற் சேர்ந்தாரும் பரமவித்திரமாகிய சிவோகஞ் சிவோகமென்று பன்முறையாற்பயிற்றித்தியானம் பண்ணலாலே பலநூலையுமாய்ந்து மகாவாக்கிய சிரவணப்படாதசமுசயாத்மனே,—ஆமாறறி, என்பது,இந்த இரண்டாம் வாக்கியத்தாற் சமுசயநிவிர்த்தி யடைந்து அது நீயான வண்ணங் குப்பக்காட்டுக் காக்கை நாமென்று நினையாத வண்ணம் போன்று என்றால் நீ யானெனதன்மையு முன்சிவத்தன்மையையு மிவ்வணமென் றறியாதறிந்துணர்ந் திந்நிலையிலேநிற்பாய் அடிக்கடிவாக்கியசிரவணத்தாற் சீவபாவனையைக் கழற்றி,

"*சீரார்சிவோயமத்தி யென்னுந்திருவாக்காற்
பேராசையெல்லாம் பிரித்தோனே"—

(எ-து) அழியாத சிறப்புடைய சிவன் பூதபௌதிகங்கடோறுமுண்டென்று திருவாய்மலர்ந்து பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரனிலும், பிருதிவி யப்பு தேயு வாயு வாகாசந்திலுஞ் சந்திரன் சூரியனாத்மாவிலும், பூமி யந்தரம் பாதாளத்திலு, மாண்பெண்ணலியிலும், விருப்பு வெறுப்பு ஞாதுருவடத்திலு, மிருக்கக்காட்

"¶பொன்மலை யைச்சார்ந்த சிறுகாக்கைப் புள்ளினங்க
ணின்னிறமு மந்நிறமாய்ச் சாருமால்-முன்னவனைச்
சேர்ந்தாரு மண்ணைச் சிவோகம் பாவித்தலா
லாய்ந்தவனே யாமா றறி"—

"*சீரார் சிவோயமத்தி யென்னுந் திருவாக்காற்
பேராசை யெல்லாம் பிரித்தோனே-ஆராத
வன்பாலுன் பாதத்துக் கர்ச்சனையு மற்றிரண்டி
லென்புருகும் பத்தியுமெற் கீ.

டியனித்தியத்தை நீக்கி நித்தியத்தைக் காட்டியநாதனே,—ஆராத வன்பால் என்பது,—இந்த மூன்றும்வாக்கியத்தா லாசைக்கிழங்கை யகழ்ந்தெடுத்த வல்லபத்தை நினைந்தமாத்திரத்தெழுந்த வன்பைப் பாழாக்காம லவ்வன்பால்,—உன் பாதத்தூக் கர்ச்சனையுமற்றிரண்டி, லென்புருகும்பத்தியு மெற்கே என்பது, சாமிகள் ஸ்ரீபாதங்களுக் கர்ச் சனையும் சிவலிங்கப்பெருமானிடத்திலேயுஞ் சரமூர்த்திகளாகிய சங் கமத்தினிடத்திலேயுங் கடின வெலும்புகளெல்லா முருகும்படிக்குச் சிவபத்தியு மடியார்பத்தியு மாயாவாதியைப்போலப் பாழ்போகாம லெனக் கநுக்கிரகம்பண்ணக்கடவாய். வாக்கியமேன்மை விசிட்டம் வகுத்தனம்.

வாக்கியசித்தாந்தம் வகுக்குதும். முதற்பதம் சச்சிதானந்தமாய், நிராமயமாய், நிட்களமாய், நின்மலமாய், யனந்தானந்தமாயிருக்கும். இதற்குச் சாமியம் ; பதி பசு பாசவிளக்கம். பதியிலக்கணம்,

"நிராமயமாய் நிட்டகளமா நின்மலமாய்"—

என்ற திருவிருத்தம், இரண்டாம்பதம். சராகாயமாய் நின்ம லோதகமாய் அகளங்கமாய் அபிவிர்த்தியாய்ச் சாங்குசித்தமாய்ச் சுசி ர்ப்பூதமாய்ச் சுத்தபடிக சங்காசமாயிருக்கும் ; இதற்குச் சாமியம்; பதி பசு பாசவிளக்கம். பசுவிலக்கணம்,

"ஆன்மாசுத்தன் சதாநித்தன்"—

என்ற திருவிருத்தம். மூன்றும்பதஞ் சுகோதயமா யிரண்ட ற்றவின்பமாய்த் தடையற்றவானந்தமாய்க் சமுசயஞசமாயிருக்கும்; இதற்கும் சாமியம் ; பதி பசு பாசவிளக்கம். நின்மலாவத்தையில்,

"போக்கிலேவரவிலே புணரக்கையிலே"—

யென்னுந்திருவிருத்தம். வாக்கியசித்தாந்தம் வகுத்தனம். மேல் வாக்கியவிசேடம் வகுக்குதும்,

"ஆக்கையே தானென் றபிமானி யாக்கிவிக்கு
மோக்கமிலே யென்றே முடிப்பிக்கும்-பூக்கமழும்
பூங்குழலா ரின்பப் புணரியைமெய் யாக்குவிக்கும்
வாங்குதலைச் செய்யா மலம்"—

(எ-று) ஆக்கையே யாத்மாவன்றிப் பிரத்தியேகாத்மாநாத்தி யென் றறிவைப்பிறித் தபிமானிப்பட்டங்கட்டு மகாவாக்கியத்தால் வரும் மோட்சானந்த நாத்தியென்றே சித்தாந்தப்படுத்திப் பூவார்ந்த வழகிய வளகபாரத்தையுடைய மாதர்பால்வரும் பொய்யாகிய வின்ப

வெள்ளத்தினை மெய்யாகவழுத்தி முழுகப்படுத்தும். எக்காலமும் விளைதலில்லாத வாணவமலம் பிரதமவாக்கியத்தி லசிபதத்திற் காண்பாய். இந்தப்பிரகாரத்தைச் சிவஞானப்பிரகாசத் தாண்மையிற்கண்டுதெளியக்கடவை. பதி பசு பாசவிளக்கம், ஞானவிளக்கம், உபதேசமாலை, சிவஞானப்பிரகாசம், அத்துவிதக்கலிவெண்பா, அதிரகசியம், சிவாகமக்கச்சிமாலை, இந்தவேழு மொருகொத்தாயிருக்கும். இவற்றிற் பதி பசு பாசவிசாரணையும், உண்மைநிட்டையும், தசகாரியவிசேடமும், குருசிரத்தையும், மகாவாக்கியமும், திட்சாக்கிரமமும், ஞானோபதேசமும், ஆகமசித்தாந்தமுங் காணக்கடவை. சத்திய நிருவாண தீக்கை யில்லாதவர்க் கிந்தமார்க்கம் போதிக்கில் நீரகுந்துமாவை யதட்டினோன் சாருங்கதியடைவை ;

"புண்ணுடலை நீப்பேனோ போன்றுத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ-வெண்ணுடை
வஞ்செழுத்தி னுண்மை யறிவேனோ வாங்கதனுட் [ய
பிஞ்செழுத்தைப் பின்னிடு வேனோ."—

அதிகாரப்பிள்ளையட்டவணை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## இருபதாவது

## மரபட்டவணை.

### உபதேசமரபு

### இதுகர்ணபாரம்பரை.

(சிவமேவம்பரந்தெய்வம்) என்னுங் கருத்தைப்பற்றித் தெய்வ மென்பதோர் சித்தமுண்டாகிச் சிவனென யானுந் தேறினன் றேறிய காலைத் தேயத்துளரேயென்றித் தேயத்திற் சிறந்த சினகரத்துளரே யென்று மனந்தடுமாறி மயங்கியகாலை யறிவிடைமறைந்த வமல னோர் குருவாய்ப் புவனியிற் சேவடிதீண்டிப் போதித்த வான்மொழி க்கு அருத்தம் பூதப்பழிப்பிலும் பொறியறவுணர்த்தலு மந்தக்கரண வடுக்கழிமுடிவினும் கண்டேனவர் திருப்பாதங் கண்டறியாதன கண் டேன் கண்டபெருமிதத்தா னிறும்பூதிட்டு மாலயனறிவை யலர்தூற் றுக் கூற்றுக்குணஞ் சிலவருமாயிற்று,

"நாடிநாரண னான்முகனென்பவர்
தேடியுந்திரிந்துங் காணவல்லரோ
மாடமாளிகை சூழ்தில்லையம்பலத்
தாடிபாதமென் னெஞ்சுளிருக்கவே"—

என்றாரின்னும் பற்றத்

"தேடிக்கண்டுகொண்டேன் றிருமாலொடுநான்முகனும்
தேடியுந்தேடொணாத் தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன்"—

என்னுமிக் கூற்றுக ளுபதேசமரபு.

### வைதிகமரபு.

வையச்சொல், வழக்கச்சொல், வேதச்சொல், விதிச்சொல் இந்த நான்கானும் வற்புறுத்திக் கூறுவான் றொடங்கினார். உலகவெறுப்பு முடல்வெறுப்பு மீக்கொண்ட மாணாக்கனுக்கு ஞானதேசிகர் திட்டா ந்தமுகத்தால் அனித்தியதரிசனம் வையச்சொல் மேல்வைத்துக் கா ட்டுகிறவண்ணம், (நடலைவாழ்வுஞ் சுடலைக்குடியிருப்புமென்றும்,

காணப்பட்டதெல்லா மழியப்பட்டதென்றும், சாகாதநாட்டிலேலோலை வாங்கிவந்தோமோ வில்லையேயென்றும், இன்றைக்கோ நாளைக்கோ வின்னமறை நாழிகைக்கோவென்றும், வரவிட்டவன் றரவிட்டால் நில்லாதேயென்றும், நிலத்திலெழுந்தபூண்டு நிலத்திலே மடியுமென்றும், நேத்திருந்தாரின்றைக்கு நீறுனொன்றும், நிட்டெனவிழுந்து பொட்டெனப்போம்) என்றும், இவ்வாறு வருமனந்தவையைச் சொல்லாற்றெளியக்கடவை. இந்தச் சரீரம் நீயல்ல; நீ யசரீரி. அகாயன் ஆத்மாவென்று வேதம்வெகுவசனமாகச் சொல்லும். இது என்னநுபவத்துக்குப் பற்றவில்லையே யென்பாயேல், வழக்கச்சொல்லாற்றெளியக்கடவை. (நான்சாட்சியாயிருக்கிறேனென்றும், தன்னை விடப்பிரபஞ்சமில்லையென்றும், தானேயின்று தனமாய்ச்சொரியுதென்றும், அஞ்செழுத்தும் பாவனையு மவனே யிவனென்றும், தானே சிவமல்லாற் றனிச்சிவம் வேறில்லையென்றும், சிவனுக்குஞ் சிவனுக்குஞ் முதற்சிகாரச்சுழியாகிய நீயன்றி வேற்றுமையில்லை) யென்றும்,

"அறிவேசிவமென் றறிந்திலாய்கொல்லோ"—

வென்றும், இவ் வழக்கச்சொல்லால் ஆத்மா நாமென் றறியக்கடவாய். இங்ஙனஞ் சொல்லிய வநுபவம் சம்பவமாகவில்லையே யென்பாயேல், வேதச்சொல்லாற்றெளி, அஃதெங்ஙனம்? என்னில்,

"பாசபத்ததேசீவா பாசமுத்தேசதாசிவா"—எ-ம்,
"திட்டேபூர்வமாத்மா யேகமேவா"—எ-ம்,
"சரீரபின்னம் பரமாத்மனேகம்"—எ-ம்,
"ஏகப்ரம்மம்"—எ-ம்,
"சர்வசாட்சி சிவோகம்"—எ-ம்,
"பிரத்தேகாத்ம சிவோகம்"—எ-ம்,
"சமனுந்தம்பாசசால முன்மனுந்தம்பரசிவா"—எ-ம்,
"சிவோதாதா சிவோபோக்தா"—எ-ம்,
"அன்னம்ப்ரம்மா ரசேர்விஷ்ணு
போக்தாதேவோ மஹேஸ்வரா"—எ-ம்,
"கர்த்தாபோக்தா செனார்த்தனு"—எ-ம்,

ஆயிரமுகத்தாலு மகலச்சொல்லிய வேதச்சொல்லா லீசுரருண்டென் றறியக்கடவாய். சமுசய மென்னைவிட்டு நீங்கவில்லையே யென்பாயேல், விதிச்சொல்லவேண்டுமாறு வரும். அதனாற்சமுசயம் நீங்கக்கடவாய். அஃதெங்ஙனம்? என்னில்,

"சீவனைச்சிவனுய்த் தெளியார்களே"—எ-ம்,
"தன்னையர்ச்சிக்கத் தானிருந்தானே"—எ-ம்,
"தேவனைங்கோமினிச் சிக்கை தெளிந்தனம்
பொய்வனைங்ரும் பொருளாயிருந்தோமே"—எ-ம்,
"நானேநீயாய்நீயேநானுய் நானுமேவுதப்பொருளாலு
நாடாவீடாயீடேறுதே நாயேன்மாயக்கடவேனே"—எ-ம்,
"நிச்சமென்னெஞ்சின் மன்னி யானாகிநின்றனனே"—எ-ம்,
"நீராயுருக்கியென் னுருயிராய்நின்றானே"—எ-ம்,
"யானுந்தானுயொழிந்தானை யாதுமெவர்க்கு முன்னேனை"—
"பேசுவானு மீசனே"—எ-ம்,　　[எ-ம்,
"என்னகத்துளென்னையன்றி யாதுமொன்றுகண்டிலேன்"—
"பாவமுமறனுமொத்துப் பக்குவம்பருவமுமுற்றிங்　　[எ-ம்,
காவியைம்புலனைப்பற்று தகமுகமாகியென்று
மோவியம்போன்றிட்டங்க ளுணருணராமைபோக்கும்
சீவனுஞ்சிவனும்வேறு இருப்புலிவனத்துளானே"—

என்றும், இங்ஙனஞ் சொல்லிப்போந்த மாற்றத்தால், நீயே அறிவறியாமை இரண்டிற்குஞ் சாட்சியாகையால், இந்த அறிவாய்ச் சதாகாலமு நிற்கக்கடவாய். சாமியம்,

(பிர்மசாரியர் விரதமக்கினியில் வீழ்தல் பிண்டோதக் கிரிகையொடு பிரவுதகநிவிர்த்தி, புரியுமருச்சனைகள் வரைபாய்தல்சுழிபாய்தல் புண்ணியபாவங்க ளருணியம்முபவாசந், தெரிசீவன்முத்தனுக்கு வேண்டுவதேயில்லை சிவஞானவமுதபானம் பண்ணிக்கொண்டு, பரசிருட்டிக்கன்மத்தி லகப்படாதென்றும் பரமசிவனைப்போல நித்தனுயிருப்பன்.)

## சைவமரபு.

ஆத்மாவைச் சிவனென்று சொல்லப்படுமோவென்னுஞ் சமுசயத்துக்குச் சிற்பன்முதலிய வுவமைகள்வருமாறு; சிற்பன், சிலை, தெய்வம் என மூன்றும். இதிற் சிற்பனைப்போல ஞானாசாரியர், சிலையைப்போலச் சீவன், தெய்வத்தைப்போலப் பரமசிவம். சிற்பன் சிலையைத் தெய்வவுருவாய்த் தியானித்துச் சாங்கோபாங்கயமாய்ச் சிற்பநூலைத் தழுவிச் செய்தமையாற் சிலையென்பது மறைந்து சிவமென்பது பிரகாசித்ததாம். ஆகையால், சீவபாவனையை யதார்த்தமாய்

விடக்கடவன். சிவபாடாணத்தைச் சிவமேலிட்ட வாசாரியாகிய சிற்பன் சிவபாவனையைச் சேர்த்து மகாவாக்கியத்தாற் சிவம் நீயாறு யென்றமாத்திரத்தே சிவமான தன்மையாற் சிவபாவனையை யெப்பாலும் நாத்தியென்பதே சித்தாந்தம். வேடச்சேரி, வேடர், ராசாப்பிள்ளை, வேட்டைவனம், வேட்டைநாய், வேடக்கோலம், ஆக-௬. வேடச்சேரி-யஞ்ஞானம், வேடர்-பஞ்சதன்மாத்திரை, ராசாப்பிள்ளை-ஆத்மா, வேட்டைவன-முலகம், வேட்டைநாய்-அந்தக்கரணம், வேடர்கோலம்-சரீரம் ; ஆத்மாவாகிய சிறுபிள்ளை, அஞ்ஞானமாகிய வேடச்சேரியை முன்னைவினையா லடைந்து, நாம் சைதன்னியனென்பதை மறந்து, வேட்டைவனமாகிய வுலகத்தையடைந்து, வேட்டைநாயாகிய வந்தக்கரண வசத்தனாய்த் தசேந்திரிய துவாரத்தினால் வேட்டைக்காரராகிய தன்மாத்திரையோடுங்கூடித் தயிலதாரைப்பிரவாகனாதிய வேடக்கோலச் சரீரத்தைத் தழுவிச் சிவாத்மாவென்னும் நாமஞ்சிறப்பவந்தான். இது போமாறு. ஞானவரசன், ஞானவேட்டையாடுவான்காலைக்கண்டு, சிவராச வேடப்பிள்ளாய் நீ நம்மினத்தாய் ; அஞ்ஞானவிளமையா லென்னைமறந்தாய் ; என்வண்ணமே நின்வண்ணம் அன்னியர்வண்ணம் நின்வண்ணமன்று. அந்தக்கரண ஞாளிசம்பாடன முனக்கடாதென் றநுக்கிரகித்தார். சைதன்னியத் தராபதியாக்கின தன்மைபோலச் சிவவேடு நீக்கங் கண்டு கொள்க. சாமியம்,

“மன்னையுமறந்துமிக்க வனசரவடிவமாகித்
தன்னையுமறந்திருந்த தனயனைப்போன்றுநீயு
மென்னையுமறந்தைம்போத வெயினர்தம்வடிவமாகி
யுன்னையுமறந்தால்நீயென் னுருவெனவுணர்ந்துகொள்ளே”

“மன்னவன்றன்மகன்வேட ரிடத்தேதங்கிவளர்ந்தவனை
அறியாது மயங்கிநிற்பற்”—

“தானாக்கி மழாரடிக்கீழ்வைப்பன்”—

கன்மவொப்பு. நல்வினையுந் தீவினையு மொன்றாகக்காண்பது. அஃதெவ்வாறாமெனின், பொன்விலங்கும், இருப்புவிலங்கும் பிரகாசம் அப்பிரகாசம்வேறன்றித் துக்கமிரண்டிற்குஞ்சரி. பொன்விலங்கைப்போலப் புண்ணியம். இருப்புவிலங்கைப்போலப் பாவம். விலங்கார்ப்புண்டவனைப்போலச் சீவன். விலங்கைப் பூட்டினவனைப்போலச் சிவன். துக்கத்தைப்போல அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்துக்குச் சாட்சிபூதம் நாமென்றறியின் அஞ்ஞானமுமில்லை. நல்

வினைதீவினையாகிய விலங்குமில்லை. அதற்குமுன்னே நரகசொர்க்க முமில்லை. இதற்குச் சாமியம்,

"ஒன்றுடனுந்தோய்வில்லான் என்றுநினைந்
தடிக்கடியும்பிரமமென நோக்குதலேயியல்பதாமே"—

"நித்தனும்பரமீசன் யானென்றுநிச்சயிக்கின்
முத்தனலனெனினு மவன்முத்தனும்"—

"பூவும் புகையுங் கொண்டேத்திப் புறம்பே போய்ப்
பாவனையால் வாளா பரிசிழப்ப-ராவா
நமையுறப் பார்க்கிற் றெய்வ நாமேயா மென்று
தமையுறப் பாராதவர்க டாம்"—

"ஆகநாமல்லவிந்த வைம்பொறிநாமேயல்ல
வேகனேநாமென்றுன்னு மிருடிகளிதயத்துள்ளாய்
பாகமாமுமைமணாள பசுபதிபிறவிவேண்டேன்
சேகறுமுத்திவேண்டுந் திருப்புலிவனத்துளானே"—

மாயையென்பது மனம். இந்த மனமாயையிலே அண்டபிண்டம் அரிகரப்ரம்மாதி நவந்தருபேதமு முண்டாயிற்று. இந்த மனஞ் சற்குரு கடாட்சத்தா லிறந்தபோது எல்லாமிறந்தது. அறிவாய்நின்றால் மனமில்லை. மனமாய்நின்றா லறிவில்லை. அறிவே சிவம்; சிவமே யறிவு; மனமே மாயை; மாயையே பிரவஞ்சம்; பிரவஞ்சமே சரீரம்; சரீரமே தத்துவம்; தத்துவமே நாதம்; நாதமே விந்து. இப்படி சிருட்டிமார்க்கங் காணக்கடவை. சாமியம்,

"அறிவினிலகமுண்டாகி யகத்தினின்மனமுண்டாகிப்
பிறிவருமனத்தின்மாயை பிரவஞ்சமாயைதன்னின்
மறிவுலகத்தினுக்கை வந்தவிம்மாயமெல்லாஞ்
செறிதராதருளிச்செய்யாய் திருப்புலிவனத்துளானே"-

ஆகாசவுவமைகள் வருமாறு. ஆகாசம், கடங்கள், கடாகாசம், கடசலம், கடசலவழுக்கு, ஆக-ரு. ஆகாசம்போலச் சிவன். கடங்களைப்போலச் சரீரம். கடாகாசம்போல வாத்மா. கடசலத்தைப் போல வந்தக்கரணம். கடசலத்தழுக்குப்போலப் பஞ்சபாசம். இந்தச் சிருட்டிக்குச் சங்காரமுண்டோ? உண்டு, எப்படி? சூரியன் சந்நிதானத்தில் சலம்வறண்டு அந்தோடே அழுக்கும்போம். கடாந்தத்திற் கடாகாசம் மகாகாசமாம். புண்ணியபாவம் ஞானிக்குண்டோ?

பஞ்சபாசங்களும் பஞ்சஞானங்களாற்றனித்தனி நீங்கும்; பஞ்சஞானமாவது சொற்சொரூபம், பரசொரூபம், புருடார்த்தசொரூபம், உபாயசொரூபம், விரோதிசொரூபம். சிவனுடையநாயகி சிவகாமி என்றாற்போல, ஆத்மாவுக்கு ஆத்மநாயகி யென்றுண்டானது. அது சிவத்தோடு கலந்தபோதும் உண்டோ? என்னில், அப்போது அவனே யிவனும், அவளே யிவளுமாம். அது என்போலவென்னில், சந்திரனும், சந்திரிகையும், அமாவாசியிற் சூரியனோடொன்றி அது இதுவாய் நிற்றல் போலாமென்றறி. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"பாசத்தாற்பாசத்தோடும் பதிந்திடப்பசுவார்நின்பாற்
காசற்றவிழியார்போலக் கலந்தபின்பிரிவதில்லை
யாசற்றநீயும்நானு மன்னியமின்மையாலே
தேசத்தாற்பரவலான திருப்புலிவனத்துளானே"—எ-ம்,
"ஈண்டியமாயாவிருள்கெட வெப்பொருளும்விளங்கத்
தூண்டியசோதியைமீனவனுஞ் சொல்லவல்லனல்லன்"—
எனவும் வரும். (௫௪)

ஒருமனிதன், பரமசிவ சொரூபமாவது அதிசயமன்றியடாதே? ஆகமஞ் சொன்னால் உனக்கேன் சமுசயம்; ஆகமமே, சிவன்வேறு சீவன்வேறு ஆண்டவனடிமைக் கழிவுவாராதென்று சொல்லுமே. அதுவெல்லாம் பூர்வகாண்டம்; உத்தரகாண்டத்திற் சொல்லுகிறதைச் சொல்லுகிறேன் கேள். ஒரு குளவியாற் கீடத்துக்குக் கீடத்துவம்போய்க் குளவிசிந்தனை முற்றமுற்றக் குளவியான தன்மையும், ஒரு பாடாணஞ் சிற்பனால் வேதாங்கப்படி செய்யத் தெய்வமான தன்மையும், ஒருவிழல் ஆறு அமாவாசிப் பிடிங்கிப்பிடுங்கி நட விலா மிச்சியான தன்மையும்போல,

"சீவன்றீக்கையாலுஞ் சிவஞானத்தாலும் சிவமாவன்"—
என்று,

சர்வக்கியானோத்தரம், தேவிகாலோத்தரம், வாதுளாகமமுதலியவைசித்தாந்தப்படுத்தும்; ஆகையால், பூர்வகாண்டம் பொருளல்ல; பொருளென்னில்-உனக்கனுபவகாலஞ் சமீபமில்லையென்பது வாந்திரியும். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி?

"இட்டபுகீடமல்ல கேழ்கிளர்குளவியாலே
யாட்படவதுதானே தகிசயம்போலுமம்ம

சோகம்பாவனை, பூசை-சமதரிசனம், அநுட்டானஞ்-சிவோகம், சந்தியாவந்தனம்-மகாவாக்கியம், வந்தனைவழிபாடு-தற்செறிசனம், சமதி-சிவதெரிசனம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"வடிவிலாவடிவினின்று மனமிலாத்தொழில்குயிற்றி
யடிமுடியில்லாஞான வாரமுதுண்டுளிம்போர்
படுகுழியனையபெண்டீர் பாழ்நரியனையமைந்தர்
செடியுடையாக்கைவேண்டார் திருப்புலிவனத்துளானே"

—எனவும் வரும். (ருசுக)

சிவாஞானிகள் பஞ்சாக்கரத்தின் முத்தியானந்தம் பெற்றிருப்பதெப்படி? என்னில், நகாரமாகிய மாயையை நாமல்லவென்றுநழுவாமணழுவி, மகாரமாகிய வாணவமறைப்பு நீங்கி, யகாரமாகிய வாத்மதரிசனம்பண்ணி, வகாரமாகிய தாயைக்கண்டு, சிகாரமாகிய பிதாவைத் தாயாற் கண்டுங்காணுமற் சுவானுபவத்தி லழுந்தியிருப்பர்கள். அழுந்தல்வேற்றுமையைக் காட்டாதோ?என்னில், அழுந்தலென்றது ஒப்பனை. இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி ?

"நகாரத்தின்மயலேஞான வாளினாறுக்கிப்பின்னர்
மகாரத்தின்மறைப்பைநாமே மணியெனமதியால்வாட்டி
வகாரத்தின்வழியேசென்று மாலயனறியாதெங்குஞ்
சிகாரத்தைக்கண்டேநின்றாற் றிருப்புலிவனத்துளானே"

— எ-ம்,

"மந்திரமாவதுமஞ்செழுத்தே யந்தமந்திரத்தி
னைந்துபொருளையுங்காட்டி யிரண்டின்வழியடைத்து
மூன்றுமிரண்டின்வழிநயத் திறந்துயர்முத்திதந்தான்
கந்தன்கணபதிக்கப்பன் கலிக்கச்சியேகம்பனே"—

எனவும் வரும். (சுo)

தற்போக்கே சிவமாய்த் தானில்லாமையே அதற்கடையாளமாய்க் கண்டமகத்துக்கள், திருநடனதரிசனங் கண்டிருக்கும் வண்ணஞ்சொல்லில், ஆனந்தமூர்த்தி நடனத்துக் காடரங்கம் ஆத்மாவாக, ஆத்மா அபேட்சை உபேட்சையென்னு மிரண்டு கண்களையுமூடி நிர்வாணபதத்தை நினையாமல் நினைப்பதே நடனதரிசனம். இதற்கு வசன முண்டோ? உண்டு, எப்படி ?

"நோயிலாவாக்கைபெற்று நுண்ணறிவுடையராகித்
தாயினுமினியநின்னைச் சமாதியிற்காணமாட்டார்

மாயையால்வகுக்கப்பட்ட வடிவிடைநின்னைக்காணச்
சேயராயரற்றுகின்றார் திருப்புலிவனத்துளானே"—
எனவும் வரும். (சுக)

சிவஞானியைப் பிராரத்தம்வாதிக்குமோ? வாதியாதோ? வெகுமுகத்தில் வாதிக்கும்; அகமுகத்தில் வாதியாது. அகமுகமானால் வெகுமுகம்வருமோ? அதுதான் பிராரத்தவாசனை. இந்த வாசனை கிருஷ்ணர், ஸ்ரீராமர், சுகர், வாமதேவர், நந்தி, பிருங்கி, வசிட்டர், வான்மீகி இவர்களிடத்திலுங்காண்க. இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"அமைத்தபடியெல்லா மனுபவிப்பதன்றியே
யுமைக்குரியோனலு மொழிக்கமுடியாவே"—எ-ம்,

"ஆழியானு மயனுமறிகிலா
வேழைபங்கனை யன்றியிருமிலத்
தூழைமென்றவ ருண்டுகொலோசொலாய்
மாழைபோன்ற மலர்ந்துளஞாழலே"—எ-ம்,

"தனுவொடுகலவாராயின் சார்தராவினையிரண்டுந்
தனுவொடுகலத்தலாலே சார்தரும்வினையிரண்டு
மனமொழிகாயமூன்று மவனுமுத்திரையினிற்பச்
சினமயலகன்றோர்போற்றுந் திருப்புலிவனத்துளானே"
—எனவும் வரும். (சுஉ)

சிவயோகிகள் சிவாலயதரிசனம், குருதரிசனம், சங்கமதரிசனம், செய்வாரோ? சிவனே ஆலயமாகவும், சிவமே குருவாகவும், அறிவே சீடனாகவும் தரிசிப்பர்; தன்னைச் சிவாகாரமாவதே சங்கமமாகவுந் தரிசிப்பர்; சிவாலயமாகவுந்தரிசிப்பர்; இப்படி மூவகைப்படுமோ? என்னில், உபசாரமன்றிச் சுபாவத்தில் ஒன்றேயாம். இதற்கு வசனமுண்டோ? உண்டு, எப்படி?

"குறியறிவாருங்கோயில் குறிப்பருமாவியாகு
மறிவுசங்கமமேயெல்லா மறிவெனக்கண்டுகொண்டேன்
றறியெனவுடலுங்கண்ணுஞ் சமாதியிலிருக்குங்காலைச்
செறிபவமினியெற்குண்டோ திருப்புலிவனத்துளானே'
—எனவும் வரும். (சுரு)

சிவயோகிகள் சிவதரிசனம் பண்ணுவாரோ? பண்ணின், மனவாக்குக்காயம் அசையாதோ? அசைந்து மசையாத நிலையிலிருப்பர். போகம்-போக்கியம், சாமி-சாமியம், சாக்கி-சாக்கியம், இரண்டுவகுப்புமின்றி நித்தியானந்த தூரியத்தில் தேகபரியந்தம் வரவும்போக்குமிருக்கும்; ஆகையால், வழிபடுவோரைக்குறித்துச் சிவகரமே தேகமென்றும், சிவமே தாமென்றும் நினைப்புள்ளமட்டும் நினைப்பர். பஞ்சபாசங்களுக்குஞ் சாட்சிநாயகர் தாமானபடியால், அந்த அனந்தானந்தத்தை என்னென்று சொல்லுகேன். கடைசாரஞ் சிவாத்மாவே பரமாத்மா; பரமாத்மாவே சிவமானாற் சைவசித்தாந்தம் ஒப்புக்கொள்ளுமோ? பூர்வகாண்டத்திற்குத் தள்ளுபடி; உத்தரகாண்டத்திற்குச் சம்மதம். இதற்கு வசனம் உண்டோ? உண்டு, எப்படி?

"வானகமண்ணகம் வளைந்துதிரியினு
ஞானிகள்வாய்மொழி நாம்பலகேட்பினுந்
தானேசிவமலாற் றனிச்சிவம்வேறிலை
மோனநிலையிதுக் கையமுமுட்டுமே"—எ-ம்,

"சைவசித்தாந்தமெல்லாந் தானவனாகிநிற்றல்
மையறுவேதசித்த மற்றதுநானேயென்ன [லாபஞ்
லுய்வகைக்கிரண்டுமொன்றென் றோதியென் னுயிர்க்கி
செய்தசற்குரவனீயே திருப்புலிவனத்துளானே"—
—எனவும் வரும். (௬௪)

இந்த அறுபத்துநாலு சங்கையும், அறுபத்துநாலு கலைக்கியானமும் இதற்கு யோக்கியம்; திருவாணைஇட்சைபெற்ற சத்துக்கள் இதனாற் பஞ்ச பாசத்தினின்றும் விடுபடுவர்.

## சிவயோகிவாக்கு நான்மறைவேதம்,

அறுபத்துநாலுசங்கை - முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினைந்தாவது

## தசவழக்குச்சிந்தனை.

சிந்தனையென்பது, ஆகமவாக்கியங்களா யுள்ளவை. அஃதெத்தனை? ஏகசிந்தனை, துவிதசிந்தனை என்றிருவிதம். அதில், துவிதசிந்தனை யொழிப்பான்பொருட்டு ஏகசிந்தனை வந்தனவாம். இதற்குச் சாமியம்;

"சிந்தனையைத் தந்தென்னைச் சிவமாக்கியாண்டானை
சிந்திக்கச்சிந்திக்கத் தர்ப்பணத்தைவிளக்க
வந்திடுமெவ்வொளிபோல மருவியரனுளத்தே
வரவரவந்திடுவன் பின்மலமானதறுமே"

### பிரதமந் திருமேனிகொண்டவழக்கு.

சிவனுக்குத் திருமேனியில்லை; எங்ஙனம்? என்னில், ஆகாசமே பிர்மத்துக்குச் சரீரமென்று வேதஞ்சொல்லும். அஃதன்றியும், அனுதிதொடுத்து இற்றை வரையுஞ் சிவனுருவமாய் வரக்கண்டோமில்லை. ஆனால், அட்டமூர்த்தி, அண்ணுமலை யென்பதும், மந்திரசொரூபி யென்பதும் பொய்யோ? என்னில், அஃதெல்லாம் தியானமாத்திர மன்றிப் பயன்படாதேயென்னில். உன்னைப்போலச் சண்டிதப்பட்டு மலசரீரியாய்க் காமாதிகுற்றங்களோடுங் கூடிநின்றால், அப்போதிவன் தான் சிவனென்றறிவை; இந்த அறிவையாரோ உனக்குப் போதித்தவர்! அவரோ குருட்டுக்குரு, நீயே குருட்டுச்சீடன் பேதாய்! இந்த வழைமதியாலேயன்றோ பிறந்திறந்தாய்; ஆகையாற் சிவனுக்குத்திருமேனி யுண்டென்பதே சித்தாந்தம். சாமியம்;

"அருளே திருமேனி யான்மாத்திருமேனி
குருவேதிருமேனிக் கொள்"—

"அறிவுக்கறிவா யறிவிப்பான்சில்லோர்க்
கறிவுருவுகொண் டருளுவான்
எங்குமிலையென்பா ரிதயந்தொறுமறிவா
யெங்குமிருப்பா னெம்மிறை"—

(நாதவிந்துகளாதீத நமோநம: வேதமந்திரசொரூபாய நமோநம:) என்னுந் திருவாக்குகளா லறியக்கடவாய்.

## அவிநிலைய யுயிர்வழக்கு.

சிவனுக்குத் திருமேனியுண்டாகில், இந்தச் சிவனையன்றி ஆத்மாக்களில்லை; எங்ஙனம்? என்னில், சருவதேகங்கடோறுமாய் நின்று உண்ணல் உடுத்தல்முதலிய காரியங்களைச் சிவனே செய்வன். அன்றியுஞ்சுருதி "சரீரபின்னம், பரமாத்மனேகம்" என்றுசொன்னமையால் ஆத்மா நாத்தி; ஆனால், உன்பெயர் மாயாவாதியோ! அனீச்சுரவாதியோ! இருபெயரும் உனக்கே தகும்; இந்தக்கொச்சை மதியாலே யன்றோ,

"மாயவாதமென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித்தார்த்து"—என்று,

மாணிக்கவாசகரால் தூற்றப்பட்டாய், மதிகேடனே! உயிருண்டு நரகசொர்க்கஞ் சிவனுக்கோ? சீவனுக்கோ? சிவனுக்கே ஆனாற் சிவனெங்கே? நீதான். என்றுக்கெனக்குண்டோ வில்லையோ? என்னில், உண்டில்லையென்பதே நாக்கென் றறிந்தாற்போலச் சீவனையறிவாய். மூடனைச் சீவாத்மாவென்றும், விவேகியைப் பரமாத்மாவென்றும், சொல்லுகையாலும் சீவனுண்டு. கருவியோடுங்கூடினதே உயிர்க்குப்பிறப்பு; கருவியைப் பிரிந்ததே உயிர்க்கிறப்பென்றறி; சிரசிலே மயிருண்டானதுபோல, நாயன்மார் உள்ளத்திலே உயிருண்டென்று மதிக்கப்பட்டது. உள்ளங்கையிலே மயிர் கொத்துக்கொத்தாய் முளைத்தெழுந்த கதைபோல, உன்னறிவிலே உயிரில்லையென்று மதிக்கப்பட்டது. உன்கண்ணறி உடைமைக்கேற்கக் கழறினை. கோட்டான் சூரியனில்லையென்றால் ஆர்தானொப்புக்கொள்வார்; இதற்குச்சாமியம்,

"ஊமனொளியில்லையெனி னொப்புவரோ மற்றதுபோ
லேமவுயிரின்றென்பாரில் உவனுவனதுவெனுமுறை மு
தோன்றிநின்றழி முத்தொழிலுளவதனும் [ச்சுட்டாய்த்
சிவனுண்டவனும் சீவனுமுண்டாங்
கழிவினைமறைக்கு மவிச்சையுமுளவே
உடலிறந்தழுதிரோ உயிரிறந்தழுதிரோ [ங்கண்டு
உடலிறந்தழுதிராகில் லுடலனையன்றுங்கண்டு ரின்று
ருயிரிறந்தழுதிராகி லுயிர்தனையன்றுங்காணீ ரின்றுங்
[காணீர்"—எ-ம்,

"இல்லையுயிரொன் றுளைக்கு முளைக்குளிருக்குமுயிர்
தொல்லையுயிரிலையென்பவனே யுயிர்தோன்றிடலு
நல்லமலர்மணம்போலுயிர் நாதனுநண்ணுமென்றுநன்
கல்விற்புறப்பட்ட கையுடையான்கச்சியேகம்பனே"—

(உளதிலதென்றலியியந்திரதனுவினான்மா) என்னுந் திருவாக்கால் அறியக்கடவாய்.

## நிரிநிலையி யாணவவழக்கு.

ஆத்மாவுண்டு; ஆத்மாவைப் பஞ்சபாசத்தி லாணவமறைக்குமென்பது கூடாது. ஏன் கூடாது? ஆத்மா சுயஞ்சோதி, அசரீரி, அநாமி, அவிகாரி, நிரவயன், அநந்தாநந்தன்; ஆகையாலாணவ மறையாது. உன் பெயர் அகம்பிரமவாதியென்றுயர்ந்தோர் சொல்லுவர்; கெடுவாய்? பிரமன், நான் பிரமமென்று பட்டபாடும், புருடோத்தமன், நான் பிரமமென்று பட்டபாடும், புராணங்களிற் கேட்டறிந்ததில்லையோ! ஆகையால், உன்கருமமே கட்டளைக்கல்லாயிற்று. பேதாய்! இந்த மதியைக்கொண் டெங்ஙன்பிழைத்தாய்! இத்தனைகோரணிக் கிடங்கொடுத்ததே அஞ்ஞானம்! குழந்தையைப் பராக்குச்செய்வதுபோல, நாடோறு முன்னை விடயப்பராக்குச் செய்வதாணவம்; அன்றியும், (உன்றுணைவத்துக்கசதிவந்ததில்லையோ; வென்னும் வையச்சொல்லானு மறியக்கடவாய்; இதற்குச் சாமியம்,

"அன்னியத்தைக்காட்டிய நன்னியத்தைத்தான்
மறைக்குமென்னே மலத்தினியல்"—

அன்னியமானவற்றையுணர்த்தி யன்னியமாய் நிறைந்த வறிவறியாமையாலும் மலமிலை மாயை மறைக்குமென்னில்,

"மலகுணமறைந்தல் மாயையிளக்க
லளைபுக்கொடுங்கிய வரவின்வாலுள
தலையிலையென்னல் சவலைச்சொல்லே"—

ஆனால், இந்த மலம் அநாதியோ? ஆதியோ? அநாதியென்னில் நீங்காது. ஆதியென்னின் நீங்கிப் பின்னுமாவரிக்கும். பாலுக்கு வெண்மையும், கரிக்குக் கறுப்பும் இயற்கை. சுக்கிலாம்பரத்துக்கு அழுக்கேறல்செய்கை; ஆனால், இந்த இருதலைக்கொள்ளிக் கிடைப்பட்டயான் போம்வழி, பன்னிரண்டுவெருடங் குருக்கிடை.

## சதூர்த்தி மாயைவழக்கு.

மாயையேயில்லை; எவ்வாற்றானில்லை? சருவம்பிரமமயமென்று சுருதிசொல்லும்; அதன்றியுங் காணப்படுவன, கேட்கப்படுவன, உண்

பண, உடுப்பன, கலியாண, நிரியாண முதலியவெல்லாம் பிரமமென்று என்னனுபவத்துக்கே யொக்கும்போலும்; ஆயின்முன்னே ஒரு சர்வ சீவதயாபரக்கொக்கு நாமமாத்திரஞ் சிறப்ப, ஏரி, குளம், மடுக்கள், குட்டையிலுள்ள மீனெல்லாந் துய்த்த கதையை விளக்க, நீயும் அவி காரவாதிப் பட்டங்கட்டிக்கொண்டு, கிருட்டினவிலாச புத்தகத்தைக் கைப்பிடித்து, மேலுஞ் சர்வாத்மாக்களும் போம்வழி தூர்த்தனை. மாயையிலே அகப்பட்டுக்கொண்டு விழிக்கிறதும் வனிதையருபத்தத் திலே சிக்குவைப்படுவதும் உனக்கேதெரியும். மத்திமப்பேதாய்! தற் போதச்சிவன் மற்ற நாதாக்கள் அனுபவநிலையை யறியாது பிதற்று கின்றனை. உன் கருமமே கட்டளைக்கல்லாயிற்று. சாமியம்,

> "ஒருமலவழக்கு மிருவினைத்தொடரு
> மும்மலச்செருக்கு நால்விதவாக்கு
> மைவகைப்புலனு மறுவகைக்குற்றமு
> மற்றாலன்றி யறிவாகாயே"—எ-ம்,

> "மாயையேயுடலமாகும் யாவையுமாயையாமே"—எ-ம்,

> "ஆகையாலிந்தமாயை யறிவினைமுழுதுமூடித்
> தேகமேயான்மாவென்றுஞ் சேயிழைமடவார்தங்கள்
> போகமேமோக்கமென்றும் புத்தியைத்திரிபுபண்ணுஞ்
> சோகம்பாவனையாலித்தைத் தொலைப்பர்கள் சிவன்முத்தர்"

என்னுந் திருவாக்காலு மாயையுண்டென்றறி. இந்த மாயை அறிவை மறைக்குமன்றி விளக்காதென்னில்,

> "ஆணவத்தி லேகிடந்த வாருயிர்க்குக் காயமெனுங்
> கோணைவிளக் களித்த கோமானே-யாணவமு
> மாக்கையும்வந் தென்னைநித மல்லலுறப் படுத்தாமற்
> சாக்கிராதீதத்தைத் தா"—

என்னுந் திருவாக்காற்றெளி. ஆகிலிந்த மாயையெங்கே பிறந் தது? என்னில், மனதிலே பிறந்தது. அந்த மனதெங்கே பிறந்தது? என்னில், வியாழவட்டங் குருக்கிடை.

## பஞ்சமி கன்மவழக்கு.

கன்மமே கர்த்தா; கர்த்தாவொருவன், வேறென்பதில்லை. பிற க்கப்பண்ணுவதுங்கன்மமே, பாலயௌவனவிருத்தம்நோய் சாக்காடு முதலியன பண்ணுவதுங்கன்மமே. இந்தக் கன்மந் துலையொத்தகால

த்தில் கன்மமே முத்தியைக்கொடுக்கும். இந்த கன்மநுட்பந் தெரியாதவர் கர்த்தா கன்மக்கயிற்றாலே யாட்டுவிப்பாரென்பர்; ஆயின் உன்பெயர் கர்மவாதியென்றும், காலவாதி சகோதரனென்றும்,கேட்டிருப்போம் பேதாய்! இந்த வழைமதியைக்கொண்டல்லோ அனேக காலம்பிறப்பை வளர்த்தாய்! தெரிந்துந் தெரியாதவன், கற்றறிமோழைநீயே, கங்கையை யடுத்தும் கழியிடைமூழ்குங் குணத்தவன்,

"அறம்பாவமென்னு மருங்கயிற்றாற்கட்டி"—

என்னுஞ்சுருதிதெரிந்துந்தெரியானுகி விளக்கைப்பிடித்துக் கிணற்றிடை வீழ்பவனீயே, உனக்கொப்பு வாரிபுடைசூழ்ந்த வையகத்துனில்லை. கெடுவாய்? பூர்வசென்மத்திற்செய்த விருப்பும் வெறுப்பும் சடமாகையாலும், அதை யுனக்கு ருசிக்கப்பண்ணிப் பொசிப்பிக்கிறவரோ கர்த்தா. எனக்குக் கன்மமில்லையோ கர்த்தாவில்லையோ வென்னும் வழக்கைச்சொல்லாற்றெளி. ஆனாலந்தக் கன்மஞ் சாகாரமோ? நிராகாரமோ? என்னின், சாமியம்,

"அருவாயவல்வினைநோ யடையாவண்ண
மாவடுதண்டுறை யுறையுமமரரேறே"—

என்னுந் திருவாக்காற்றெளி. கன்மத்துக்குச் சடமுஞ் செயலுமுண்டோ? என்னில், சாமியம்,

"கன்மம்வியாபிகடம்போற் சடமன்று
சென்மிக்கப்பண்ணுஞ் செயல்"—

ஆனாலிந்த கன்மம் நாசமடையுமோ? நித்தியமடையுமோ? என்னில், சாமியம்,

"மாயப்பிறப்பறுத் தாண்டானென்வல்வினையின்
வாயிற்பொடியட்டிப் பூவல்லிகொய்யாமோ"—எ-ம்,

"ஊழா லுடம்புண் டுடம்பாலிங் கூழுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு-காழ்கொண்ட
வித்துமர மும்போல வீயா தொருக்காலு
முத்தியிலே வீயு மூளை"—எ-ம்,

"சஞ்சிதந்திருநோக்காற்போம்பிராரத்தந்தனுவோடேகும்
விஞ்சுமாகாமியங்கள் விளங்கனுபவத்தால்வீயுஞ் [ன்
செஞ்சயான்செய்ததெல்லாஞ் சிவன்செய்ததென்றுதேறி
மஞ்சனேவினைத்திறங்கள் வந்துனேச்சந்தியாவே"—எ-ம்,

"முன்னைவருவினையெல்லாஞ் சின்முத்திரைகொண்டெரித்தேன், பின்னைவருவினையெல்லா மருளிற்பிரித்துவிட்டேன், றின்னும்வினையினையெல்லாஞ் சிவார்ப்பணஞ் செய்தொழித்தே, னின்னமெனக்குப் பிறப்புமுண்டோகச்சியேகம்பனே"

இக்கருத்தா ஞசமடையுமென்பதேசித்தாந்தம். ஆயின், இந்தக் கன்மம் ஆதியோ? அநாதியோ? என்னில், குருக்கிடை. கன்மத்துக்குப் பிறப்பிறப்பெங்கே? என்னின், உன்னனுபவத்திற் றெரியுமன்றி, திருவசனம் வசனத்துக் கெட்டாதென்றறி. கன்மம் நினைத்தாலுந் தீண்டினாலுந் தொழிலுனாலும் வரும்,

"உன்னலொருகால் பின்னுரைத்தலிருகாலதனைத்
துன்னன்மூக்காலொன்றே தொழில்"—

திரிகரண மசையாதுநிற்பின் கன்மம் பற்றாதென்பதே சித்தாந்தம். சாமியம்,

"விருப்புவெறுப்பற்று வேதமொழிப்படி மெய்யுணர்ந்து
மரிப்பைச்சனிப்பையு மற்றொளியாகியமாதவர்பாற்
கருப்புச்சிலையனுங் காலனும்வந்தென்செயக்கடவர்
நெருப்பைப்புழுப்பற்றுங்கொல்லோ நெடுங்கச்சியேக
ம்பனே"—எனவும் வரும்.

## ஷட்விதபரநாதிவழக்கு.

சொல்லிப்போந்த மும்மலங்களும், ஆன்மாவை யநாதியிலே பற்றிச் செப்புங் காளிதமும், உவருஞ் சமுத்திரமும், மணியு மாசுணமும், உமியுந் தண்டுலமும், காசமும் விழியும்போலப் பசுவையு மறைத்துப் பதியையு மறைக்கும். கண்ணை நுதா னிருண் மறைத்தது, கதிரையு மறைக்குமோ? என்னில், இவனுக்குப் பதிமுகந் தெரியாவண்ண மறைப்பது பாசமானவையால் மறைக்கும்; ஆன்மா, அநாதி, சுசுரூபி, நிராகாரன், நிவசம்பந்தனுறல் எப்படி மலம் மாயை கன்மம்வந்து நிராணமானது? என்னில், முயற்கொம்பும், ஆகாசத்தாமரைப்பூவும், வந்திபுத்திரனும், கானற்சலமும், தாணுபுருடனும் போல மலம், மாயை, மாமாயை, கன்மம், திரோதாயி யென்று வேதஞ்சொன்னால், உனக்கேன் அநாதி சங்கைவரும்; ஒருத்தியைப் பேய்பிடித்ததென்று ஓதிகமாகச் சொல்லவே, அவள்பேயானபிற்பாடு பூசாரி ஆட்டி, அடித்து, அயோக்கியை யோக்கியையாக்கித் தெய்வத்தைச் சிரசின்

மேல்வைத்துப் பேய்போனதென்னவே, என்பேரிலே தெய்வமிருக்கிறதென்பதுபோலச் சீவான்மசம்பந்தம் போக்கிச் சிவத்துவம் வருவித்தபின், சிவத்துவம் வந்தவழியும் பேய்வந்தவழியும் விசாரிப்பது அவம். குழந்தையை யுறங்கென்று பிட்டத்தைத் தட்டத்தட்ட வுறங்காது சிரசைக் கிளப்பினாற்றாயென்செய்வாள். அதுபோலச் சீவன் சிவத்திலே யுறங்கினால், அனாதிவழக்குத் தெரியுமென் றாசாரியன் சொல்லச்சொல்ல இரட்டித்துப் போதந் தலையைக் கிளப்பும். இதற்குச் சாமியம்,

"முன்புகண்டேனில்லை பாசம்பசுபதியும்முதலும்
பின்புகண்டேனில்லை யென்னைகண்டமாயம்"—எ-ம்,

"இல்லையெனுமாயையி லிட்டெனை நீ
பொல்லேனறியாமை பொறுத்திலையே"—எ-ம்.

"மையாடுகண்ணியு மைந்தருஞ்சுற்றமும் வாழ்வுஞ்செந்தி
லையாநின்மாயையுரு வெளித்தோற்றம்போலானதெல்லா
மெய்யாயிருந்தது நாட்செல்லநாட்செல்லவெற்றவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க் கனவாய்மெல்லப்போய்விட்
டதே"—எனவும்வரும்,

ஆனால், மித்தையென்றால் ஆகமசித்தாந்தம் என்னமாய் முடியும்? மலசத்தியிறந்தும், மலம் அப்பிரகாசமா யிருக்குமென்றதுஞ் சரியோ? என்றகப்பன் செத்துந் தெய்வமா யிருக்கிறானென்றும், வீமனெறிந்த யானை ஆகாயத்திலே தொற்றிநின்றொன்றாய்விழ மின்றைக்குமென்றும், இந்த மரத்திலே பேயிருந்தது இப்போது சிறிது காலமா யிறந்திருக்கிறதென்றும், கலியுக அந்தியத்திலே கற்கோழி கூவுமென்றும், பொய்வழக்குப் பலவிதம். இதுபோலாமென் றறிவாய். இருள் போனபிறகு இருட்டுண்டென்னில், சொல்லளவன்றிப் பொருளில்லை. உண்டே? என்னில், உனக்குண் டெனக்கில்லை என்பதேசித்தாந்தம். பெத்தான்மாவுக்குண்டு, முத்தான்மாவுக்கில்லை. வாயுபூதத்துக்கு வடிவுண்டு, ஆகாசத்துக் கதுவுமில்லை; சாமியம்,

"அசைவற்றால் வாயுவாகாசம்பின்னு
மசைவுற்றால் முன்வாயுவாம்"—எ-ம்,

"ஆசையுற்றாற்சீவ னாகாரமாமந்த
வாசையற் றானீயேயரன்"—எனவும்வரும்,

ஆனால், முத்தனானபின் மலசம்பந்தமுண்டோ? உதித்தபிறகு இருட்டுண்டோ? இல்லை. உதியாததற்குமுன் இருட்டுண்டோ? உண்டு. இல்லையென்பது நீ அநுபவியேயானால் அகமுகமாய்ப் பார்த்தறிதி. திருநோக்கம் பட்டபிற்பாடு, பஞ்சபாசங்களு மில்லையென்று, வேதாகமப்படி பிரத்தியேகான்மா சிவோகம் என்றறிவதே சைவசித்தாந்தம். (பாசமென்னைவிடுவான் காலமெந்நாளோ) என்னல், சமுசயாத்மாவா மென்றறி. இதற்குச் சாமியம்,

"சிவன்வேறுசீவன்வேறென் றிரண்டாய்க்காணு
மவன்செனனமரணத்தை யடைவனுதலினா
லத்துவிதபாவனையை முத்தனுதரிப்பன்"—எ-ம்,

"ஆன்மாவேபரமசிவமென வுண்மையாக
வறிகின்றானவனெந்த வவத்தையடையினுமிவ்
வான்மாவேபரமுத்தி யெளிதடையுமிந்த
வான்மலாபத்தையொத்த லாயம்வேறில்லை"—எ-ம்,

"சீவன்சிவலிங்கமாகத் தெளிந்தவர்தம்
பாவநசிக்கும் பரிந்து"—எ-ம்,

"அறிவென் றனையறிந்தா லானந்த போதச்
செறிவும்பொய் யாணவத்திற் சேர்வும்-பிறிவும்பொய்
யானவிந்த வகிதத் தாட்டுங் கருவிகளிற்
போனாலும் பொய்பொய்பொய் பொய்"—எ-ம்,

"அறிந்தவிடத்தில்லை யறியாமைதன்னைப்
பிறிந்தபினும் பேசல்பிழையன்றோ"—எ-ம்,

சுத்தபடிக சங்காசமாய்ப் பஞ்சபாசங்களு நமதிடத் தில்லையென்று பாவிக்கப்படுவதே சித்தாந்தம்.

## சத்தமி சமயவழக்கு.

சைவம், பாசுபதம், காளாமுகம், வாமம், பைரவம், மகாவிரதம், உலகாயுதம், புத்தம், சமணம், வைணவம், மாயாவாதம், அனீச்சுரவாதம் ஆகப் பன்னிரண்டுமதம். இந்தப் பன்னிரண்டுங் கடந்தவனே சீவன்முத்தன்; சமயசாத்திரம், சமயஅனுட்டிப்பு, சமயதேவதை இவைகளெல்லாம் மனம்பழுக்கக் கட்டிய வுபாயசூத்திரம்; நாமார் நமக்குப் பதியாரெனவரும் ஞானங்களே சமயாதிதஞானம்;

இந்த ஞானத்தால் சுகர், வாமதேவர், வசிட்டாதி, கபிலரீருய இருடிகளும், சம்பந்தர்முதல் மாணிக்கவாசகரீருய மகத்துக்களும், முத்தியடைந்தார்கள். ஆகையால்,

"தன்னையறியுமறிவே யறிவன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே"—என்னும்,
திருமூலர் வாக்கியமே வாக்கியம்.

"உலவலைச்சமயங்க ளொவ்வாதசாத்திரமாய்
கவலைக் கடல்"—என்றதுஞ் சரியொக்கும்,

"அன்றென்று மாமென்று மாறு சமயங்க
ளொன்றொன்றோ டொவ்வா துரைத்தாலு-மென்று
மொருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கு
மருதனையே நோக்கி வரும்"—எ-ம்,

"பன்னிருசமயத்தோரும்பணிந்திடாப்பராபரத்தை"—எ-ம்,

"நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று
மன்றென்று மாமென்று மாகாதே-நின்றநிலை
தானேதான் றத்துவத்திற் சம்பறுத்துங் காக்கைக்குப்
போனற்போற் றேடும் பொருள்"—என்றது,

கருணைக்கையானம்மைத் தூக்கினமையா னல்லனென்றுந், தூக்காமையாற் றீயனென்றும், நானே பரப்பிரமமென்றும், வத்துவன்றியாத்மா வில்லையென்றும், மனவாக்குக் காயத்துக் கெட்டாமையாவில்லையென்றும், ஈச்சுரனின்றே விரவுபக லுளவோவென்னு மைதிகத்தாலாமேயென்றுங், கூறும் பற்பல சமையிகள் கோரணிக்கூத்தரவுமாகாதே. சுபாவமா யித்தனைக்கு மிடங்கொடுத்த வறிவேநின்ற நிலை; யதுவே தான் இந்தவறிவாய் நின்று சமயப்பேய்களை நோக்காமனேக்கித் தத்துவவிசாரணை பண்ணுந் தத்துவத்திற் சம்பையறுத்தொருவன்கட்ட நாணின்று நெடியமரத்தால் கட்டுவோமோ, நீர்ப்பாம்பால் கட்டுவோமோ, அன்றி விலாங்குமீனாற் கட்டுவோமோ, நீண்டகற்றாழைநாற் கட்டுவோமோ, வென்றுவி திகைக்குங்காலை, யாத்தனுணவ னனைத்தையுங் கட்டுவதச் சம்பேயென்னவுந் தேருறது, நெடுந்தூரம்போனனைப் போன்றனவாம்; தன்னைத்துறந்து பொருள் காணவேண்டி நீர் போந்தபோக்கென் றநிசயித்தனவா மென்றவாறு.

இதற்குச் சாமியம்,

"தானேசிவமல்லாற் றனிச்சிவம்வேறில்லை"—எ-ம்,

(அஞ்செழுத்தும்பாவனையு மவனைப்போன்றனை) என்னும், வையச்சொல்,

"சிவச்சிவோ சிவோ சிவாசற் சிவோ கேவலசிவா"—எ-ம்,

"அறிவு திரிவிதத்துக் கப்பா லறியு
மறிவே சிவமதுவே நீயா-மறிவொன்றிக்
கண்டாருங் காணுக் கதியை * மழபாடிப்
பண்டாரங் காணும் படி"—என்பது,

மழபாடிப் பண்டாரமே? யிதேசமயாதீதப் பரமாகியமுத்தி காணக்கடவாய். ஆன்மதத்துவ வறிவும் வித்தியாதத்துவ வறிவுஞ் சிவதத்துவ வறிவுமாய மூவகைத் தத்துவசாலத்துக் கப்பாலறியப்பட்ட சுபாவவறிவே சர்வவியாபி சூனியமாகிய சிவம். அந்தச்சிவமே நீயாம். இதற்கோ ரையப்பாடில்லை. மகாவாக்கியமு மிஃதே; ஐயறிவுமோரறிவா யொடுங்கிய யோகீஸ்பராளுங் கண்டுங்காணாத முத்தியை யென்றறிவித்ததா மென்றவாறு. அறிவு திரிவிதமென்பதைச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி யென்கிறுமாம். இதுவுமதே-அறியுமறிவே சிவமென்றது தூலவருந்ததி நியாயம்போலத் தூலவறிவைக் காட்டிச் சூக்குமவறிவை மூன்றையுஞ் சாக்கியாய்க் கண்டதுவே நீயென்றுகாட்டியது:(அறிவொன்றிக்கண்டாருங் காணுக்கதி) என்றது அறிவாலறியும்பொருளல்லவென்றதாம். காணும்படியென்றது,மாயாவாதியைப் போன்று வாசாப்பிரமமாய்ப் போகாமையென்பதாம்; சாமியம்,

"நீருக்குட்டம்பம்போ லின்னறிவினின்றுனைப்
பாருட்கண்கொண்டு பாரித்து"—எ-ம்,

"எங்குநிறைந்தானை யேகபிரமன்டென்றதே
யெங்குமாய் நீகண்டிரு"—என்றும் வரும்.

## அட்டமி ஞாதுருஞான ஞேயவழக்கு.

ஞாதுரு-ஆன்மா, ஞானம்-ஆத்மாவினுடைய தசேந்திரிய ஞானம், ஞேயம்-ஈச்சுரன். இந்த ஈச்சுரனாலே தசேந்திரிய ஞானத்தை ஆன்மா வறியும். இந்த ஞானம் முத்தியிலுமுண்டு. கூடாம்தன்னில் முத்தியின்ப மனுபவிக்கிற வான்மாவுமில்லை. ஆகமமுமில்லையாம். மிகவும் நன்று எல்லா மில்லாமற்போகிறதே சுபாவமுத்தி;
"அவனுநா னுமெய்ம்முயங்கி யனுபவிக்குமளவிலே
யவனுமில்லைநா னுமில்லை யாருமில்லையானதே"—என்று,

* மழபாடிப் பண்டாரம் என்பது சீடனதுபெயர்.

சுருதி யிருக்கிறதென்னில், சுருதிக்குப் பொருடெரியாமல் யாருமில்லையென்றாய், நேயத்தழுந்தினவிடம் எல்லாமிறவா திறந்திருக்கும். அஃதெங்ஙனம் ? என்னின், ஒருத்தியை ஆலிங்கனம் பண்ணிய ஒருவன் காட்டிற் புலிமுதலிய மிருகங்கள் குறுகினுங் காணானென்னுங்கதையே சாட்சி. ஆனாலிந்தக் கரணத்தோடு முத்தியை யடைவதோ ? என்னில்,முத்தியென்பதுகைலாயம் வைகுந்தம் பொன்னெயில் வட்டமுதலிய தானமன்று, ஆனாற் பின்னைத்தா னெது ? என்னில், தானே முத்திதானம். பெத்தக்கரணம்போய் முத்திக்கரணமாதலே இறவாதிறத்தல். மூடன் ஞானியானால் முன் மூடனாயிருந்த தசேந்திரிய வந்தக்கரணமெங்கே யோடிப்போனது ? போகவில்லை. எவ்வண்ணம் ? என்னில், தேவதத்தன் நியாயம்போலா மென்றறி. சாமியம்,

"ஆனந்தந்தாமென் றறியாவறிவிலிக
ளானந்தந்தேடி யலையும்"—ஆனால்,

ஒரு பாடாணத்தைச் சிற்பன் றெய்வவுருவாக்கினால் முன் பாடாணமுண்டோ ? இல்லையோ ? இல்லையென்னிற் கைக்குத்தட்டுபடாமற்போகவேண்டும். குணுங்கி கற்பிலே மறைந்துநின்றாற்போலப் பாடாணந் தெய்வவுருவின் மறைந்திருக்குமென்றறி. அங்ஙன மறையாதுண்டோ ? என்னில், பாடாணத்தியானமேயில்லையாலும், முத்திசத்தியாலும்,நினைக்குமிடத்துத்தெய்வப்பிரசன்னமாதலாலும்,இல்லையென்பதே சித்தாந்தம். இதுபோலும் அதுவென்றறி. வான்மீகி, வதிட்டர், மதங்கர், கபிலர் கதையே சாட்சி. நதிமூலம், ரிஷிமூலம், குருமூலம், ஸ்ரீமூலம் அறியக்கூடாது. சாமியம்,

"எல்லாருங்களிதுளங்க விரும்பையிரும்பொன்னாக்கி
நல்லார்கடொழுந்தேவாய் நாட்டுகின்றஞாயம்போற்
கல்லாதபுலையேனைக் கருணையாற்கடைக்கணித்துப்
பொல்லாதபரப்பிரம மாக்கினையென்போல்வந்தே"—
எனவும்வரும்.

## நவமி தெய்வவழக்கு.

தெய்வமென்பது பொது ; தெய்வத்தை யார்கண்டவர் ? கயிலாயம், பொன்னெயில்வட்டம், ஸ்ரீரங்கம், திருப்பாற்கடல், செகந்நாதம்,இவை ஒருகாலந்தோன்றும் ஒருகாலமழியும். ஒருதெய்வம் ஒருதெய்வமாகியும் போகியும்வரும். ஆனாற் றெய்வநிச்சய மில்லையோ ? என்னில், தெய்வநிச்சயம் தெய்வமறியாதவனுக்கு நாமேசித்து, சிதாநந்தன், திவ்வியசொரூபனென்று கண்டவன் எந்தத்தெய்வத்தை

வணங்குவான்? எந்தத் தெய்வத்தையும் வணங்கான். ஆகையால், சிறுபிள்ளைகள் தெய்வங்களைக் கொண்டாடுதல்போல, அறிவில்லாப் பெரிய பிள்ளைகளுந் தெய்வத்தை யாராதனை பண்ணுவார்களென்றறி. தனக்குத்தானே மரம், கல், மிருத்திகை தாம்பிரமென்று தெரிந்தும் (நாட்டோடே நடுவேயோடும்) என்கிற ஐதீகத்தைப் பற்றி மயங்குமென்றறி. சாமியம்,

"அத்தேவர்தேவரவர் தேவரென்றிங்ஙன்
பொய்த்தேவுபேசிப்புலம்புகின்ற பூதலத்தே"—எ-ம்,

"பூவும்புகையும்புனலும் பொருடேடித்
தேவைமறைக்குந் தினம்"—எ-ம்,

(சிவோகஞ்சிவோகம்) என்று வேதாகமங்கள் சொல்லுவதே பிரமாணம். சைவபுராணத்திற் சர்வசாட்சி சிவோகமென்று சொல்லும். கீதைகளிலும் பிரத்தேகான்மா சிவோகமென்று சொல்லும்; ஆகையாலிதுவே சித்தாந்தம். வேதசித்தாந்தமு மிதுவே;

"உள்ளமேபீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளியரா லர்ச்சிக்குமாறு"—எ-ம்,

"சீவன்சிவலிங்கமாகத் தெளிந்தவர்கள்
பாவநசிக்கும் பரிந்து"—எ-ம்,

"புன்புலாலியாக்கை புரைபுரைகனியப்
பொன்னெடுங்கோயிலாய்ப் புகுந்தென்"—எ-ம்,

"உள்ளமேகோயிலா யுள்ருமென்னுள்ளமே"—எ-ம்,

இப்படி அனந்தஞ் சாமியமுண்டு. அனுபவிக்கதெளியும். மற்றையர்க்குத் தெளியாதென்பதே சித்தாந்தம். கைலாயம், வைகுந்தம், பொன்னெயில்வட்டம், இவை கற்பனைத்தானமேயன்றிக் கற்பனைகடந்த அறிவிலில்லை. உண்டென்னில் அனுபவியன்று. ஆகையால் (தானேசிவமல்லாற்றனிச்சிவம்வேறில்லை) என்னுந்திருவாக்கே ஏறுகடைசி ஆகமசித்தாந்தம்.

## நசமி துறவிவழக்கு.

துறவாவது பற்றறத்துறத்தல். கன்மத்தை நீங்கலாவதெப்படி? பட்டினத்தார், பத்திரகிரி, சுகர், வாமதேவர், சடபரதர் முதலாயினோர் பற்றறநிற்றல். அமைத்தபடியன்றி யாராலுந் துறக்கப்படாதோ?என்னில், உயிர்க்குணமாகிய காமாதிக ளடங்கிநிற்பதே துறவு; அவை யடங்காமனிற்பதே சமுசாரம்; அறிவாகி நிற்பதே துறவு; ஆகமாய் நிற்பதே சமுசாரம்; எத்தை யெவன்முன் துறந்தான்; ஸ்ரீகளைத்துறந்தான் ஸ்ரீமாயை யானபடியினாலே துறந்ததுபோய் துறந்திருப்பாரெல்லாம் வீணோ? என்னில்,

"புலவுநாய்க்குறிகாணினும் புருடர்நெஞ்சுவப்பர்"—

ஆகையால், புறப்பரிசமன்றி அகப்பரிசமுண்டென்பதே சித்தாந்தம். ஆனாற்றுறவறமில்லையோ ? என்னில், இல்லையென்றால் வேதாகமம் ஒப்புக்கொள்ளாது. ஆகையால், துறவறமில்லறம் இருவிதமாய் விளங்க வகுத்தனவாம். இதற்குச் சாமியம்,

"துறப்பார்மற்றுப்புரவில்லா ருறற்பால
வூட்டாகழியு மெனின்"—எ-ம்,

"ஊழைத்துறந்தா லுயர்துறவியானவையன்றி
யூழிருக்கநீ துறவியோ"—

ஆகையால், சித்தாந்தம் கன்மநீக்கமே துறவு ; கன்மசம்பாடணமே சமுசாரம். காமாதிகளிற் பற்றறத்துறத்தலாவது,

"கண்டவின்பமேமீளவுங் காண்கின்றதொருநாட்
கொண்டகோலமேமீளவுங் கொள்கிறதுவந்து
கண்டகாட்சியேமீளவுங் காண்கின்றதென்றால்
விண்டமேலவர்நாணுறு தொழிவரோவெறுத்து"—

என்னுங் கருத்தைப்பற்றிவரும் உபாதியேயாம். பிருங்கிமாமுனி தீர்த்துறந் தும்பின்பட்டபாடு செகமேயறியும்; சிவக்கூறு-சிவம். தேகக்கூறு-சத்தி ; ஆனபடியினாலே, சிவத்தை யெந்தக்காலமுஞ் சத்தி நீங்காதென்பதே சித்தாந்தம். சாமியம்,

"எத்திறநின்றானீச னத்திறமவளுநிற்பள்"—ஆனதால்,

பார்ப்பான்-பார்ப்பாத்தி, ராசா-ராசாத்தி, வைசியன்-வைசியச்சி, சூத்திரன்-சூத்திரச்சி, இங்ஙனஞ் சிவக்கூறு சத்திக்கூறு கண்டுகொள்க. இல்லத்தான் பாசபெந்தமென்றுந் துறவி ஞானபெந்தமென்றும் உலகங்காணும்வரம்பு காட்டியது. உபாதியாலே வேற்றுமை காண்பதன்றிக் கன்ம வேற்றுமையின்று. மரணகாலத்திலே மதிவேற்றுமையால் நல்லார் பொல்லாரொன்று மதிப்பதன்றிப் பிணவேற்றுமையின்று. அதுபோலச் சனவேற்றுமையின்று. சாமியம்,

"பிறப்பொக்குமெல்லாவுயிர்க்குஞ் சிறப்பொவ்வாச்
செய்தொழில் வேற்றுமையால்"—

ஞானம்வந்த ஞான்றெந்தவறமாயினுந் தகும். அகண்டாகார ஞானத்தை இல்லறமுந்துறவறமும் மறையாதென்பதேசித்தாந்தம்.

"செத்துப்பிறந்துழல்பிணக்கைச் சின்மயனன்முத்திநாளையைப், புத்தியிடைப்புதைத்தருளிப் பொன்றுவித்துப் பொருண்முடிவைப், பத்துவழக்கினுந்தேற்றிப் பரமபதமெற்களித்தா, னத்துவிதமெழுவாயி னமைத்தசிவப்பெயரோனே"—

எனவும்வரும்.

தசவழக்குச்சிந்தனை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## பதினாறாவது

## குருமரபுசிந்தனை.

பதி பசு பாசமென்னுமுப்பொருளுக்குட் பதிமுதலாய்ச் சொல்வதோ? பாசமுதலாய்ப் பகரவேண்டியதோ? என்னின், பாசம் பசு பதியென்பது பெத்ததசை; ஆகையால், பாசத்துக்குள்ளே பசு மறைந்து பசுக்குள்ளே பதி மறைந்துநின்றமையாற் பெத்தமென்றது. முத்திதசை-பதிக்குள்ளே பசு மறைந்து பசுக்குள்ளே பாசமறைந்து நின்றமையான் முத்தமென்றது. பதிபசுவாகப் பசு பதியாகப் பாசங்கழன்ற தோற்றமும், பின்னிட்ட பரமுத்தியிற் பதியன்றிப் பசு பாசங்கழன்ற அனுபவத்தாற்காண்க. சாட்சி-மகுடாகமம்,

"சிவச்சீவோ சீவோசிவா சஞ்சீவோகேவலசிவா"—ஆனால்,

பாசமென்பதியாது? பசுவெந்தக்காரணத்தாற் பாசபெந்தப்பட்டான்? பசுவையும் பாசத்தையு மீறிநின்ற பதியாவதியார்? இந்தச் சங்கைமுடிச்சை யவிழ்த்துக்காட்டினதே முத்தியெனப்படும். அநுக்கிரகமுறையிற் பசு பாசம் பதியெனப்படும். ஆகையாற், சாட்சி (பசுவாவதுதான்மா, அப்பசு அசுதந்தரன், தான் பகர்சின்மாத்திரன், மலநாடிதன் மலத்தான்மூடன்) என்னுந் திவ்வியாகமத்தால் அறிக;

"பாசபத்ததேசீவா பாசமுத்ததேசதாசிவா"—எ-ம்,

வாக்கியத்தால் நான் மூடனென்னும்பாவனை நீங்கக்கடவன். (பாசபெந்தத்திலேசீவனும் பாசம்போனால்ஈசனும்) என்னுந் திருவாக்கினுமறிக.

### ஆணவ வழக்கு.

அநாதியே ஆணவசம்பந்தம் இயற்கைச்சம்பந்தம் அன்று; செயற்கைச் சம்பந்தமே. சீவனுண்டானபோதே சீவத்துவமுண்டாயிற்று. ஊருண்டானபோதே புலைச்சேரி யுண்டானாற்போலும், சமுத்திரமுண்டானபோதே நீருண்டானாற்போலும், செம்புண்டான போதே களிம்புண்டானாற்போலும், மேகமுண்டானபோதே மழையுண்டானாற்போலும் இப்படிஅனந்தமுவமையுண்டு. அதனால், சீவன் சிவனை நோக்காமற் பாசத்தை நோக்கப் பாசியென்னும் பெயர்வந்

தது. கள்ளப்பார்வையாற் கள்ளனென்றாற்போலவும், விகடத்தால் விகடனென்றாற்போலவும், சாதுவினாற் பசுவென்றாற்போலவும், விதரணையால் பார்ப்பானென்றாற்போலவும், இப்படியும் அனந்தமுவமையுண்டு ; ஆனால், இஃதொருகால் தீர்வுமுண்டோ ? உண்டு. எங்ஙனம் ? விசுவாமித்திரன் பிரமரிஷியானாற்போலும், குணுங்கி அருந்ததியானாற்போலும், அத்திமரம் தேவதையானாற்போலும், சீவனுஞ் சிவனாவன். சாட்சி,

"திசையாருஞ்செம்பிரதக் குளிகையிற்பொன்னதுபோற்
சீவனுமெய்ஞ்ஞானத்தாற்சிவத்துவத்தைப்பெறுமே"
—எ-ம்,

"பண்டிருபம்பிரதத்தினாற் பசும்பொனானாற்போல்
மண்டலந்தனின்மனிதருஞ் சிவமயமாவார்"—என்னும்,

வாக்கியங்களானுமறிக. (சிவத்துவமசி-சிவோகமஸ்மி-சிவோயமஸ்தி)இது அநுக்கிரகமுறைமையெனக்கொள்க. தன்மை,முன்னிலை, படர்க்கை மூன்றுவாக்கியத்துங்காண்க. தன்மை குரு சிவனானேயிருக்கின்றேனென்பதாம். சீடன் நானென்ன நீ சிவமானாய் என்பதாம். படர்க்கை சர்வமுமாமோவென்னச் சருவமுஞ் சிவமாயேயிருக்கிறதென்பதாம். நான் நீ யடங்கலுஞ் சிவமேயென்பது வாக்கியத்திரையத்திற்காண்க. பேதசித்தாந்தி இதைக் கைக்கொள்ளான். சரிதை கிரியை யோகத்திலுள்ள விருப்பத்தாலெனவறிக. (அபுருபாநாம்நரசென்மாநாம்விவேகமதிதுல்லபம்) என்னுஞ் சுருதிகளானுமறிக.

## மாயை வழக்கு.

மாயையே யான்மாவை மறைக்குமென்னின், மறையாது விளக்கைப்போல் விளக்குவதேயன்றி மறையாதென்பதே துணிவாயின், மறைக்குமென்று நூல்களிற் சொல்லுவானேன் ? மாயை மயக்கஞ் செய்தலின் மறைப்பென்றுஞ் சொல்லலாம். சாட்சி,

"ஆக்கையுங்குருவான தாசனே"—எ-ம்,

"மாசற்றகொள்கை மனத்திலடக்கின
லீசனைக்காட்டு முடம்பு"—

என்றதனானுமறிக. திரோதானசத்தி,மாயையானமையான் மறைப்பென்றுங் கொள்ளலாம்.

## கன்ம வழக்கு.

கன்மம் அநாதியே சீவனுக் குண்மையாகுமென்னில், அது சற்குரு சந்நிதானத்திலே நீங்குகிறபடியினாலே, எப்படி யநாதியென்று

சொல்லலாம். செயற்கையென்னில்மீண்டுவரும். ஆனாற்போம்வழி? மலமுண்டானபோதே மாயையுண்டு; மாயை யுண்டானபோதே கன்மமுண்டு; எப்படிப்போலென்னில், பசியுண்டானபோதேவிகார முண்டு; விகாரமுண்டானபோதே முயற்சியுண்டானது போலென்றறி. சிவனுக்கு மல மாயை கன்ம மூன்றும் அநாதியியற்கையன்று; அநாதி செயற்கையென்றே சித்தாந்தம். சுண்ணாம்புக்குவெளுப்பும், கரிக்குக்கறுப்பும் அநாதியியற்கை. செம்புக்குக் காளிதமும்,நெல்லுக் குமியும் அநாதிசெயற்கை யெனக்கொள்க. சாட்சி,

"களிம்பறுத்தானெங்கள் கண்ணுதனந்தி"—எ-ம்,

"நெல்லிற்குமியு நிகழ்செம்பினிற்களிம்புஞ்
சொல்லிற்புதிதன்று தொன்மையே"—எ-ம்,

"மாய்மெலாநீங்கியரன் மலரடிக்கீழிருப்பன்
மாறாதசுவானுபவ மருவிக்கொண்டே"—என்னும்,

திருவாக்கினுமறிக.

## திருமேனிகொண்ட வழக்கு.

சிவனுக்குத் திருமேனியுண்டென்னில், மல மாயை கன்மமுண்டு; என்னதியானென்னுஞ் செருக்குமுண்டு; உண்டாகவே நம்மைப் போலக் கலியாணமும் கிரியாணமுமுண்டாம். எவ்விதத்தினுங்கூடாது. அஃதெங்ஙனம்? என்னில்,சிவன் அப்பிரமேயனென்றும்,நிரவயனென்றும், நிராமயனென்றும், அகாயனென்றும், அசிந்திதனென்றும், சைதன்யனென்றும், சநாதனென்றும் வேதஞ் சொல்லுகையால், திருமேனி யில்லையெனில்கூடாது. அஃதெங்ஙனம்?என்னில் திருமேனி யில்லாவிட்டால் வேதமில்லை; வேதமில்லாதபோதே பிரமாதிதேவதைகளில்லை; தேவதைகளில்லாதபோதே கன்மமில்லை; கன்மமில்லாதபோதேமழையில்லை; மழையில்லாதபோதே பிரபஞ்சமில்லையாய்முடியும். ஆனாற் றிருமேனியுண்டென்பதே சித்தாந்தமென்னில், சாட்சி யொவ்வாதிருப்பானேன்? எப்படி?

"சிவனுருவருவுமல்லன்சித்தினோடசித்துமல்லன்"—எ-ம்,

"ஆணல்லர்பெண்ணுமல்லா ரலிகைவீரட்டனாரே"-எ-ம்,

"பெண்ணோடாணென்று பேசற்கரியவன்"—எ-ம்,

"ஒருநாமமோருருவ மொன்றுமிலார்"—என்றும்,

இப்படி அனந்தமுவமையுண்டு. சனகாதிகளுக்கநுக்கிரகநிமித்தியமாய்க்கொண்ட திருமேனியும், தனஞ்சயனுக்காக வனசரவடிவாய்

விற்றழும்புபட்ட திருமேனியும், மார்க்கண்டேயருக்காக லிங்கோற்பவமூர்த்தியாய்வந்த திருமேனியும், அம்மை தழுவக்குழைந்த திருமேனியும் பொய்யோ? மெய்யே. ஆனாலிதன் கருத்து ரகசியசம்பந்தம். சமுத்திரத்தில் குமிழியெழும்பி நின்றொடுங்குவதுபோலச் சிவகாருண்ணியத்தாற் காருண்ணியமே திருமேனியெனக்கொண்டு பிரமாதிகளைச் சிருட்டிப்பன்; பிரமாதிகளால் அகிலநிகிலப் பிரபஞ்சங்களையும் சகல வேதமாதிய நூல்களையுஞ் சிருட்டித்துப் பழைய பரமசிவனாய் நிற்பன். மகத்துக்களிடத்தும், சூரியனிடத்தும், அக்கினிச்சிகையினிடத்துந் தியானத் திருமேனியாயே யிருப்பன். தியானமே திருமேனியன்றி வேறில்லையோ? வென்னில், இல்லை. சாட்சி,

"மறைநான்கேவான்சரடாய்த்
தன்னையேகோவணமாய்ச் சாற்றினன்"—எ-ம்,

"உமையலா துருவமில்லை"—எ-ம்,

"இலங்கியவிருசுடருந்திருநயனமீறிலடியிலாவெண்டிசைத்திண்டோ, ளிலங்திருவடிநீள்புனலாடை நீர்மருவுந்தழனின்னுதற்செந்தீ, கலங்கெழுமாருதநாசியிற்காற்று கடுவெளியெல்லாந்திருவுருவானால், வலஞ்செய்வதெங்கேவணங்குவதெங்கே மாலயனறியாமன்றினுளாடி"—என்னும்,

திருவாக்கினாலுமறிக. மானுமழுவு மறைத்துச் சிவமே ஆசாரியராய் வருமென்னில், வானந்திரண்டுருவாய் வருமோ? வராது. ஆனாற் போம்வழி? காருண்ணியத்தால் அதிட்டித் தநுக்கிரகிப்பனெனவறிக. இதே யாகமசித்தாந்தம்.

## அநாதி வழக்கு.

ஆத்மாவை அநாதியிலே மலம்வந்து சம்பந்தப்பட்டதென்னில், அநாதி யாத்மாவென்றும், நிரவய னாத்மாவென்றுங் கூறும் வேதவாக்கியம் பொய்யாம். ஆனாற் பிறப்பிறப்பு, நரக சொர்க்கம், நல்வினை தீவினை, வெறுப்பு விருப்பு, போக்கு, வரவு, சரியை யாதிபாதம், சாலோகாதிபத முத்திகள், இத்தியாதியுஞ் சிவன் தனக்குச் சிருட்டித்துக்கொண்டாரோ உனக்குச் சிருட்டித்துவைத்தாரோ வென்னும் வாதம் வரும். ஆனால், (நான்பிறந்தகாலம் நீயும் பிறந்தாயென்றும். நானிறந்தகாலம் நீயுமிறந்தாயென்றும்.)

"இன்பமுந்துன்பமு மில்லானேயுள்ளானே"—எ-ம்,

"சேடனருளொப்புருவஞ் சேய்கிணற்றில்வீழ்ளவிற்
கூடவிழுந்தாயின் குணம்"—என்று,

இப்படி அன்னேனெனிய வாசிரியம் வருமேயென்னில், இந்த அன்னேன்ய வாசிரியதோடத்துக்குப் பிரமாணமில்லை. அநுபவ காலத்திற் காணலாம். குருக்கிடை. ஆனல் நிச்சயத்துக் கெட்டாதோ ? எட்டும். சாட்சி,

"நீக்கிமுன்னெனைத்தன்னெடு
நிலாவகைக்குரம்பையிற் புகப்பெய்து"—எ-ம்,

"அருங்கற்பனைகற்பித்தாண்டா
யாள்வாரிலி மாடாவேனே"—எ-ம்,

"மால்கொடுத்தாவினைத்தார் மாமறைக்காடரோ"—எ-ம்,

"தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே"
—எ-ம்,

"வழித்தலைப்படு வான்முயல்கின்றே
னுன்னைப்போலென்னைப் பாவிக்கமாட்டேன்"—எ-ம்,

"என்னை வருத்திலேயெவிடும்மைக்கிடம்யாதுசொலே"—

என்றும்,இப்படி அனந்தமுவமையுண்டாயினும், அநுபவகாலத் தன்றி தெரியவாராது. ஆயிற் சித்தாந்தமென்னமாய் முடியும் ? என்னில், ரகசியசம்பந்தம். உலகெலாம்படைத்தான், உயிரையும்படைத்தான் ; உலகமுந்தியோ ? உயிர்முந்தியோ ? என்னிற்,பகலின்கொம் பிரண்டு மொருகாலத் தெழுந்தாற்போலும், ஆணும் பெண்ணுமொரு காலத்திற் பிறந்தாற்போலும்,சிவன் சிருட்டிவல்லபம் நம்போதமயக் குகளாற் காணப்படாதாயினும்,

"திஷ்டே-பூர்வமாத்மாயேகமேவா"—எ-ம்,

"காலமுநாள்களுழி படையாமுனேகவுருவாகி"—எ-ம்,

"ஒருவனுயுலகேத்தநின்றநாளோ ஓருருவேமூவுருவமான நாளோ"—

என்றும், இத்திருவாக்குகளால், ஊமைகண்ட கனவுபோன்றென்னனுபவத்துக்கே யொக்கும்போலுந் தோற்றுகிறது. ஆகையால்,

"உருவாகியென்னைப் படைத்தாய்போற்றி
யுள்ளாவிவாங்கி யொளித்தாய்போற்றி"—

என்பதனால், இச்சங்கை தீரலாம். ஆயினின்ன மிதற்கோ ருறுதிப்பாடில்லையோ? என்னில், அவன் கற்பித்தசித்தமலம் நீங்கினாலொழிந்து அறியப்படா தியார்க்குமென்பதே சித்தாந்தம். சிவத்துக்குள்ளேசீவன், சீவனுக்குள்ளே சீவத்துவம்; இந்தச்சீவத்துவத்தைச் சத்திபதிந்த காலத்தில், சிவம் ஆசாரிய மூர்த்தமாய்வந்து அறுவகை தீக்கைகளாற் சீவத்துவத்தை நீக்கி யில்லாமையாக்கி நின்றநீயே நானென்ற மகாவாக்கியத்தாற் றன்மயமாக்கிய சித்தவித்தையை வேதந்தானெப்படிசொல்லும்? ஆகமந்தானெப்படிசொல்லும்? மகத்துக்கள்தா னெப்படிசொல்லுவார்கள்? சொல்லாமற் சொல்லியிருக்குமென்பதேசித்தாந்தம். அவன்முன்னிவன் கற்பிக்கப்பட்டவனென்று கொள்வதே அநுபவசம்பந்தம்.

## பிராரத்த வழக்கு.

பிராரத்தம் மூவகைப்படும். அஃதெங்ஙனம்? என்னின், பௌதீகம், ஆத்மீகம், தெய்வீகம். இன்னமொருபிரகாரம். இச்சயாபிராரத்தம், அனிச்சயாபிராரத்தம், பரேச்சாபிராரத்தம், விருப்பு, வெறுப்பு, நொதுமல், இப்படி யநேகவிதமாயும் விரிந்திருக்கும்; இந்தப் பிராரத்தத்தைப் பெத்தத்திலே சீவனநுபவித்தான். முத்தியிலே சிவனநுபவித்தான் என்னில், சீவன் விகாரியாகையாற் புசித்தான்; சிவன் அவிகாரியாகையாற்புசியான்; சீவன்முத்தன் புசித்ததெல்லாஞ் சிவன் புசித்ததென்று வேதாகமங்கள் பிரத்தியட்சமாய்ச் சொல்லுகிறதே? என்னில், பத்திகாண்டத்திற் சொல்லும். ஞானகாண்டத்தில் கர்த்தா போக்தா சீவனுக்கே ஒழிந்த சிவத்துக்கில்லையென்பதே சித்தாந்தம். ஆனாற் சிந்தியாகமத்திற் (சிவோதாதா சிவோபோக்த்தா) வென்றுசொல்லுவானேன்? என்னில், அதுசம்மதமே. சீவன்முத்தியுங்கடந்த விதேகமுத்திக் கதே சித்தாந்தம். விதேகமுத்தியிற் சீவத்துவமில்லையோ? என்னில், உண்டில்லையென்பதை யுன்னநுபவத்திற் கண்டுதெளி. ஆனாலிந்த விதேகமுத்தியடைந்த நாயன்மாருண்டோ? என்னில், உண்டு. யார்? என்னில், சுந்தரர் தான் (சுந்தரபோக மெவ்வணமிருந்துதென்னப் படுக்கைமெத்தை யறியுமோ படுப்பானீ யறிவை) யென்னத் திருவுளமகிழ்ந்ததும் ஒக்கும். திருநாவுக்கரையர் தான் (நின்னுவார் பிறரன்றி நீயேயானாய்) என்னத் திருவுளமகிழ்ந்ததும் ஒக்கும்; சம்பந்தமூர்த்தி தான் (நிலையவனென துணைதனதுணை) யென்னத் திருவுளமகிழ்ந்ததும் ஒக்கும். ஆனால், இந்த அநுபவத்தால் புசிப்பான் சிவனென்று சொல்லலாமே? என்னில், அந்நிலைக்கே ஒழிந்த மற்றைய நிலைக்குத் தகாதென்பதேசித்தாந்தம்;

"உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றி
யோதாதேவேத முணர்ந்தாய்போற்றி"—என்னும்,

திருவாக்கினால் சிவனிருவித முத்தியினும் புசித்தாரென்பதே கூடாது. கூடுமென்றுசொல்லிற்றே ? அதுவு முபசாரமென்றறியவும். பின்னை யார்தான் புசித்தார் ? என்னில், சாட்சி,

"ஓர்ப்பொடுபசியுந்தாகமுச்சாசகுந்சுகதுக்கங்க
டார்பரியங்கனபோகந்தன்மமுமதன்மந்தானு
நீப்பறியாதபுத்திநிகழ்குணமாகுமத்தை
யாத்துமன்குணமேயென்பரயிக்கவாதத்திலுலே"—

(உண்டுறங்கியபிள்ளை விடிந்தகாலையுண்ணவேயில்லை) யென்று சாதித்தாற்போலும், சுத்தவீரனுக்கு உயுத்தியகளத்தி னிரியாணக் கிலேசம் மறைந்துநின்றாற்போலும், இருவித முத்தியிற் பிராரத்தம் நின்ற நேர்மைகாண்க.

குருமரபுசிந்தனை-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினேழாவது

## அநுபவசந்திரிகை.

இருவினையொப்பும் மல்பரிபாகமுமொரு தலையாயெய்திய சீடனே மகா வாக்கியோபதேசமே யுபதேசம். ஆனாலிதற்குமேலில்லையோ? இல்லை. உண்டுபோலத்தோன்றுகிறதே! என்னில், (விநாசகாலே விபரீதபுத்திதோன்றும்) அது உன்னிடத்திற் றோன்றியதென்றறி. மகாவாக்கியத்தில் அடியேனுக்குச் சிரத்தாபத்தியேன் வரவில்லை? அநுபவகாலம் வரவில்லை. ஆனாலிதன்றி அநுபவம் இல்லையோ? வேதாகமங்களுக்கும், சற்சனராகிய ரிஷிகளுக்கும், முனிகளுக்கும், சனகாதிகளுக்கும், தட்சணாமூர்த்திக்கும், சம்மதம். உனக்குமாத்திரமே சம்மதமில்லை. எனக்குமாத்திரஞ் சம்மதமில்லாமற் போவானேன்? நீபண்ணினகன்மம், (புத்திகன்மாநுசாரணி) என்று, வசனமிருக்கிறபடியினாலே, இது சம்மதப்படவில்லை. ஆனால் எப்போது இதற்குக்காலம்? என்னில், அந்தக்கன்ம மொழிந்தகாலத்தில். ஒழியுங்கால மெக்காலம்?

"சற்சங்கத்துவே நிர்ச்சங்கத்துவம்
நிர்ச்சங்கத்துவே நிர்மோகத்துவம்
நிர்மோகத்துவே நிர்ச்சலசித்தம்
நிர்ச்சலசித்தே சீவன்முத்தா"—என்னும்,

ஒழுங்குவந்த காலத்தில், கன்மமொழியும். ஒழியவே, மகாவாக்கியத்தில் விசுவாசம்வரும். சிவாகமத்தில் விருப்பில்லாதவனுக்குச் சிவன்மேல் விருப்பில்லாததுபோலும், சந்தானத்திலே விருப்பமில்லாதவனுக்குத் தாரத்தின்மேலே விருப்பமில்லாததுபோலும், வேதவிருப்பற்றவனுக்கு, வேதவாக்கியவிருப் பெங்ஙனம்வரும். சிவம் நீயானாய் என்றமாத்திரத்திலே முத்திவருமோ? இன்னம் இதிலும் அதீதநிலை யில்லையோ? என்னில், இம்மாத்திரம் அறிவுடைய வுனக்கு, மகாவாக்கியஞ் சொன்ன நீசனுக்கு, ஜெனனமரணம் பற்றாதெனக்கொள்க;

"குருப்ரம்மா குருவிஷ்ணு குருதெய்வம்மயேஸ்வரா
குருசாட்சாத்பரப்ரம்மம் தஸ்மீஸ்ரீகுருவேநமஃ"—என்று,

வியாழவட்டங் காத்திருந்தபின், இவன் கருத்து வெகுமுகமோ அகமுகமோ, சந்தேகனே அசந்தேகனே, துர்ச்சனனே, சர்ச்சனனே வென்றுசோதித்து, வேதாந்த விசுவாசம் வரப்பண்ணி, விருப்பம் வருவதைப்பார்த்துச் சர்வக்கியானோத்தரமுகமாக, உபதேசம் பண்ணினுல் அன்றே பசுமரத்தாணியாம். இவ்வழிபாடின்றிய உலகச் சுவானங்களுக்குப் புகழைக்குறித்தும், பொருளைக்குறித்தும்,குலகோத்திரங்களைக்குறித்தும், பந்துவைக்குறித்தும், கன்மத்தைக்குறித்தும், சவுக்கியபோஜனத்தைக்குறித்தும், மகாவாக்கியத்தை அநுக்கிரகம்பண்ணினுல், (வரகிலேமுளைத்தசெந்நெல் களையதானவாறுபோல்) அபக்குவன் வாய்ப்பறையறைந்து, தோட்டிக்கு மூத்தானுயிருவரும் அதோகதியையடைவது சித்தம்; ஆனுல், சுவாமி? இந்த மகாவாக்கியத்தான் முத்திபெற்றவருண்டோ? என்னில், அநாதிமுதலிற்றைவரைக்கும் மோட்சமடைந்தவர்களெல்லாம், மகாவாக்கியத்தாலேயாமென்றறி; இத்தனைவிசுவாசமுமக்கேனென்பாயேல், உன் சமுசயத்தைப்பற்றி வந்ததெனவறிக. முதற்பதம்-பரம்; இரண்டாம்பதம்-ஆன்மா; மூன்றும்பதம்-அயிக்கியம்; முதற்பதத்தில் மாயைநட்டம்; இரண்டாம்பதத்திற் கன்மநட்டம்; மூன்றும்பதத்தில் ஆணவநட்டம்; இப்படி யநுபவித்தறிவாயாக. இதற்கு அவிரோதம்,

"செம்பதத்துச்சம்புவுக்குந் தொம்பதத்துப் பண்புணர்த்
தும் பெருமாளே"—எ-ம்,

"வழக்கையறவொருகணக்கையருளியபெருமாளே"—எ-ம்,
"தெளியத்தெளியப்பவளச்சடிலச்சிவனுக்கொருசொற்புக
ல்வோனே—என்றும்,

(அன்றுரைத்த சத்தமே சத்தம்) என்று குறிப்புமொழியாற் காட்டியதும் இஃதேயாம். மகாவாக்கியமறிந்தவனே ஞானி. மற்றைய மந்திரங்களறிந்தவன் ஞானியன்றோ? என்னில்,

"சத்தகோடிமகாமந்திரஞ் சித்தவிப்பிரமகாரணே"—

என்றமையால், அந்தஞானி ஞானியன்றென்பதே சித்தாந்தம். இது தவிர்ப்பஞ்சாட்சரம், பிரணவம், அசபைமுத்திநெறியல்லவோ? என்னில்,

"முத்திபலவும்பகர்ந்தோம் பக்குவத்துக்கிடாய்
முத்தியதிகாரிக்குச்சொன்னமுத்திகுகன்கேள்"—என்னும்

திருவாக்கா லவைகளைத்தள்ளி,

"ஓர்வார்த்தையுட்படுத்திப் பற்றினைப்பதையேன்"—என்பதையேகொள்வாயாக.

மகாவாக்கியத்திற் றிரிசியந்திருக்குமற்றால், ஆன்மாவும் ஆனன்மாவுங் காணக்கடவாய். கண்டு உன்னநுபவப்படியாய்ப் பிழைத்தேன் உய்ந்தேன் கடைத்தேறிப்போனேனென்று தேறித் தேறினேனென்பதையு மறந்துபோனதே சமுசயநிவிர்த்தி. இங்ஙனஞ் சமுசயநிவிர்த்தியானதற் கடையாளஞ் சிவோகம்பாவனை மின்னல் மின்னித் தோன்றுவபோலவாய், அகத்தி னடித்துக்கொண்டிருக்கும். ஆனால் நான் சிவனோ? பின்னைத்தா னாராய்நினைத்தா யறிவில்லாய். ஓஓநாயே! ஓஓபேயே! ஓஓமூடா! ஓஓமூர்க்கா! ஓஓபயலே! என்று விளித்தால், இத்தாதிகளிலும் வெறுப்பையடைந்து, ஓஓசாமி! ஓஓ சற்குரு! ஓஓசைதன்னியா! ஓஓசங்கரா! என்று விளித்தத்தில் சந்தோடம் வந்தமையால், நீயே சிவனென்பதற்குச் சமுசயமேயில்லை. அவிரோதயம்,

"உன்னை யொருவ னுயர்சாமியென் றுரைத்தா
லென்ன மகிழ்ச்சி யங்கே யெய்தினாய்-பின்னொருவன்
பாவி பசுவென்றாற் பதைபதைப்பா யாகையினாற்
சீவனல்ல நீயே சிவன்"—

இந்த மகாவாக்கியம் பொருளல்லவென்பாருமுண்டோ? என்னில், அவரைக்கூடாமல் அவர் வாய்மொழி கேளாமற்போவதே சற்காரியம். இதுபொருளல்லவென்கின்ற புத்தி யெவனுக்கிருக்கிறதோ அவன் கற்பகோடிகாலங்களினு மோட்சமடையானென்பதே சித்தாந்தம்; இதிற்கு ஈஸ்வரவாக்கியமுமுண்டு. சர்வக்கியானோத்தரத்திற் கண்டுகொள்க. சுப்பிரமண்ணியருக்குச் சிவன் கயிலாசபர்வதத்தி லெழுந்தருளி யநுக்கிரகம்பண்ணி யேறுகடைசியில் மகாவாக்கியோபதேசம் பண்ணித் திருவுளம்பற்றியது,

"ஒருவசனமாகவே முடிந்தபொருளுரைத்தோ மொன்றாகக் காண்பதுவேகாட்சி யின்னும்பலவாய்ப், பெருவசனமாகநீபலபடக்கேட்டாலும் பின்னுநாம்நிகழ்த்துவது மிந்தவுப

தேசங், தருவசனஞ்சமுதாயம் பலபொருளும்விளக்குந் தடுமாறுதேகமாய்த்தானேதானுகி, நிருவசனமாய் ஞானமோனமொன்றுமின்றி நில்லாத நிலையன்றி நின்றநிலைநிலையே''—ஆகையால்,

இதுவே கடாசாரம். இப்படி நீயும் அநுபவப்படக்கடவாய். (க)

நீயே சிவம்; நானெப்படி சிவம்? அறியாமை அறிவு இரண்டுக்குஞ் சாட்சி சைதன்னியமானமையால். நீயோ? நானுஞ்சிவமாயே போனேன். எப்படி? உமக்கற்றபடி. இந்தச்சராசரங்களோ? சர்வம்ப்ரம்மமயம். இன்னங் கேட்கவேண்டுமோ. நானூர்? நானே. நீயார்? நீயே. இதற்கு அவிரோதம். ஆகமம்,

''சிவோசிவோ சிவோசீவா சற்சிவோகேவலசிவா''—

''ஆத்மசர்வ்பூதானுங் கேவலஞ்சங்கமஸ்தலம்''—

அத்துவிதம் நீ; துவிதஞ் சரீரபந்தம். மகாவாக்கியத்தில் அசிபதத்துக்காகவந்தது அத்துவிதம். அதற்கு இரண்டல்லவென்பதே சித்தாந்தம். அத்தைத் துவிதக்கலப்பென்பாருமுளர். ஏகமென்றதநுபவத்திற்கேசரி, விவகாரத்தடாதென்பது கண்டுகொள்க,

''சீவனுஞ்சிவனும்வேறு திருப்புவிளைத்துளானே''—

என்பதைக் கடைப்பிடித்தோர்க்கு ஐயந்திரிபு திரிகாலத்துமில்லை. டித் தேவிகாலோத்தரத்தில் (நித்தனும்பரமீச) னென்னும் பாசுரத்தாற் றெளியக்கடவை. (உ)

அநுபவசந்திரிகை-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## பதினெட்டாவது

## திருமுகப்பாசுரம்.

நேரிசை-வெண்பா.

சத்தம் பிறவா விடமேச மாதிநிலை
சத்தம் பிறந்திடமே சங்கநிலை-சத்தம்
பிறவா விடமேதோ வத்தைப் பிடியென்று
றறவாண னம்பலவா ணன்.

(எ-று) சூக்குமைநாதந் தோன்றாதவிடமேசமாதிநிலை, சூக்குமை நாதந்தோன்றினவிடமே தத்துவக்கூட்டமாகிய பிரபஞ்சநிலை, நாதந் தோன்றாதவிடத்தையே யெவ்வழியானு மிறுகப்பிடியென்றான், புண்ணியமூர்த்தியாகிய வம்பலவாண னெமதாசாரியன். (க)

இரண்டாம்பதம்.

அத்த னுரைத்த தறியாயோ வென்ற மையா
லத்த னுரைத்த தறையுங்கா-லத்தனார்
நாதங் கடந்தசிவ ஞானென் றுணர்மினென
வோதுவித்தா னும்பர்க்கன் றுற்று.

(எ-று) அநாதிமுத்தன் ஆதியிலே அநிநிமைந்தர்க்கு நாதாதீதப் பரமசிவமாவது நாமேயென்று திருவாய்மலர்ந்ததை மறந்தாயோவச் சோ! என்றமையா லதை நாடிச்சொல்லுமிடத்துச் சிவப்பிரம கைவத்தமென்னும் புராணத்திற் றிருவுளம்பற்றியது. (உ)

மூன்றாம்பதம்.

அன்றுரைத்த சத்தமே சத்தமிதி லையமிலை
யொன்றே பரமதுநீ யுற்றுணரி-லென்று
நானேநீ நீநானே யென்றுனக்கு நாவின்றே
மோனமொழிக் குண்டோ மொழி.

(எ-று) முன்னமே தீட்சாக்கிரமத்திலே அக்கினியாகாயஞ் சாட்சியாகச்சொன்ன மகாவாக்கியமே வாக்கிய மிதி லையப்படவேண்டாம்; சொன்னேன் சொன்னே னென்றமையால் ஏகம்பரம். அப்பரமே

சீவனாகிய நீ. அதை ஆராயின், என்றைக்கும் நித்தியமாயுள்ளநானே நீயென்றும் நீயே நானென்று முனக்குப் பரிவுடனே சொல்லாமற் சொல்லினோமே; பின்னரும் பேதுற்றுச் சமுசயாத்மனேகேட்டால் மௌனமொழிக்குப் பின்னு மிரண்டா மொழியுண்டோ வில்லை யென்பதாம். (ங)

நாலாம்பதம்.

சலனமிலாச் சித்தஞ் சாங்குசித்த மன்றோ
மலமாயை கன்மமெலா மாண்ட-நிலையன்றோ
பெத்த மகன்றிடமும் பேரானந்தப் பெருக்கு
முத்தமமா நன்முத்தி யும்.

(எ-து) சஞ்சலங்களில்லாத சுசித்தமேசங்கிலிட்ட சித்தத்தையுஞ் சொலினசித்தத்தையுங் கோரசித்தத்தையுங் கடந்தசாங்குசித்தமாகை யால், ஆணவமாயை காமியமிறந்தநிலையாம்; அந்த நிலையேமறைப் பெல்லா நீங்கினவிடமும் மறைப்புநீங்கவே யீச்சுரன் வேறல்ல நாமே யீச்சுரனென்னும் பேரானந்தம் அபரிமிதமாய்ப் பெருகும் பெருக்கமுஞ் சர்வோத்தமமா யெல்லாம் விடுபட்ட சற்சுகமுத்தியு மென்றதாம். (ச)

ஐஞ்சாம்பதம்.

சித்தமே சுத்தசிவ மென்றதிரு வார்த்தை
முத்திக்கு வித்தா மொழியன்றோ-பெத்தமொழி
சீவனே யெல்லா மிறந்தசிவ மென்னும்
பாவனா தீதமொழி பார்.

(எ-து) சித்தமேசர்வமுங்கழன்ற சிவமென்று திருவாய்மலர்ந்தது சாதகராயனுட்டிக்கு மெம்போலிகட்கெல்லா மோட்சத்துக்கு வித்தா கியமொழியல்லவோ; ஆவரணநீங்கிய சீவாத்மனே சர்வமுங்கழன்ற சிவமேயென்னும் பாவனைக் கதீதமொழியென் றனுபவித்துப் பார்ப் பாய் மாணாக்கனே. (ரு)

சத்தம் பிறந்திடத்தே சகலகலை யும்பிறக்கு
மத்த னுரைத் தறியாயோ-வன்றுரைத்த
சத்தமே சத்தஞ் சஞ்சலமொன் றில்லாத
சித்தமே சுத்த சிவம்.

(எ-து) சூக்குமைச்சத்தம் பிறந்தவிடமே சகல கலைக்கியான மாகி யாகப்பிறக்குமென்று சிவன் சொன்னத்தையுமறிந்துமறியாமல் மறந்

தையோ, அன்றுநாம்சொன்ன வாக்கியமே வாக்கியம், சந்தேகப்பட வேண்டாம்; நிர்ச்சஞ்சலமான வாத்மாவே சர்வவுபாதி சூனியரான பராபரவத்து. (௯)

கொச்சகக்கலிப்பா.

"நாற்றமிகும் பூமாலை நற்குரங்கின் கைக்கொடுத்தாற்
போற்றிமணங் கொள்ளாவாம் புத்திதனக் கில்லாமை
வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைத்
தேற்றமிலி கைக்கொடுத்தேன் றேறுவனோ தேருனோ."

(எ-து) மணமிகுந்தபுட்மாலையை நல்லகுரங்கின்கையிலே கொடுத்தால், பாராட்டி யாக்கிராணித்தறியாவாம்; கூர்ந்தபுத்தி யின்மையினாலே தானும் பயனடையாது பிறரும் பயனடையாது எறிந்தாற்போலச் சரியை கிரியாயோகத்தா ரறியக்கூடாத வேதமுடிவிற் சிறந்தவுட்பொருளாகிய வுபநிடதமகாவாக்கியத்தை யச்சோ தெளிவில்லாத மாணக்கன்கையிலே கொடாது கொடுத்தேன் றேறித்தெளிவானோ தேருதொழிவானோ வென்று சந்திரசேகரசுவாமிகள் திரியம்பகருக்கு மத்தியார்ச்சுனத்திற் றிருவுளம்பற்றியதா மறியக்கடவாய். ()

சத்தம் பிறவாவிடமே, அத்தனுரைத்ததறியாயோ, அன்றுரைத்தசத்தமே, சலனமில்லாச்சித்தஞ், சித்தமேசுத்தசிவம், சத்தம்பிறந்திடத்தே, நாற்றமிகும்பூமாலை, இவையின்முதலைந்தும் ஆதி. கடையிரண்டும் அநாதி. (அ)

திருமுகப்பாசுரம்-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார் சாத்திரம்.

## பத்தொன்பதாவது

## அதிகாரப்பிள்ளை யட்டவணை.

சிவஞான மோகதாக மீதூர்ந்த அதிகாரப்பிள்ளை, ஈசனார் யானார் என்னைமறைத்திருக்கும் பாசமியாதென்றும்வீசாரமீக்கொண்டு கேட்கக் காரணஞானக் கண்ணுடையோன் சித்தாந்த மகாவாக்கியம் விவகரிக்கும்படி. சிவம் நானுனேனென்ன நானுெொன்ன நீயுஞ் சிவம் எப்படியென்ன ஞானதீக்ஷையால், திருநோக்கால், திவ்வியபாவனையால், சிவயோகத்தால், திருவாக்கால், திருப்பரிசத்தால், சிவமானுயென்ன எனக்குண்டான அநுபோகசிவ மெங்குமுண்டோவென்ன அச்சிவமானது, பூதபௌதிகங்கடோறு முண்டென்ன. விந்த வாக்கியத்தாலுய்ந்து போனேனென் றுனந்தமாக் கடலமூந்திய மாணுக்கனுக்கு மீட்டும் வற்புறுத்திமேற்கூறுவார்.

முதல்வாக்கியஞ் சத்து, இரண்டாம்வாக்கியஞ் சித்து, மூன்றும் வாக்கியம் ஆனந்தம் ; முதல்வாக்கியத்தான் மலநாசனம், இரண்டாம் வாக்கியத்தாற் கன்மநாசனம், மூன்றும்வாக்கியத்தான் மாயை நாசனம் ; முதல்வாக்கியத்தால் சஞ்சிதநீக்கம், இரண்டாம்வாக்கியத்தாற் பிராரத்தநீக்கம், மூன்றும்வாக்கியத்தா லாகாமியநீக்கம் ; முதல்வாக்கியம் பிரமா, இரண்டாம்வாக்கியம்விஷ்ணு, மூன்றும்வாக்கியம் உருத்திரன் ; முதல்வாக்கியம் ஞாதுரு ஞானஞேயமிறந்தநிலை, இரண்டாம்வாக்கியந் தற்போக்கு, மூன்றும்வாக்கியம் ஞானகேவலம், இதற்குச் சாமியம், பதிபசுபாசவிளக்கம்,

"சிவத்துவமசிசிவோக மத்துமிசிவோயமத்தி
நவத்துதிவாக்கிய"—மென்னுந் திருவிருத்தம்,

முதல்வாக்கிய விசேடம் வருக்குதும். சிவனார் ? சீவனார் ? உபாதியொழிவிற் கூடாமற்கூடலைக்காணுதி. இரண்டாம்வாக்கியம்விசேடம்வகுக்குதும். சர்வமுங்கழன்ற சிவம், சர்வமுங்கழன்ற நான், சர்வமுங்கழன்றுனேன். சர்வானந்த ஊற்றிற் பிரளயமுதித்தாற்போன்ற தன்மைகண்டையோ ? கண்டேன்,

"கண்டேனவர்திருப்பாதங் கண்டறியாதனகண்டேன்"—

சுவானுபூதிக்குச் சாமியம் வருத்தனம். மூன்றும்வாக்கிய விசேடம் வருக்குதும். சர்வமுங்கழன்ற சிவன், பூதபௌதிகங்கடோறு முளன்,

"புல்லுயிர்க்குப்பூட்சி புணர்த்தாய்போற்றி
கல்லுயிராய்நின்ற கனலேபோற்றி"—

"உரைசேருமெண்பத்துநான்கு நூறாயிரமாம்யோனிபேதம்
நிரைசேரப்படைத்தவற்றி னுயிர்க்குயிராயங்கங்கே நிற்பான்கோயில்"—

சிவானுபூதிக்குச் சாமியம் வருத்தனம். வாக்கியமேன்மை விசிட்டம் வருக்குதும்,

"*சிவத்தொமசியென்னுந் திருவாக்காலென்றன்
பவத்தைநசித்த பரனே"—

(எ-து)சத்தியதிருவாணதீக்கையிற்செவிப்புலன்வழி வாதுளாகமத்துண்டாகிய மகா வாக்கியார்த்தத்தால் சிவம் நீயாறுய் என்று திருவாய்மலர்ந்து என்னுடைய வெழுவகைத்தோற்றப் பிறப்பை நாசம் பண்ணிய மேலோனே,—அவத்தையிலே என்பது,—கீழாலவத்தையிலேயும் மேலாலவத்தையிலேயுஞ் சுத்தாவத்தையிலேயும்,—சீவனென்றும், கேவலத்திற் சேதன னன்றென்றும் ; என்பது,—சீவாத்மாவென்றும், அந்தராத்மாவென்றும், பூதாத்மாவென்றும், அறுதி கேவலத்திற் சேதனவியாபக னன்றென்பதே சித்தாந்தமென்றும், அசேதனன், சிதாபாசன், சதசத்தன், அகர்த்தா, ஆமயன், ஆணவமூடன், அசிந்தியன் என்று பலவாற்றானும்வந்த பாவனைகள்போமாபகர். என்பது,—நான் மூடன், நான் கிஞ்சிக்ஞியன், நான் சத்தன், நானவலன், நான் பாவி, நான் சமுசாரி,நான் பிறப்பவன், நானிறப்பவன், நான் சீர்காழியிலேபிறந்தேன், சிதம்பரத்திலே வளர்ந்தேன், திருவாரூரிற்சென் றிறப்பேனென்னு மளவிறந்த பாவனைகள் போமாறறியாது புலம்புகின்றேற் குய்வண்ணங்காட்டி யுபாயஞானத்தாலுளவாகுமுபதேச ஞானமாத்திரத்தாற்போமாறு திருஞானசம்பந்த நாதனே திருவாய்மலர்.

---

"*சிவத்தொ மசியென்னுந் திருவாக்கா லென்றன்
பவத்தை நசித்த பரனே-அவத்தையிலே
சீவனென்றுங் கேவலத்திற் சேதனனன் றென்றும்
பாவனைகள் போமா பகர்"—

"¶பொன்மலையைச்சார்ந்த சிறுகாக்கைப்புள்ளினங்க
டன்னிறமுமந்நிறமாய்ச் சாருமால்"—

(எ-து) மகாமேருவென்னுஞ் சாம்பூநதமாகிய வாயிரத்தெண் மாற்றுப் பொன்மலையிற்சேர்ந்த சிறிய காக்கைப்பக்ஷிகள் பொன்மய மாய்ப் பின் கருநிறம் நினைப்பினில்லாமையாய்ச் சாம்பூநதமாய்ச்சார்ந்த தன்மையைப்போன்று,

"———————— முன்னவனைச்
சேர்ந்தாருமண்ணச் சிவோகம்பாவித்தலா
லாய்ந்தவனே"—

(எ-து) உபாதிகுனிய சிவனையுபாதிகுனிய சற்சிவனுய்ச் சேராமற் சேர்ந்தாரும் பரமவித்திரமாகிய சிவோகஞ் சிவோகமென்று பன்முறையாற்பயிற்றித்தியானம் பண்ணலாலே பலநூலையுமாய்ந்து மகாவாக்கிய சிரவணப்படாதசமுசயாத்மனே,—ஆமாறறி, என்பது,இந்த இரண்டாம் வாக்கியத்தாற் சமுசயநிவிர்த்தி யடைந்து அது நீயான வண்ணங் குப்பக்காட்டுக் காக்கை நாமென்று நினையாத வண்ணம் போன்று என்றல் நீ யானைதன்மையு முன்சிவத்தன்மையையு மிவ்வணமென் றறியாதறிந்துணர்ந் திந்நிலையிலேநிற்பாய் அடிக்கடிவாக்கியசிரவணத்தாற் சிவபாவனையைக் கழற்றி,

"*சீரார்சிவோயமத்தி யென்னுந்திருவாக்காற்
பேராசையெல்லாம் பிரித்தோனே"—

(எ-து) அழியாத சிறப்புடைய சிவன் பூதபௌதிகங்கடோறு முண்டென்று திருவாய்மலர்ந்து பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரனிலும், பிருதிவி யப்பு தேயு வாயு வாகாசந்திலுஞ் சந்திரன் சூரியனுத்மாவிலும், பூமி யந்தரம் பாதாளத்திலு, மாண்பெண்ணலியிலும், விருப்பு வெறுப்பு நொதுமலிடத்திலு, மிருக்கக்காட்

"¶பொன்மலை யைச்சார்ந்த சிறுகாக்கைப் புள்ளினங்க
டன்னிறமு மந்நிறமாய்ச் சாருமால்-முன்னவனைச்
சேர்ந்தாரு மண்ணச் சிவோகம் பாவித்தலா
லாய்ந்தவனே யாமா றறி"—

"*சீரார் சிவோயமத்தி யென்னுந் திருவாக்காற்
பேராசை யெல்லாம் பிரித்தோனே-ஆராத
வன்பாலுன் பாதத்துக் கர்ச்சனையு மற்றிரண்டி
லென்புருகும் பத்தியுமெற் கீ.

டியனித்தியத்தை நீக்கி நித்தியத்தைக் காட்டியநாதனே,—ஆராத வன்பால் என்பது,—இந்த மூன்றும்வாக்கியத்தா லாசைக்கிழங்கை யகழ்ந்தெடுத்த வல்லபத்தை நினைந்தமாத்திரத்தெழுந்த வன்பைப் பாழாக்காம லவ்வன்பால்,—உன் பாதத்துக் கர்ச்சனையுமற்றிரண்டி, லென்புருகும்பத்தியு மெற்கீ என்பது, சாமிகள் ஸ்ரீபாதங்களுக் கர்ச் சனையும் சிவலிங்கப்பெருமானிடத்திலேயுஞ் சரமூர்த்திகளாகிய சங் கமத்தினிடத்திலேயுங் கடின வெலும்புகளெல்லா முருகும்படிக்குச் சிவபத்தியு மடியார்பத்தியு மாயாவாதியைப்போலப் பாழ்போகாம லெனக் கநுக்கிரகம்பண்ணக்கடவாய். வாக்கியமேன்மை விசிட்டம் வகுத்தனம்.

வாக்கியசித்தாந்தம் வகுக்குதும். முதற்பதம் சச்சிதானந்தமாய், நிராமயமாய், நிட்களமாய், நின்மலமாய், யனந்தானந்தமாயிருக்கும். இதற்குச் சாமியம் ; பதி பசு பாசவிளக்கம். பதியிலக்கணம்,

"நிராமயமாய் நிட்டகளமா நின்மலமாய்"—

என்ற திருவிருத்தம், இரண்டாம்பதம். சராகாயமாய் நின்ம லோதகமாய் அகளங்கமாய் அபிவிர்த்தியாய்ச் சாங்குசித்தமாய்ச் சுசி ர்ப்பூதமாய்ச் சுத்தபடிக சங்காசமாயிருக்கும் ; இதற்குச் சாமியம்; பதி பசு பாசவிளக்கம். பசுவிலக்கணம்,

"ஆன்மாசுத்தன் சதாநித்தன்"—

என்ற திருவிருத்தம். மூன்றும்பதஞ் சுகோதயமா யிரண்ட ற்றவின்பமாய்த் தடையற்றவானந்தமாய்ச் சமுசயஞசமாயிருக்கும்; இதற்கும் சாமியம் ; பதி பசு பாசவிளக்கம். நின்மலாவத்தையில்,

"போக்கிலேவரவிலே புனரக்கையிலே"—

யென்னுந் திருவிருத்தம். வாக்கியசித்தாந்தம் வகுத்தனம். மேல் வாக்கியவிசேடம் வகுக்குதும்,

"ஆக்கையே தானென் றபிமானி யாக்கிவிக்கு
மோக்கமிலை யென்றே முடிப்பிக்கும்-பூக்கமழும்
பூங்குழலா ரின்பப் புணரியைமெய் யாக்குவிக்கும்
வாங்குதலைச் செய்யா மலம்"—

(எ-து) ஆக்கையே யாத்மாவன்றிப் பிரத்தியேகாத்மாநாத்தி யென் றறிவைப்பிறித் தபிமானிப்பட்டங்கட்டு மகாவாக்கியத்தால் வரும் மோட்சானந்த நாத்தியென்றே சித்தாந்தப்படுத்திப் பூவார்ந்த வழகிய வளகபாரத்தையுடைய மாதர்பால்வரும் பொய்யாகிய வின்ப

வெள்ளத்தினை மெய்யாகவழுந்தி முழுகப்படுத்தும். எக்காலமும் விளைதலில்லாத வாணவமலம் பிரதமவாக்கியத்தி லசிபதத்திற் காண்பாய். இந்தப்பிரகாரத்தைச் சிவஞானப்பிரகாசத் துண்மையிற்கண்டுதெளியக்கடவை. பதி பசு பாசவிளக்கம், ஞானவிளக்கம், உபதேசமாலை, சிவஞானப்பிரகாசம், அத்துவிதக்கலிவெண்பா, அதிரகசியம், சிவாகமக்கச்சிமாலை, இந்தவேழு மொருகொத்தாயிருக்கும். இவற்றிற் பதி பசு பாசவிசாரணையும், உண்மைநிட்டையும், தசகாரியவிசேடமும், குருசிரத்தையும், மகாவாக்கியமும், நிட்சாக்கிரமமும், ஞானோபதேசமும், ஆகமசித்தாந்தமுங் காணக்கடவை. சத்திய நிருவாணதீக்கை யில்லாதவர்க் கிந்தமார்க்கம் போதிக்கில் நீரருந்துமாவையதட்டினேன் சாருங்கதியடைவை ;

"புண்ணுடலை நீப்பேனோ போன்றாத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ-வெண்ணுடைய
வஞ்செழுத்தி னுண்மை யறிவேனோ வாங்கதனுட் [ய
பிஞ்செழுத்தைப் பின்னிடு வேனோ."—

அதிகாரப்பிள்ளையட்டவணை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

வெள்ளத்தினை மெய்யாகவழுத்தி முழுகப்படுத்தும். எக்காலமும் வளைதலில்லாத வாணவமலம் பிரதமவாக்கியத்தி லசிபதத்திற் காண்பாய். இந்தப்பிரகாரத்தைச் சிவஞானப்பிரகாசத் துண்மையிற்கண்டுதெளியக்கடவை. பதி பசு பாசவிளக்கம், ஞானவிளக்கம், உபதேசமாலை, சிவஞானப்பிரகாசம், அத்துவிதக்கலிவெண்பா, அதிரகசியம், சிவாகமக்கச்சிமாலை, இந்தவேழு மொருகொத்தாயிருக்கும். இவற்றிற் பதி பசு பாசவிசாரணையும், உண்மைநிட்டையும், தசகாரியவிசேடமும், குருசிரத்தையும், மகாவாக்கியமும், நிட்சாக்கிரமமும், ஞானோபதேசமும், ஆகமசித்தாந்தமுங் காணக்கடவை. சத்திய நிருவாணதீக்கை யில்லாதவர்க் கிந்தமார்க்கம் போதிக்கில் நீரருந்துமாவையதட்டினேன் சாருங்கதியடைவை ;

"புண்ணுடலை நீப்பேனோ போன்றுத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ-வெண்ணுடை
வஞ்செழுத்தி னுண்மை யறிவேனோ வாங்கதனுட் [ய
பிஞ்செழுத்தைப் பின்னிடு வேனோ."—

அதிகாரப்பிள்ளையட்டவணை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.

## இருபதாவது

## மரபட்டவணை.

### உபதேசமரபு

### இதுகர்ணபாரம்பரை.

(சிவமேவம்பரந்தெய்வம்) என்னுங் கருத்தைப்பற்றித் தெய்வமென்பதோர் சித்தமுண்டாகிச் சிவனென யானுந்தேறினன் றேறிய காலத் தேயத்துளனோவென்றித் தேயத்திற் சிறந்த சினகரத்துளனோவென்று மனந்தடுமொழி மயங்கியகாலை யறிவிடைமறைந்த வமலனோர் குருவாய்ப் புவனியிற் சேவடிதீண்டிப் போதித்த வான்மொழிக்கு அருத்தம் பூதப்பழிப்பிலும் பொறியறவுணர்த்தலு மந்தக்கரணவடுக்கழிமுடிவினும் கண்டேனவர் திருப்பாதங் கண்டறியாதனகண்டேன் கண்டபெருமிதத்தானிறும்பூதிட்டு மாலயனறியை யலர்தூற்றுக் கூற்றுக்குணஞ் சிலவருமாயிற்று,

"நாடிநாரணனான்முகனென்பவர்
தேடியுந்திரிந்துங் காணவல்லரோ
மாடமாளிகை சூழ்தில்லையம்பலத்
தாடிபாதமென் னெஞ்சுளிருக்கவே"—

என்றாரின்னும் பற்றத்

"தேடிக்கண்டுகொண்டேன் றிருமாலொடுநான்முகனுந்
தேடியுந்தேடொணாத் தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன்"—.

என்னுமிக் கூற்றுக ளுபதேசமரபு.

### வைதிகமரபு.

வையச்சொல், வழக்கச்சொல், வேதச்சொல், விதிச்சொல் இந்த நான்கானும் வற்புறுத்திக் கூறுவான் றொடங்கினார். உலகவெறுப்பு முடல்வெறுப்பு மீக்கொண்ட மாணாக்கனுக்கு ஞானதேசிகர் திட்டாந்தமுகத்தால் அனித்தியதரிசனம் வையச்சொல் மேல்வைத்துக் காட்டுகிறவண்ணம், (நடலைவாழ்வுஞ் சுடலைக்குடியிருப்புமென்றும்,

காணப்பட்டதெல்லா மழியப்பட்டதென்றும், சாகாதநாட்டி லோலை வாங்கிவந்தோமோ வில்லையேயென்றும், இன்றைக்கோ நாளைக்கோ வின்னமனை நாழிகைக்கோவென்றும், வரவிட்டவன் றரவிட்டால் கில்லாதேயென்றும், நிலத்திலெழுந்தபூண்டு நிலத்திலே மடியுமென்ன்றும், நேத்திருந்தாரின்றைக்கு நீறுனாரென்றும், திட்டெனவிழுந்து பொட்டெனப்போம்) என்றும், இவ்வாறு வருமனந்த வையச் சொல்லாற்றெளியக்கடவை. இந்தச் சரீரம் நீயல்ல; நீ யசரீரி. அகாயன் ஆத்மாவென்று வேதம்வெகுவசனமாகச் சொல்லும். இது என்னநுபவத்துக்குப் பற்றவில்லையே யென்பாயேல்,வழக்கச்சொல்லாற்றெளியக்கடவை. (நான்சாட்சியாயிருக்கிறேனென்றும், தன்னை விடப்பிரபஞ்சமில்லையென்றும்,தானாய்நின்று தனமாய்ச்சொரியுதென்றும், அஞ்செழுத்தும் பாவனையு மவனே யிவனென்றும்,தானே சிவமல்லாற் றனிச்சிவம் வேறில்லையென்றும், சிவனுக்குஞ் சிவனுக்குஞ் முதற்சிகாரச்சுழியாகிய நீயன்றி வேற்றுமையில்லை) யென்றும்,

"அறிவேசிவமென் றறிந்திலாய்கொல்லோ"—

வென்றும், இவ் வழக்கச்சொல்லால் ஆத்மா நாமென் றறியக்கடவாய். இங்ஙனஞ் சொல்லிய வநுபவம் சம்பவமாகவில்லையே யென்பாயேல், வேதச்சொல்லாற்றெளி, அஃதெங்ஙனம் ? என்னில்,

"பாசபத்ததேசிவா பாசமுக்தேசதாசிவா"—எ-ம்,
"திட்டேபூர்வமாத்மா யேகமேவா"—எ-ம்,
"சரீரபின்னம் பரமாத்மனேகம்"—எ-ம்,
"ஏகப்ரம்மம்"—எ-ம்,
"சர்வசாட்சி சிவோகம்"—எ-ம்,
"பிரத்தேகாத்ம சிவோகம்"—எ-ம்,
"சமனுந்தம்பாசசால முன்மனுந்தம்பரசிவா"—எ-ம்,
"சிவோதாதா சிவோபோக்தா"—எ-ம்,
"அன்னம்ப்ரம்மா ரசேர்விஷ்ணு
போக்தாதேவோ மஹேஸ்வரா"—எ-ம்,
"கர்த்தாபோக்தா செனார்த்தன"—எ-ம்,

ஆயிரமுகத்தாலு மகலச்சொல்லிய வேதச்சொல்லா லீசரருண்டென் றறியக்கடவாய். சமுசய மென்னைவிட்டு நீங்கவில்லையே யென்பாயேல், விதிச்சொல்லவேண்டுமோறு வரும். அதனாற்சமுசயம் நீங்கக்கடவாய். அஃதெங்ஙனம் ? என்னில்,

விடக்கடவன். சிவபாடாணத்தைச் சிவமேலிட்ட வாசாரியாகிய சிற்பன் சிவபாவனையைச் சேர்த்து மகாவாக்கியத்தாற் சிவம் நீயானு யென்றமாத்திரத்தே சிவமான தன்மையாற் சிவபாவனையை யெப்பாலும் நாத்தியென்பதே சித்தாந்தம். வேடச்சேரி, வேடர், ராசாப்பிள்ளை, வேட்டைவனம், வேட்டைநாய், வேடக்கோலம், ஆக-சு. வேடச்சேரி-யஞ்ஞானம், வேடர்-பஞ்சதன்மாத்திரை, ராசாப்பிள்ளை-ஆத்மா, வேட்டைவன-முலகம், வேட்டைநாய்-அந்தக்கரணம், வேடர்கோலம்-சரீரம்; ஆத்மாவாகிய சிறுபிள்ளை, அஞ்ஞானமாகிய வேடச்சேரியை முன்னைவினையா லடைந்து, நாம் சைதன்னியனென்பதை மறந்து, வேட்டைவனமாகிய வுலகத்தையடைந்து, வேட்டைநாயாகிய வந்தக்கரண வசத்தனாய்த் தசேந்திரிய துவாரத்தினால் வேட்டைக்காரராகிய தன்மாத்திரையோடுங்கூடித் தயிலதாரைப்பிரவாகனாகிய வேடக்கோலச் சரீரத்தைத் தழுவிச் சீவாத்மாவென்னும் நாமஞ்சிறப்பவந்தான். இது போமாறு. ஞானவரசன், ஞானவேட்டையாடுவான்காலைக்கண்டு, சீவராச வேடப்பிள்ளாய் நீ நம்மினத்தாய்; அஞ்ஞானவிளமையா லென்னைமறந்தாய்; என்வண்ணமே நின்வண்ணம் அன்னியர்வண்ணம் நின்வண்ணமன்று. அந்தக்கரண ஞாளிசம்பாடன முனக்கடாதென் றநுக்கிரகித்தார். சைதன்னியத் தராபதியாக்கின தன்மைபோலச் சீவவேடு நீக்கங் கண்டுகொள்க. சாமியம்,

"மன்னையுமறந்துமிக்க வனசரவடிவமாகித்
தன்னையுமறந்திருந்த தனயனைப்போன்றுநீயு
மென்னையுமறந்தைம்போத வெயினர்தம்வடிவமாகி
யுன்னையுமறந்தால்நீயென் னுருவெனவுணர்ந்துகொள்ளே"

"மன்னவன்றன்மகன்வேட ரிடத்தேதங்கிவளர்ந்தவனை
அறியாது மயங்கிநிற்பற்"—

"தானாக்கி மழரடிக்கீழ்வைப்பன்"—

கன்மவொப்பு. நல்வினையுந் தீவினையு மொன்றாகக்காண்பது. அஃதெவ்வாறாறெனின், பொன்விலங்கும், இருப்புவிலங்கும் பிரகாசம் அப்பிரகாசம்வேறன்றித் துக்கமிரண்டிற்குஞ்சரி. பொன்விலங்கைப்போலப் புண்ணியம், இருப்புவிலங்கைப்போலப் பாவம். விலங்கார்ப்புண்டவனைப்போலச் சீவன். விலங்கைப் பூட்டினவனைப்போலச் சிவன். துக்கத்தைப்போல அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்துக்குச் சாட்சிபூதம் நாமென்றறியின் அஞ்ஞானமுமில்லை. நல்

வினைதீவினையாகிய விலங்குமில்லை. அதற்குமுன்னே நரகசொர்க்கமுமில்லை. இதற்குச் சாமியம்,

"ஒன்றுடனுந்தோய்வில்லான் என்றுநினைந்
தடிக்கடியும்பிரமமென நோக்குதலேயியல்பதாமே"—
"நித்தனும்பரமீசன் யானென்றுநிச்சயிக்கின்
முத்தனலனெனினு மவன்முத்தனும்"—
"பூவும் புகையுங் கொண்டேத்திப் புறம்பே போய்ப்
பாவனையால் வாளா பரிசிழப்ப-ராவா
நமையுறப் பார்க்கிற் றெய்வ நாமேயா மென்று
தமையுறப் பாராதவர்க டாம்"—
"ஆகநாமல்லவிந்த வைம்பொறிநாமேயல்ல
வேகனேநாமென்றுன்னு மிருடிகளிதயத்துள்ளாய்
பாகமாமுமைமணாள பசுபதிபிறவிவேண்டேன்
சேகறுமுத்திவேண்டுந் திருப்புலிவனத்துளானே"—

மாயையென்பது மனம். இந்த மனமாயையிலே அண்டபிண்டம் அரிகரப்ரம்மாதி நவந்தருபேதமு முண்டாயிற்று. இந்த மனஞ் சற்குரு கடாட்சத்தா லிறந்தபோது எல்லாமிறந்தது. அறிவாய்நின்முல் மனமில்லை. மனமாய்நின்மு லறிவில்லை. அறிவே சிவம்; சிவமேயறிவு; மனமே மாயை; மாயையே பிரவஞ்சம்; பிரவஞ்சமே சரீரம்; சரீரமே தத்துவம்; தத்துவமே நாதம்; நாதமே விந்து. இப்படி சிருட்டிமார்க்கங் காணக்கடவை. சாமியம்,

"அறிவினிலகமுண்டாகி யகத்தினின்மனமுண்டாகிப்
பிறிவருமனத்தின்மாயை பிரவஞ்சமாயைதன்னின்
மறிவுலகத்தினுக்கை வந்தவிம்மாயமெல்லாஞ்
செறிதராதருளிச்செய்யாய் திருப்புலிவனத்துளானே"-

ஆகாசவுவமைகள் வருமாறு. ஆகாசம், கடங்கள், கடாகாசம், கடசலம், கடசலவழுக்கு, ஆக-௫. ஆகாசம்போலச் சிவன். கடங்களைப்போலச் சரீரம். கடாகாசம்போல வாத்மா. கடசலத்தைப்போல வந்தக்கரணம். கடசலத்தழுக்குப்போலப் பஞ்சபாசம். இந்தச் சிருட்டிக்குச் சங்காரமுண்டோ? உண்டு, எப்படி? சூரியன் சந்நிதானத்தில் சலம்வறண்டு அத்தோடே அழுக்கும்போம். கடாந்தத்திற் கடாகாசம் மகாகாசமாம். புண்ணியபாவம் ஞானிக்குண்டோ?

வில்லையோ ? உண்டெந்தா னில்லையுந்தான். ஆனாலேகமோ ? அன்று. பின்னையெப்படி ?

"இன்பமுந் துன்பமு மில்லானேயுள்ளானே"—
என்பதைப்பற்றி வந்தனவாம்,

"மெய்யைப்பொய் யென்றான் வெளியையல்ல வீடென்றான்
சைவத் துரைகாழிச் சம்பந்த-னையமற
நின்போதம் போமிடத்தே நீயே சிவமென்றா
னென்போதத் துள்ளே யிருந்து"—

(எ-று) மெய்ப்பேர்கொண்ட சரீரம் நீயல்ல அது பொய்யென்றான், இருவிதமாயையு மிறந்தவிடத்திற் பிரகாசித்த சூனியமே நன்மையுடைய வீடென்றான், சைவசமயத்துக்குஞானமன்னன் சீகாழிச் சிவஞானசம்பந்தசுவாமியென ஐயந்திரிபுக ளறுக்கும்படிக்குத் தற்போதப்போக்கே நான் தற்போதமீட்சியே நீயென்றான், என்னறிவினுள் ளெழுந்தருளியிருந் தென்றவாறு. (இது தற்போக்கே சிவமென்றுகூறியது.) (க)

"இருந்த படியிருந்தா லிறையுருவந் தோன்றும்
பொருந்துமல மிம்மையிலே பொன்று-மிருந்தபடி
யேதென்றங் குன்னியிரண் டாட்டுவார்க் குண்டோ
போதமுண்ட பிள்ளை புகல்"—

(எ-து) சிருட்டிக்குமுன்னுள்ள சுபாவசைதன்னியமாயிருக்கில் சுகாதீத சிவந்தோன்றும், தோன்றியவந்நிலையே யநாதிசம்பந்தமான வாணவ நசிக்கும். இங்ஙனமன்றி இருந்தபடி யெவ்வண்ணமென்று போதக்கையாற் றடவி யாங்கொன்றுந் தட்டுப்படாமையா லென்செய்யக்கடவேன் றெய்வமேயென்று தெய்வத்தை நொந்து தோத்திரமாதியவற்றா லிரண்டுபடுத்துவார்க்கு எங்ஙனமுண்டாம், ஞானப்பாலுண்ட சம்பந்தபிள்ளைப் புகலிடமென்றவாறு. (இது போதத்தை யழிக்குமுபாயங் கூறியது.) (உ)

"புகலிக் கரசேயுன் பொய்ப்போ தம்போனால்
சகலமறுங் கேவலமுந் சாயு-மகலாத
நல்வினையுந் தீவினையு நட்டமா மென்றுரைத்து
மொல்கா வென்போத வொழுக்கம்"—

(எ-து) புகலியென்னுந் திருப்பதிக்கரசாகிய சம்பந்தசுவாமி, உன் பொய்ப்போத மிறந்துபோனால் நினைப்பு மறப்புங்கெடும்,

கெடவே சகலங்கெடும், சகலங்கெடவே கேவலமுமிறக்கும், இறக்கவே யிரண்டறப்பின்னரி யகலாத நல்வினை நாசமாம். அதற்குமுன்னே தீவினையு நாசமடையுமென்று நீயுரைத்த திருவாய்மொழியைச் சிரத்தையாற்கொள்ளாத வென்போதத்துக் கென்கொலோ பிரவிர்த்தியே யடைவதன்றி நிவிர்த்தியடையவில்லை யென்றவாறு. (இது அறிந்தமறியாமையைக் கூறியது.) (௩)

"போத வொழுக்கமென்று பொன்றுங்கொல் சம்பந்த
நாதனே யுள்ளபடி நாட்டுவாய்-பேதா
யறிந்த வறிவெல்லா நாமன்றறிந்திட் டாங்கே
செறிந்தறிவாய் நிற்கிலிறுந் தேர்"—

(எ-து) பிரவாகனுதியாய் பொய்ப்போத வொழுக்க மெக்காலமிறக்குங்கொல்லோ சம்பந்தசுவாமி சித்தாந்தப்படி நாட்டவேண்டுமென்ற விண்ணப்பத்துக்கு விடை. யறிவில்லாத சீடனே கேள் கிரியையறிவெல்லாஞ் சுபாவ சைதன்னியமாகிய நாமல்லவென்று நியதிகளைந்து, நின்ற சுயம்பிரகாசத் திருக்கே நாமென்றறிவாய் நிற்பாயேற் போதங்கெடுவதன்றிப் பிறவேதுக்க ளைத்தாலுங்கெடாதென்பது தானேயாயிற்றென்றறிவா யென்றவாறு. (இது போதநிரியாணவொடுக்கங் கூறியது.) (௪)

"தேரிலதி தூரமெனச் சிந்தைவிடா தையென்று
ரேருருவா யினையென்ற வும்ப-ரேரு
மறிவே யறிவென்று னவ்வறிவுக் கப்பா
லறியோ மறிவை யறிவால்"—

(எ-து) விசாரிக்கி லிங்ஙனஞ் சொல்லிப்போந்த வறிவு வெகுதூரம் எமக் கெட்டமாட்டாதேயென்று சித்தத்தைச் சோரவிடாதேயென் றருளிச்செய்தான். திருவெழுகூற்றிருக்கையி லோருருவாயினையென்ற ஞானசம்பந்ததேவன், அவனருளிச்செய்த நியாதோவென்னிற் சர்வத்தையும் விசாரித்தறிகின்ற சைதன்னியமே சைதன்னியமென்றுணர்தற்கப்பா லநுபவமில்லை. சைதன்னியவறிவைக்கொண்டறியவென்றென்றவாறு. (இது சைதன்னியத்துக்கு மேலநுபவமில்லையென்றறிவித்தது.) (௫)

"அறிவா லறியப் படும்பொரு ளேயாகிற்
பொறியா லறியப் புகாவோ-பொறியாரக்
கண்டதெலா மாயையெனக் கண்டித்தான் மெய்ஞ்ஞா
மூண்ட திருச்செவ்வாயா றுற்று"— [ன

(எ-து) பிரமேயமாய்ப் பூரணவத்துப் பிரமாணமாகாதோ வாலுல் இந்திரியகாட்சிக்குத் தூரமல்லவேயென்ற விண்ணப்பத்துக்கு விடை. இந்திரியத்துக்கெட்டிய பொருள்களெல்லாந் திரிசியமாயையென்று கண்டித்து விலக்கினன் மெய்ஞ்ஞானப்பாலைப் பானம்பண்ணின திருச்செவ்வாயா னங்ஙனெழுந்தருளி வந்தென்றவாறு. (இது திரிசியமாய்க் காணப்பட்டவையெல்லா மாயாகாரியமென்றது.) (சு)

“உற்றுணரி னீயே யுயர்பிரம மென்பதுவு
மற்றசிவன் ருனாய் வகுப்பதுவு-முற்று
மிறந்த விடத்திரண்டு மேகமே யென்ருன்
சிறந்த சீகாழி வருதே”—

(எ-து) சிறப்பையுடைய சீகாழி ஞானசம்பந்த தெய்வம்பொருந்தி விசாரிக்குமிடத்துத் தத்துவமசி மகாவாக்கியமும், சிவத்துவமசி மகாவாக்கியமும், வேதாகமம் வகுத்தகிரமஞ் சமயவாதிகளுக்குச் சம்மதப்படாது. மாயாபோதமு மஞ்ஞானமு நீங்கிச் சிவபோத மிறந்த விடத்திலும், தத்துவங்களு மாணவமலமும் நீங்கி யான்மபோத மிறந்தவிடத்திலும், வேதவாக்கியமு மாகமமகாவாக்கியமு மாணிக்கமும் அரதனமும் போலாமென்ருு னென்றவாறு. (இது மகாவாக்கியவிசேடமுஞ் சமயாதீத விசேடமுங் கூறியது.) (எ)

“தேவே திருஞான சம்பந்த தேசிகனே
யோவிலெழுத் தஞ்சினையு மோதாய்கொல்-லாவியார்
பின்னி ரண்டைத் தள்ளிப் பிரியாத வானந்த
முன்னிரண்டைக் காணுதன் முத்தி”—

(எ-து) தேவனே திருஞானசம்பந்தனென்னுந் திருநாமத்தினையுடைய வெமது ஞாநசாரியனே யோர்காலத்து மொழிவின்றிய அஞ்செழுத்தி னுண்மையைத் திருவாய்மலர்ந் தருளிச்செய்யவேண்டுமென்ற விணுவுக்கு விடை. யகாரமாகிய வாத்மாப் பின்னுகிய நகாரமகாரங்களைத் துக்கவேதுவென்று தள்ளி, முன்னுகிய வகாரசிகாரங்களை விட்டுப் பிரியாதது வானந்தவேதுவென்று தழுவிக் காணுதன் முத்திநிச்சயமென்றதென்றவாறு. (இது பஞ்சாக்கரத்தின் முத்திநிலை கூறியது.) (அ)

“முத்தி நடனத்தை மொழிஞான சம்பந்தா
சத்திதிரு வம்பலத்திற்ருன் ருனாய்ச்-சுத்தவுயிர்
காணமுய லகனைக் காலான் மிதித்தருளித்
தாணுநடம் புரிவன் ருன்”—

(எ-து) மோட்ச நடனதரிசனத்தை யான் காணத் திருவாய்மலர்ந்தருளவேண்டுந் திருஞானசம்பந்த தேசிகனேயென்ற வினாவுக்கு விடை. வகாரமாகிய சிற்றம்பலத்தின்கண்ணே சிகாரத் திருமேனியோடுங் கூடினவனு யகாரவுயிராகிய சுத்தாத்மாக்கள் தெரிசிக்கும் பொருட்டு ஆணவமாகிய முயலகனை யொருபாதத்தி லூன்றி மாயையை யொருபாதத்தா லுதைப்பான் றவாநந்தத் தாண்டவராயர்நடன தரிசனத்தைக் காண்பாயென்றவாறு. (இது பஞ்சாக்கர சொரூபமாகியதிருவம்பலதரிசன நடனத்தைக் கூறியது.) (சு)

"தானே சிவமான சத்தியஞா நாநந்த
மோனநிலை சொல்காழி முன்னோனே-ஞானிகடம்
முள்ளமா காயமா மொன்றுய வாநந்த
வெள்ளமாய் நிற்குமவர் மெய்"—

(எ-து) ஊன சம்பந்தங்களெல்லா மொருவி ஞானசம்பந்தப்பட்டுச் சத்தியஞானநந்தத்தைப் பெற்ற மௌனயோகிகள் நிறைவு நிலையைச் சொல்லவேண்டுங் காழித்துறைச்சாமியென்ற வினாவுக்கு விடை. ஞானிகளுடைய வுள்ளமொன்றையும் பற்று தாகாசம்போன்று நிற்கும், அவாள் சரீரம் ஏகபரிபூரண வானந்தமேலிட்ட பிரவாகமாய்நிற்கு மென்றவாறு. உள்ளமாகாயமென்றது பராசத்தியை. மெய்யானந்த வெள்ளமென்றது சுகப்பேற்றை. (இது அணைந்தோர் தன்மையையு மானந்தப்பேற்றையுங் கூறியது.) (க0)

இந்த நிராமய வந்தாதியின்கண் முன் சொல்லிப்போந்த சிந்தனை யதிகாரப்பிள்ளையட்டவணை குருமரபு திருமுகப்பாசுர முதலியவற்றின் கருத்தெல்லா மடங்கக் காண்பாயாக. (ஒன்றாய்முளைத்தெழுந் தெத்தனையோகவடுவிட்டு) என்னுங் கருத்தைப்பற்றி விவேகவுவமைகள் வருமாறு. மனமொன்று, மனத்தைத்தவிர ஆங்காரமாதிகளில்லை இந்தமனந் தானே-நசுரு-கூசுரு-க00அ - கசு - அ-டு-சு-ந என்கின்ற தத்துவங்களாயும் விரியும். இந்த மனத்தையே சீவனென்பதும், போதமென்பதும், உள்ளமென்பதும், விவேகமென்பதும், அறிவென்பதும், வெகுமுகத்தி லித்தனையும், அகமுகத்திற் சைதன்னியமென்பதும், பிரமமென்பதும், சிவமென்பதும், இத்தனையும், ஒரு புருடனைத்தானே நன்மையா னல்லவென்றும், தீமையாற் றீயனென்றும், இரண்டுமொத்த கருத்தான் ஞானியென்று வருவது போலும். சாமியம்,

"மனந்தானே தத்துவ மானதும்போனது
மனந்தானே சீவனு மாகுதவீசனு
மனந்தானே வித்தை மாறட்டமானது
மனந்தானே பின்னையு மாகுதபோதமே"—

"புத்தியாய்ப்பொறிகளாகிப் புலன்களாய்ப்பூதமாகிக்
கர்த்தனாய்க்காமமாகி குணங்களாய்க்காமியாகிப்
பெத்தனாய்முத்தனாகிப் பேறுவார்பேணநின்ற
சித்தனாய்நின்றதென்னே திருப்புலிவனத்துளானே"—

மேலாத்மா சடமென்பாரைப்பற்றி விபரீதவுரைகள் வருமாறு. ஆத்மா சடம் அசடம் பிறப்பிறப்படைவனென்பது சித்தாந்தமன்று. (யதார்த்தவாதி வெகுசனத்திரோதியென்றும்,)

"வையகத்திலுண்மைதன்னை வாய்திறக்கவஞ்சினே
னையவைத்ததென்கொலோ நமச்சிவாயநாதனே"—எ-ம்,

சகலகுணசம்பன்ன வேகுணவீன-என்பதுபோல, ஆத்மாவே பிடிபடாதேயானாற் சிவத்தைப் பிடிப்பேனென்பது அபத்தம். அத்துருவமாக்கை அருவமாத்மா. ஆதியாக்கை யனாதியாத்மா. பிரகாசமாக்கை யப்பிரகாசமாத்மா. இப்படி அனந்த சாமியமுண்டு,

"தன்னையருச்சிக்கத் தானிருந்தானே"—
"அறிவையறிவதுபொருளெனவருளியபெருமானே"—
"சீவனுஞ்சிவனும்வேறே திருப்புலிவனத்துளானே"—
"அறியுமறிவேசிவமுமாம்"—

"நல்லகுலத் திற்பிறந்து நல்லோரைச்சேர்ந் தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு-நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தைகலங் கற்கச்
சிவமென்ற நீயே சிவம்"—

"ஒன்பதுவாய்தலார்ந்த வூரினிலோரைந்தாய
துன்பமிலமைச்சரோடுஞ் சுகதுக்கத்தேவரோடு
முன்பினோடுறவரோடு முற்றுநீயிருந்ததென்னே
செம்பொனூர்மாடுநீடு திருப்புலிவனத்துளானே"—

"பல்லுயிராய்ப் பார்தொறு நின்றாய்போற்றி
பற்றியுலகை விடாதாய்போற்றி"—

இன்னருஞ் சமுசயமுண்டாறுற் சர்வக்கியானேத்தரத்திற் சமுசயநிவிர்த்தி கண்டுகொள்க. ஆதிமூலமென்றழைத்த யானைக்குமுன் வந்ததார்; தூணிலுமிருப்பன் றுரும்பிலுமிருப்பனென்ன வந்ததார்; துருபதைக்கு மாளாத்துகில் கொடுத்ததார்; அருச்சுனனுக்கு மெய்ஞ்ஞானம் போதித்ததார்; கல்லாலின்கீழ் சனகாதியருக்குப் போதித்ததார்; முப்புரதகனம்பண்ணி மூவரைக் காத்ததார்; மார்க்கண்டருக்காக வந்தவன்யார்; தேவர்களுக்கு ஞானம்போதித்ததார்; ஆகாசத்தி லாகாயபுருடனாய் நின்றவன்யார்; நான்கு முகத்தாலும் நான்கு வேதத்தைப் புகன்றவன்யார்; இந்த வதிட்டானத்தைப் பற்றிச் செய்வதெல்லாம் பராபரவத்துவே யென்றறிந்து அரிகரப்பிரமாதிகளென்னும் பிணக்கை யுள்ளபடி விடக்கடவை. இதற்குச் சாமியம்,

“மூலமென்றழைத்த முளைக்கொம்பியா னை
வருத்தந்தீர்ப்பான் வந்தவனெவ னோ
தூணிலுமிருப்பன் றுரும்பிலுமிருப் ப
னெனுமழுசொல்லுக் கெதிர்ந்தவனெவ னோ
துகிலுரிகாலைத் துருபதன்மகட் கு
மாளாத்துகிலாய் வருத்தினனெவ னோ
வருச்சுனர்க்காக வமரிடையிருந்தா ங்
குணர்மெய்ஞ்ஞான முரைத்தவனெவ னோ
வவனேபிரம மென்றறிமன்னே”—

“கல்லாலின்கீழ்க் கடவுளாகி ப்
பொல்லாஞானம் புரிந்தவனெவ னோ
மாமலைவில்லாய் வலியவர்புரங் க
ணீறெழவொருக்கி நின்றமூவரையு ஞ்
சேவடிநீழலிற் சேர்த்தவனெவ னோ
காலனைமாட்டிக் கவின்சிறுபால ன்
மரணந்தவிர்ப்பான் வந்தவனெவ னோ
வவனேபிரம மென்றறிமன்னே”—

“அதிதிதன்மைந்த ரலமருகாலை ப்
பிரமகீதையைப் பேசினனெவ னோ
சிதாகாயத்திற் றிருவுருத்தாங் கி
மறலியையுமுனிந்த வரதனெவ னோ

வரன்முறையுலகம் வயின்வயினுதிக் க
நான்முகத்திருந்து நான்மறையுரைத்த ள
னுபநிடதத்தி லொளித்தவனெவ ஜ
னவனேபிரம மென்றறிமனனே”—

தீக்ஷைவிபரம் வருமாறு : சமயம்—தீரத்துறத்தல் ; விசேடம்—பற்றறநிற்றல் ; நிருவாணஞ்—சிவன்றானாதல் ; அபிடேகம்—ஆனே மென்பதையுமறத்தல். பஞ்சகிருத்திய விபரம் வருமாறு : அநுக்கிரகம்-சோகம்பாவனை ; திரோபாவம்—முன் சிவனேயிருந்தோமென்பதை மறத்தல் ; சங்காரம்—குலகோத்திரவபிமானம், தேகாபிமானம், பசுசாத்திரவனுட்டிப்பு, இன்னதேசம், இன்னவருணம், இன்னான் சந்ததி, இன்னகிருத்திய மென்பதை யறவும்விடுத்தல் ; திதி—சற்சனசகவாசம், சிவோகமென்பதை நாடோறும் பயிறல் ; தோற்றம்—அண்டாண்டபகிரண்டம் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகர் தாமாய் நிற்றல் ; சிவகாருண்ணியம்-சிவாநுக்கிரகம், சிதேந்திரியபதிகரணம், சுவாநுபூதிகம், எண்குணம் இவையுடைத்தாதல் ; சவுசாதியாறும் வருமாறு : சவுசம்-உட்கரணசுத்தி புறக்கரணசுத்தி ; பற்கொம்பு—நிதானம் ; ஸ்நானம்-நாம் நிராமயமென்று மகாவாக்கிய சிரவணம்பண்ணல் ; அநுட்டானம்-நாமறிவென்பதை மறவாமை ; பூசை-நாமெங்குமிருக்குஞ் சைதன்னியமென்று தெட்சணாமூர்த்தியைத் தியானித்தல் ; போசனம்-விசுவத்தையெல்லாஞ் சாப்பிட்டுத் தான் மீதியாய்நிற்றல் ; திரிகரணசுத்தி வருமாறு : மனம், வாக்கு, காயம் நாம் சைதன்னியமென்று தேறலே மனோசுத்தி ; நாம் சைதன்னிய மென்பதற் கடையாளமாகச் சிவோகம் பாராட்டலே வாக்குசுத்தி ; நாம் சைதன்னியமென்பதை மறவாமல் அங்ககரந்நியாசங்களால் விளக்கலே காயசுத்தி ; இதற்குச் சாமியம்,

“மானிடராக்கை வடிவுசிவலிங்க
மானிடராக்கை வடிவுசதாசிவ
மானிடராக்கை வடிவுசிதம்பர
மானிடராக்கை வடிவுதிருக்கூத்தே”—

விபூதி, ருத்திராட்சம், செபம், சின்முத்திரை, சமாதி, நமஸ்காரம், கும்பிடு ஆக வேழுக்கும் விபரவம் ; விபூதி-பசுமலமாகிய பசுபோதத்தை நீறுக்கித் தரித்தல் ; ருத்திராட்சம்-சைதன்னியம் நாமென்பதற் கடையாளமாகச் சோகம்பாவித்தல்; செபம்-அவனேனென்னுமநுபவத்திநிற்றல்; சின்முத்திரை-சிவனுஞ் சீவனுமொன்றாதல் ; சமாதி-

நான் சைதன்னியமென்பதையுமறத்தல் ; கமலஸாரம்-நானும் நீயா ய்ப்போனோ மென்னுந்திடமுண்டாதல் ; கும்பிடு-துவிதங் கெட்டு அத்துவிதமாரோமென்னல் ; தலந்தீர்த்த மூர்த்திக்கு விபரம் : தல மென்றது தான் ; தீர்த்தமென்றது தன்றுதமபோதம் ; மூர்த்தியெ ன்றது சுபாவ சைதன்னியம் ; (ஆவிலிங்கபீடமா யமர்ந்த தேசிவமாய மே) என்றது மிக்கருத்தைப்பற்றி வந்தனவாம் ; திருக்கு-திரிசிய விபரம் : காணப்பட்டதெல்லா மாயையானபடியா லவை யனைத்துந் திரிசியம் ; காண்பது யாதொரு சைதன்னியமுண்டோ வதுவே திரு க்கு;வேதாகம மிரண்டுங்கருத்தொன்றே விரண்டோ வென்பதற்கு விபரம் : நொடித்தான் மலைவேறு கயிலாசம் வேறென்பாரும், சித ம்பரம் வேறு புண்டரீகபுரம் வேறென்பாருமில்லை ; அதுபோலும் இந்த வைதீகசைவமுங் கண்டுகொள்க. ஆகாசம்போ லாத்மா, சந்தி ரன்போ லாத்மபோதம், நட்சத்திரங்கள்போ லாத்மசத்திகள். பக லைப்போல சகலாவத்தை, இரவைப்போலக் கேவலாவத்தை, சூரிய னைப்போல ஞானம், பர்வம்போல பெந்தகாலம், அமாவாசியைப் போ லாத்மபோதம், ஞானத்திலடங்கிய முத்திகாலம், நாகலோகஞ்- சுழுத்தி, மத்தியலோகம்-சொப்பனம், சொர்க்கலோகஞ்-சாக்கிரம்,

"சத்தியமாதா பிதாக்கியானஞ் தர்மோபிராதா தயாசகா
சாந்தம்பத்தினி சமாபுத்திரா சட்வித மமபாந்தவா"—

யதார்த்தமே-மாதா, பிரக்கியானமே-பிதா, சிவதர்மங்களே-உட ப்பிறப்பு,தயவே-தோழன், கலியாண கிரியாணமிரண்டுந் தோன்றுத சாந்தமே-தாரம், பிரமாதி பிபீலிகாந்தத்துஞ் சைதன்னியமே யெ ன்று காணுஞ் சமபோதமே-சந்தானம். இந்தவாறு மெனக்கு பாந்த வ்வியமென்று உலகத்தை விடக்கடவன். ஞானி கன்மங்களை விடுவ தே சித்தாந்தம். அது யதார்த்தமோ அயதார்த்தமோ. அயதார்த்த மென்றே நீர் சொல்லில், வசனமுண்டாயிருப்பானேன் ? அபக்குவ ரைக் குறித்து. அவைகள் வருமாறு :

"வில்வக்குடலை யெடுக்காமல்
வீணுக்குடலை யெடுத்தேனே"—எ-ம்,

"வில்வக்குருகாதல் கொம்பாதல்கொம்புதிர்ந்துவீழ்ந்த
சருகாதல் மண்ணுதல் சாத்து"—

என்றும், முக்கோடியேகாதசி, காசி, பிரையாகை, காவேரி, ரா மேஸ்வரம் என்றும் நினைக்குந் துவிதசித்தப் பிரமையொழிந்து, அத் துவிதசித்தம் பிறக்கக்கட்டிய கட்டெனவறிக ;

"ஆரணவுருவமாகி யம்பரக்கோயிற்றூறு
நாரணன்பிரமன்காணு நட்டநீசெய்தென்னே
காரணமுயிரேயென்னக் கண்டவர்காணுதேங்கச்
சீரணிமாடமோங்குந் திருப்புலிவனத்துளானே"—

அத்துவிதம் இரண்டல்ல. துவிதமே இரண்டு. நீர் சொன்ன அத்துவிதத்துக் கருத்த மிதுவல்ல. இரண்டின்மையாயிருக்கும். இரண்டின்மையென்ப தொன்றோ? ஒன்றுமல்ல. இரண்டோ? இரண்டுமல்ல. பின்னைத்தா னெவ்வழிவிடுவாய் சண்டாளா! மூர்க்கனை நேயம்பற்றிச் சாதிக்கிறையோ! (மூர்க்கனுக்கு வாழ்க்கைப்பட்டால் முன்னும்பின்னுங் குற்றம்) என்பதுபோலாயினை. அத்துவித சூரியனெழுந்தானென்னில், அதற்கருத்தம் துவிதசூரியன் வந்தாலும்பொய்சொல்லேனென்னு மாற்றம் உனக்கடாவோ,

"ஏகமே வாத்துவித"—

மென்னுஞ் சுருதிசாரத்தையு மறந்தாயாயினை,

"அத்துவிதத்துக் கருத்தம்பலவென்னுஞ்
சிற்றறிவுகொண்டு சிலகீழ்"—

(எ-து) கொஞ்ச புத்தியைக்கொண்டு கீழ்ச்சாதிகள் தாதமார்க்கத்தைத் தழுவி யத்துவிதத்துக் கருத்தமொன்றுமல்ல, விரண்டுமல்ல, உபயமுமல்லவென்று கூறுந் துவித பாசண்டர்களென்பதாம். வேதச்சொல்லை நம்பாதவன் நீசனென்று வியாச சூத்திரத்திற் சொல்லும். தேவதத்தன் நிரியாணமானுனே? இல்லை. கலியாணமானுனே? அதுவுமில்லை. அமங்கலியோ? அன்று. சுமங்கலியோ? அன்று. கன்னிகையோ? அதுவுமன்று. ஆனுற் குதர்க்கமாக யாதுமன்றென்னில், நீபெரும்பாவி! நாட்டிலுள்ள சாவுனக்கெய்திற் குற்றமில்லை! வியாழவட்டங் காத்திருந்தால் உபதேசிப்பனென்னில் ஒரு பூனை கயிலாசத்துக்குப்போகிற கொக்கெலி கோழிக்கூட்டத்தைச் சம்பாடனம்பண்ணிக் கூட்டிக்கொண்டுபோய் ஒருபாழுங் கோவிலிலே யிருக்கச்சொல்லி உங்கள் போதமடங்கவில்லையே யென்று பன்னிரண்டுவருடம் ஒன்றொன்றாய் அனுக்கிரகம்பண்ணியகதை யுனக்கேதகும். ஆனுற்சுவாமி? நீர்சொன்ன புத்தியைக்கேட்கிறேன். அத்துவிதத்துக் கருத்தஞ் சொல்வாயாக வென்பாயேல், சாமியம்,

"அத்துவிதமேகமே யாங்கிரண்டின்மையெனி
லத்துவித மன்றேவது"—

(எ-து) அத்துவிதம் ஏகமே. ஆருக்கேகம்? பஞ்சபாசங்களை நீங்கிய சிவனுக்குஞ் சிவனுக்கும். அஃதர்த்தமன்றிரண்டற்றுப் பூவு மணமும் போலவென்னில், போதச்சுவானமே இலங்கையிலே யிரு ம்புதிருடாதே உன்சத்த மென்றைக் கடைக்குமோ இரண்டின்மை யென்று சொல்லியது மஃதேயாம். சாமியம்,

"மாயையாலிரண்டுபட்டுன் மலரடிபுகலிறந்தேன்
றூயமெய்ஞ்ஞானத்தாலே துறந்திடினேகமாகுந்
தாயினுமினியனாகித் தடுத்தெனையாண்டுகொண்ட
சேயமாநதிதென்பாங்கார் திருப்புலிவனத்துளானே"—

இப்படி அனந்தம் சாமியமுண்டு. நதி-நத-உவமைகள் வருமாறு: குடக்கிலிருந்து குணக்கோடியநதியே ஆத்மா. நதித்தடைகள்-ஐம்புல ன்கள். அச்சிறை நீங்க (நதீஞஞ்சாகரோகதி.) சாகரஞ் சிவம், நதம் குணக்கிருந்து குடக்கோடினுபின் குணக்கோடி சாகரோகதி. விளக் குவமைவருமாறு: விளக்குப்போலும்-ஆத்மா. தகளிபோலும்-சரீரம். நெய்போலும் - பிராரத்தம். திரிபோலுஞ் - சூக்குமசரீரம். காற்றுப் போலுஞ்-சஞ்சிதம். வீடுபோலும்-ஆகாமியம். அவிகிறதுபோலும்-நி ரியாணம். தாரகசத்தியிலே முன்னிருந்தவண்ண மொடுங்குவது போலும்-மோட்சம். இப்படி விட்டுணு வாகமங்களிலும் சிவாகமங் களினுங் காண்க. சாமியம்,

"கண்ணொளிகதிரின்மாட்டுங் கடவெளிவிசும்பின்மாட்டு
மண்ணுறுவிளக்கின்சோதி தாரகசத்திமாட்டு
நண்ணுதன்மானப்பொல்லா நாயினேன்வந்தடைந்தேன்
றெண்ணிலாவெறிக்குஞ்சென்னித் திருப்புலிவனத்து
ளானே"—

இந்த விளக்குவமைப்படி விஷ்ணு வாக்கியங்களினுஞ் சிவ வாக்கியங்களினுங் காண்க.

மாபட்டவணை-முற்றிற்று.

---

புண்ணுடலை நீப்பேனோ பொன்னுருத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ-வெண்ணுடை
வஞ்செழுத்தி னுண்மை யறிவேனோ வாங்கநனுட் [ய
பிஞ்செழுத்தைப் பின்னிடு வேனோ.

---

சத்தியஞானபோதஞ் சாற்றும்பொருள்விளக்கஞ்
சுத்தசித்தாந்தக்காட்சி சூனியதேசமாலை
மெத்தஞானப்ரகாச மெய்ஞ்ஞானவிளக்கமேலா
மத்தனத்துவிதவெண்பா வதிரகசியமுமன்றே. (௧)

சிவாகமக்கச்சிமாலை செழுங்கர்ணாமிர்தமன்பர்
தவாகரச்சுருதிசாரஞ் சான்றசிந்தனையின்வெண்பா
வவாவறுமிராமயம்பின் னறுபத்துநாலுசங்கை
யுவாவனதசவழக்கோ டியர்குருமரபுமாலோ. (௨)

அநுபவசங்கிரிக்கை யவிர்முகப்பாசுரம்பின்
மனமயலகன்றபிள்ளை யட்டணைமரபினோடிந்
தினகரனுதயமென்னத் திருவுளமகிழ்ந்துரைத்தான்
புனலிடையமிழாக்காழிப் புரிவருபோதவள்ளல். (௩)

இருபதிவ்வுண்மைநூலு மியம்பியஞானவள்ளல்
திருவடிதொழுதுபோற்றித் தெளிதரத்தேர்ந்தமேலோர்
மருவுதம்பவங்கணீங்கி மாறாப்பேரின்பவெள்ளம்
பெருகியசுவானுபூதி பெற்றுவீற்றிருப்பர்தாமே. (௪)

## வள்ளலார்சாத்திரம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரப்

## பாக்கள் முதற்குறிப்பின்

## அகராதி.

# அகராதி.

# அகராதி.

# அகராதி.

# அகராதி.

அகராதி - முற்றிற்று.

சிவமயம்.

# சாத்திரங்களின் அட்டவணை.



அட்டவணை - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ | க௬ | தீயிரும்பொன்ன | தீயிரும்பென்ன |
| ,, | ௩0 | கற்பசத்தும்பே | கற்பகத்தும்மே |
| ௩ | க௫ | மலவெனை | மலமெனை |
| ,, | உ௭ | புட்பொலும் | புட்போலும் |
| ௪ | ௩0 | சமயக்குறை | சமயச்குறை |
| ௬ | க௬ | விவகாரக்குறி | யவிகாரக்குறி |
| ௮ | உ | கருவியிற்சேருய்து | கருவியிற்சேருய்ந்து |
| க௪ | க௮ | ருதித்யின் | ருத்தியின் |
| க௬ | ௩௫ | நாதபோற்றி | நாதாபோற்றி |
| க௭ | க௫ | காருண்ணியம் | காருண்ணியம் |
| உஉ | ௬ | பற்றித்தாவி | பற்றியாவி |
| உ௫ | உ௬ | தங்சிய | தங்கிய |
| உ௯ | க௮ | தால்லுய | தால்விய |
| ௩௩ | உ௯ | யவத்தயர் | பவத்தயர் |
| ௪௪ | க0 | வினறவனை | வைறவனை |
| ,, | க௪ | பிருயாமல் | பிரியாமய் |
| ௪௫ | உ௬ | விம்மிதந்தோய் | விம்மிதங்தோய் |
| ௩0 | ௯ | அனந்தகோடு | அனந்தகோடி |
| ௬0 | க௪ | லசம்பு | வசம்பு |
| ௬௪ | ௬ | விட்டதன்றி | விட்டதன்றி |
| ௮௬ | க0 | சந்ரதிரே | சந்திரரே |
| ௯க | க௯ | இவர்கௌளல் | இவர்கௌனல் |
| க௭௬ | ௩0 | வேதமுஞ்லும் | வேதமுஞ்சொல்லும் |

பிழைதிருத்தம்—முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.